# சிரிபாதராயர் கீர்த்தனைகள்

(கன்னட மூலம் மற்றும் மொழிபெயர்ப்பு)

"THIS BOOK IS PUBLISHED WITH THE FINANCIAL ASSITANCE OF TIRUMALAI TIRUPATI DEVASTHANAMS UNDER THEIR SCHEME AID TO PUBLISH RELIGIOUS BOOKS"


பேராசிரியர் **இரா. நடராஜன்,** எம்.ஏ.எம்,லிட்

*தமிழ்த்துறைத் தலைவர் (ஓய்வு)*

*கோலார் தங்கவயல், முதனிலைக் கல்லூரி*



**விற்பனை உரிமை**



**பூவழகி பதிப்பகம்**

75, (29/2) சீனிவாசப் பெருமாள் சந்நிதி முதல் தெரு,

இராயப்பேட்டை, சென்னை – 600 014.

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| *tTitle of the Book* | : | **SRIPADARAYAR KEERTHANIKAL** |
| *Language* | : | Tamil |
| *Author* | : | **PROF. R. NATARAJAN** |
| *Date of Birth* | : | 6th June 1936 |
| *First Edition* | : | September, 2000 |
| *Copyright Holder* | : | Author |
| *Paper used* | : | 13.7 kg. |
| *Printing Type used* | : | 12 pt. |
| *Size of the Book* | : | 14 x 22 cms. |
| *No. of Pages* | : | I - VI + 1 to 233 = 239 |
| *Price* | : | **Rs. 50.00** |
| *No. of Copies* | : | 1000 |
| *Laset Type Setting* | : | **Vighneswar Graphics**<br>142, Big Street, Chennai - 5.<br>Ph : 851 0852 |
| *Publisher* | : | **Thiru N. Nagarajan,** M.A.,<br>A38, Bharath Nagar, BEML.,<br>Kolar Gold Fields, Pin : 563 715. |
| *Printer* | : | **Moovendhar Achagam**<br>75, (29/2) Srinivasa Perumal Sannathi 1st St,<br>Royapettah, Chennai - 600 014.<br>Phone : 826 7189 |

# ஆசியுரை

Sri Gopinatho Vijayathe

**Srimathparamahamsa parivrajakacharyathvadhyancka guna sampanna padavakyapramana sarvathantra swathantra srimadvaisnava sidhantha prathistapanacharya Sri Hayavadana Rangavitalathmaka Sri Sri Gopinathadivya Sripadapadmaradhakarada Sir Sripadaraja Varavidyasimhasanadeesha Sri 108 Sri Sathyanidhitheertha Sripadangalavara Karakamala sanjatharada Sri 108 sri Vijayanidhi Theertha Sripadangalavara Varakumararad**

**SRI 108 SRI VIJNANANIDHI THEERTHA SRIPADANGALAVARU**

கோலார் தங்கவயலில் வாழ்ந்துவரும் திரு. ஆர். நடராசன் கன்னட மொழியைக் கற்று, கன்னட இலக்கியம் படைத்த பல ஞானிகளில் ஒருவரான சிரிபாதராயர் அருளிய கீர்த்தனைகளைக் கன்னட இலக்கியம் அறியாத தமிழ் அறிஞர்களுக்கு உதவும் வகையில் திரு. சிரிபாதராயர் இயற்றிய தேவர் நாமாக்களைத் தமிழில் மொழி பெயர்த்துத் தமிழர்களுக்கும் கன்னடர்களுக்கும் உதவி புரிந்துள்ளார். சிரிபாதராயரின் வரலாற்றைத் தமிழில் எழுதியதோடல்லாமல், தேவர் நாமாக்களின் நுண்பொருளைத் தமிழில் விளக்கியிருப்பது போற்றத் தக்கது. கன்னடரும் தமிழரும் இந்நூலை ஓதி திரு. சிரிபாதராயரின் அந்தரங்கத்தில் இருக்கும் ஹயவதன ரங்கவிடல கோபிநாத தேவரின் கிருபைக்குப் பாத்திரரானால் இந்நூலை எழுதியவரின் உழைப்பு பயனாயிற்று என்று எண்ணுகின்றேன். இந்நூலை எழுதியவரால் இன்னும் இத்தகைய சேவைகள் பெருகட்டும் என்று நமது ஆராதனா மூர்த்தியை வேண்டுகின்றேன்.

**ஸ்ரீ நாராயண ஸ்மராணக்களு**
**ஸ்ரீஸ்ரீ விஞ்ஞானநிதி தீர்த்த**
**ஸ்ரீ பாதங்களவரு**
**முள்பாகலு**

25.7.2000

# முன்னுரை

தமிழ் நாட்டில் ஆழ்வார்கள் திருமால் பக்தியில் சிறந்து விளங்குவதைப் போன்று கருநாடக நாட்டில் சிறந்த விளங்குபவர்கள் தாசர்கள் எனப் பெயரிய வைணவ அடியார்கள். முதல் ஆழ்வார்கள் மூவரைப் போலக் கன்னடதாச சாகித்யத்தில் சிறந்து விளங்குபவர்கள் நரஅரி தீர்த்தர், வாதிராச சுவாமிகள், சிரிபாதராயர் ஆகியோர். பெரும் பக்தராகவும், கவியாகவும், தத்துவ ஞானியாகவும், யோகியாகவும் வாழ்வாங்கு வாழ்ந்து வாழ்வியலுக்குரிய அறங்களை அருளிய சிரிபாதராயரின் கீர்த்தனைகளை, மொழிபெயர்த்து வெளியிட எண்ணினேன். மொழிபெயர்ப்பை உரைநடையாக எழுதாமல் தமிழிலும் கீர்த்தனைப் பாடல்களாக எழுதினால் நலமாகும் என்று எண்ணி அவ்வாறே செய்துள்ளேன்.

ஒவ்வொரு மூலக் கீர்த்தனைக்கும் அதன் இராக தாளங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. மூலக் கீர்த்தனையில் அமைந்துள்ள சீர் களுக்குச் சமமான சீர்களையே மொழிபெயர்ப்பிலும் அமைத்துள்ளதால் இசை அறிஞர்கள் அதே இராகத்தில் தமிழ்ப் பாடல்களைப் பாட இயலும். இசையறிஞர்கள் உரிய உச்சரிப்புடன் பாட வேண்டும் என்பதற்காகக் கன்னட மூலத்தை எழுதும்போது பல இடங்களில் கிரந்த எழுத்துகளைப் பயன்படுத்தி இருக்கின்றேன். கீர்த்தனைகளில் பல திருமலையின் சிறப்பையும், வேங்கடேசுவரரின் அருளையும் நன்கு விளக்குகின்றன. சுருக்கமான முறையில் சிரிபாதராயரின் வரலாற்றையும் எழுதியுள்ளேன்.

இந்நூல் அச்சாவதற்குத் பொருளுதவி புரிந்த திருமலை திருப்பதி தேவத்தானத்தார்க்கு என் நன்றி உரியது. இந்நூற்கு ஆசியுரை வழங்கிய முள்பாகல் ஸ்ரீசிரிபாதராஜ மடத்தின் அதிபர் ஸ்ரீ விஞ்ஞான நிதி தீர்த்த ஸ்ரீ பாதங்கள் அவர்களின் பொன்னார் திருவடிகளைத் தலைமேற்கொண்டு வணங்குகின்றேன்.

என் கன்னடக் கல்வியின் தொடக்கக்கால ஆசிரியர்களாகிய பேராசிரியர் ஆ. இராமரெட்டி அவர்களுக்கும், பேராசிரியர் ஆ.பொ. பசவராஜ் அவர்களுக்கும் நெஞ்சார்ந்த நன்றி. பேராசிரியர் திரு. நரசிம்ம கௌடா அவர்கள், சிரிபாதராயர் கீர்த்தனைகளின் நுண்பொருளை எனக்கு விளக்கியவர். அவர் புரிந்த பேருதவி நெஞ்சிருக்கும்வரை நினைவில் இருக்கும். இலக்கியப் பணியாற்ற இல்லத்தில் துணைநின்ற என் குடும்பத்தார்க்கும், நண்பர்களுக்கும் நன்றி. இந்நூலை உரிய காலத்திற்குள் நன்கு அச்சிட்டு உதவிய மூவேந்தர் அச்சகத்தார்க்கு என் நன்றி உரியது.

கோலார் தங்கவயல்
25.8.2000

**இரா. நடராசன்**



பேராசிரியர் இரா. நடராசனார் **6.6.1936**இல் தஞ்சை மாவட்டத்திலுள்ள பாண்டூரில் திரு. பி.வி. இராமநாத அய்யருக்கும் ஜானகி அம்மையாருக்கும் பிறந்தவர். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் சான்றோரிடம் கல்வி பயின்று எம்.ஏ., எம்.லிட்., பட்டங்களைப் பெற்றார். பண்டை இலக்கியங்களை இதயத்தில் இருத்தியிருக்கும் ஒரு பெருமகனார். கற்ற கல்வியை மற்றவர்க்கு அளிப்பதில் ஒளி வீசும் மணமலர். காய்தல் உவத்தல் இல்லாத ஆய்வாளர். பன்மொழிப் புலமை பெற்ற நயத்தகு நண்பர். மொழிபெயர்ப்புலகில் புதுப் பொலிவுடன் ஒளி வீசுபவர். ஐம்பதிற்கு மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகளையும் ஆராய்ச்சி நூல்களையும் (கன்னடத் தமிழ்க் கவிஞர்கள் – ஓர் ஒப்பீடு, மணிமேகலைக் காப்பிய மாந்தர், குவெம்புவின் சிறுகதைகள், கனகதாசர் கீர்த்தனைகள், Manimekalai As an Epic) தமிழ் அன்னைக்குப் படைத்து அழகு கூட்டியவர். முத்தமிழ்ப் புலமை முறையாக உடையவர். இத்தரணியில் இவர் பணி நிலைத்து நிற்கட்டும்.

**பேராசிரியர் டாக்டர் ஆ. சுதாகர்,**
B.Sc., M.A., M.Phil., Ph.D.,
*இணைப் பேராசிரியர்*
*ஒப்பியல் துறை*
*திராவிடப் பல்கலைக் கழகம்*
*குப்பம், ஆந்திர மாநிலம்.*

# சிரிபாதராயர் கீர்த்தனைகள்

**இராகம் :** கல்யாணி **தாளம் :** ஜம்பெ தாளம்

## பல்லவி

அகடகட சம்சாராவனு நெச்சி கெட பாய்ட

## அனுபல்லவி

விகடதலி மானவரு கெட்ட ரெல்லரு நிஜ.

## சரணம்

முன்ன நரகா சுரனு படிது சிந்தாமணிய
தன்ன மனெயலி தந்து நில்லிசி நிருபர
கன்னெயர ஷோடச அஸ்ரவனெ தந்தாத
ஹெண்ணானொப்பள னொய் தில்லவோ நோடொ. 1

சாவிர கர படெத கார்த்தவீர்யார்ஜுனனு
பூவலய தொள கொப்பனே வீரனெனிசி
ராவணன செரெயிட்டு காமதேனுவ பயசி
சாவாக ஏனு கொண்டொய்தனோ நோடொ 2

கௌரவனு தரெயெல்ல தனகாபேகெந்து
வீரபாண்டவ ரொடனெ கதன்மாடி
மாரிய வசவெய்தி ஹோஹக தன்னொடனெ
சஷ்டியாரெ பூமிய ஒய்தில்லவொ நோடொ. 3

வர யஜ்ஞகள மாடி நகுஷ சுரபதியெனிசி
பரம முனிகளக் கைலெ தண்டிகெய ஹொரிசி
உரக ஜனுமவனைதி ஹோஹக தன்னொடனெ
சுரலோகத் தொளகேன கொண்ஹொய்த நோடொ 4

துங்ககுண த்ருவ விபீஷண ஹனுமாதிகளு
மங்களாத்மக ஹரியனரிது பஜிசி
பங்க வில்லதெ ஹொரெதரை சகல பாக்யவனு
ரங்க விடலரேயன நெரே நம்பிரோ. 5

# 1. உலக இன்பத்தை விரும்பிக் கெடாதே

**இராகம் :** கல்யாணி **தாளம் :** ஜம்பெ தாளம்

### பல்லவி

ஆரவார உலகை நம்பிக் கெட வேண்டா

### பல்லவி

கோணலாகி மனிதர்கள் கெட்டனர் உண்மை.

### சரணம்

முன்னே நரகாசுரன் சிந்தா மணியைத்
தன்வீட்டில் தந்து நிறுத்தி அரசர்களின்
கன்னியர் பதினாறாயிரவரைக் கொண்டு வந்தும்
பெண்ணொருத்தி அவனைக் கொன்றாளே காண்பாய்! 1

ஆயிரம் கை பெற்ற கார்த்தவீர் யார்ச்சுனன்
பூவுலகில் தானே வீரனென் றெண்ணி
இராவணனைச் சிறையிலிட்டுக் காமதேனுவை விரும்பி
இறக்கும் போதெதைக் கொண்டு சென்றான் காண்பாய் 2.

கௌரவன் நிலம் முழுவதும் தன்னதேயாக வேண்டுமென்று
வீர பாண்டவ ருடன் போராடி
மரணத்தின் வசப்பட்டுச் செல்கையில் தன்னுடன்
சிறிதளவு நிலமும் எடுத்துச் செல்லவில்லை காண்பாய். 3.

வரம்தரும் யாகங்கள் செய்து நகுடன் தேவர்க் கரசனாகிப்
பரம முனிவர்களின் கைகளில் பல்லக்கைத் தூக்கச் செய்து
பாம்புப் பிறவி அடைகையில் தன்னுடன்
தேவவுலகிருந் தெதைக்கொண்டு சென்றான் காண்பாய். 4.

மேன்மைக்குண துருவன் வீடணன் அனுமன் ஆதியோர்
மங்கல அரியை அறிந்து துதித்துக்
குறைவின்றி எல்லாப் பேறுகளையும் பெற்றனர்
அரங்க விட்டலனை முற்றும் நம்புவீர். 5.

## சுளாதி

**இராகம் :** நாட்டை **தாளம் :** துருவ தாளம்

அன்னந்த காலதல்லிநின்ன நாளறியதெ பாவகளல்லி
பந்தெனொ
அன்னந்த காலதல்லி நின்னவனெனிசதெ மூருகனா தெனொ
அன்னந்த காலதல்லி நின்ன சரணரதியில்லதெ நொந்தெனொ
அன்னந்த காலதல்லி அதாவ புண்யதிந்த பந்து இந்து
நின்னவனெனிசிதெ அதாவ புண்யதிந்த லென்னமன
நின்னல்லெ ரகிதோ நோய தந்தெ
என்ன பொரெது பாலிசொ தீனநாத ஸ்ரீரங்க விடல. 1.

## மட்யதாளம்

அன்னக பயத்ரவிண தேஹ நிமித்த
அன்னக சோகாசய மாரி
அன்னக லோப அசுபத லாப
அன்னக நன்னது நானெம்ப பஹம்பிகே
அவன்னக நின்ன சரணரதி தொரகொள்ளதொ
உன்னந்த குணபரிபூர்ண ரங்கவிடல. 2.

## திரிபுடை தாளம்

தொளலி சம்சார சக்ரதலி சிலுகி
பளலித ஜீவகணகெ சந்தத
நளின நாபா நின்ன பதாம்போஜ
நெளலு நெம்முகெ யல்லவெ
ஔவெ ஜகதொளு சகல சுகங்களு
களவளி சுவரு ரங்க விடல. 3

## ரூபக தாளம்

நீ கருணியெந்து நின்ன நா மொரெஹொக்கெ
நீ கரிசதெ என்ன ஸ்ரீக்ாந்த காயய்ய
நின்னவனெம்பெ நானு மத்தவன்யவனரியெனு
கந்தர்ப்ப னெந்தெந்து காடதந்தெ மாடொ
வ்ருந்தார காதீச ரங்கவிடல. 4

## ஜம்பெ தாளம்

பரர பாகிலு காயிது ஹோயிதீ சம்சார
பரர குணகள துதிசி ஹோயிதீ நாலகெ
பரர ஹாரி ஹாரி ஹோயித்தித்தென்ன மன
பரம காருணிகனெ நமோ ரங்கவிடலய்ய. 5

## அட்ட தாளம்

என்ன மன ஹரி நின்ன சரணதொளொம்மெ
எரகது துரித துடிக்ருதவெந்து சைரிபெனொ
நந்த நந்தன முகுந்த எந்து சைரிபெனொ
மந்தஹாச கோவிந்த எந்து சைரிபெனொ
என்ன மனவனு நின்ன சரணதொளொம்மெ
எரகிசொ ரங்கவிடல எந்து சைரிபெனொ. 6

## திரிபுடை தாளம்

வ்ரத ஜபதப யாகங்கள மாடுவெனெந்து
மனெமனெ தப்பதெ திருகி பளலிதெ
பெலெக ஹோகது சரகு சடிலதய்யா ஹரியெ

கொம்புவரில்ல பெலெகெ ஹோகது சரகு
சடிலு வந்தெ மரெகெ தெகெது நின்ன
சரணதடியலிட்டு காயொ ரங்கவிடல. 7.

## ஏக தாளம்

பவவெம்பட வியல்லி பயகொளதலி சிக்கி
தாபத்ரயவெம்ப தாவானல தப்த நரரிகெ
ஹரி நின்ன நாமாச்ரயவல்லதெ மத்துண்டெ
மனுலோக தல்லுண்டெ தனுபரிண வல்லப
அம்ருத ஒசருவ பதபதுமத
நெளல நெலெவனெயலி என்னனிரிசொ ரங்கவிடல. 8.

## ஜதெ

பெந்த சம்சாரதி பந்து நொந்து பளலிதெனய்ய
நந்த நந்தன காயோ ரங்கவிடல.

# 2. பிறவிகள் எடுத்தேன்

## சுளாதி

**இராகம் :** நாட்டை **தாளம்:** துருவ தாளம்

எண்ணில்லாக் காலம் உன்னைநான்
அறியாமல் பிறவிகளில் வந்தேனோ
எண்ணில்லாக் காலம் நின்னவன் என்னாமல்
மூர்க்கனா னேனோ
எண்ணில்லாக் காலம் நின்திருவடிகளில்
அன்பு வைக்காமல் வருந்தினேனோ
எண்ணிலாக் காலம் என்ன புண்ணியத்திலோ வந்தின்று
நின்னவன் என்றெண்ணி என்ன புண்ணியத் தாலோமனம்
நின்னிடம் படிந்தது துன்புறாமல்
என்னை ஆதரித்துக் காப்பாய் ஏழைகளின்
தலைவா அரங்க விட்டலா. 1

## மட்ய தாளம்

உடலைப் பற்றிய அச்சம் இருக்கும் வரையிலும்
உடலுக் காகிச் சோகம் இருக்கும் வரையிலும்
உடலால் அசுபமாம் உலோபம் இருக்கும் வரையிலும்
உடலால் நானெனதாம் அகங்காரம் இருக்கும் வரையிலும்
திருவடியில் ஈடுபடும் பேறு பெற்கிய லாதோ
உன்னத குணங்கள் நிறைந்த அரங்க விட்டலா. 2

## திரிபுடை தாளம்

சுழலும் இல்வாழ்க்கைச் சக்கரத்தில் சிக்கி
வாடிய உயிர்க்கணங்களுக்கு நாடொறும்
தாமரை உந்தியனே நின்திருவடித் தாமரை
நிழலே அடைக்கலம் ஆகும் அன்றோ
உள்ளதா உலகில் எல்லா இன்பங்களும்
கொடுத்துக் காப்பார் அரங்க விட்டலா. 3

## ரூபக தாளம்

அருளாளன் நீயென் றுன்னைநான் சரணடைந்தேன்
நீக்காமல் திருமகள் மணாளனே காப்பாய்
நினக்குரியன் என்பேன் அன்னியரை அறியேன்
நினக்கே உரியவன் ஆனேன் என்பேன்
காமன்எனைத் துன்புறுத்தா திருக்கச் செய்வாய்
தேவர்களின் தலைவனே அரங்க விட்டலா. 4

## ஜம்பெ தாளம்

பிறரது வாயிலைக் காத்தே கழிந்தது வாழ்க்கை
பிறரது குணங்களைத் துதித்தே நலிந்தது நாக்கு
பிறரைப் பற்றிய எண்ணங்களில் பிறந்த தென்மனம்
அறந்திகழ் கருணாகரனே வணக்கம் அரங்க விட்டலா. 5

## அட்ட தாளம்

எனதுமனம் அரியே நின் திருவடிகளில் ஒருமுறை
படியாது கெட்ட வினையென்று சொல்வேனா

நந்தன் மகனே முகுந்த னென்று சொல்வேனோ
புன்னகையன் கோவிந்தனென்று சொல்வேனோ
என்மனத்தை நினது திருவடிகளில் ஒருமுறை
படியச்செய் அரங்க விட்டலா வென்று சொல்வேனோ. 6.

## திரிபுடை தாளம்

விரதம் செபதவம் யாகங்கள் செய்வே னென்று
வீடுகள் தோறும் தவறாது சுழன்று திரிந்தேன்
விலைக்கு விற்காத சரக்கு செலவாகா தரியே
கொள்பவ ரின்றிவிலைபோகாது சரக்கென அறிவாய்
செலவாகும் வண்ணம் எடுத்து நினது நல்ல
திருவடிகளில் வைத்துக் காப்பாய் அரங்க விட்டலா. 7

## ஏக தாளம்

பிறவியெனும் காட்டில் அச்சமெனும் குளத்தில் சிக்கி
மூவேடனைக் காட்டுத் தீயில் அகப்பட்ட மனிதர்க்
கரியேநின் பெயரன்றி வேறான அடைக்கலம் உண்டோ
மனுவுலகில் உண்டோ உடற்பிணி போக்கும் வல்லவன்
அமிர்தத்தைப் போன்ற நினது பாதத் தாமரையின்
நிழலில் என்னை வைப்பாய் அரங்க விட்டலா. 8

## இணை

வெந்த வாழ்வில் வந்து நொந்து பழகினே னையா
நந்தனின் ம்கனே காப்பாய் அரங்க விட்டலா.



**இராகம்:** மத்தியமாவதி **தாளம்:** ஏகதாளம்

## பல்லவி

இக்கோ நோடெ ரங்கநாதன சிக்கபாதவ.

## அனுபல்லவி

சிக்கிதெ ஸ்ரீலக்ஷ்மீ பதிய திவ்யபாதவ.

## சரணம்

சங்கு சக்ர கதாபத்ம அங்கித பாதவ
அங்குச குலித த்வஜரேகா அங்கித பாதவ
பங்கஜாசனன ஹ்ருயதல்லி நலியுவ பாதவ
சங்கட ஹரண வெங்கடேசன திவ்ய பாதவ. 1.

லலனெலக்ஷ்மீ யங்கதல்லி நலியுவ பாதவ
ஜலஜாசனன அபீஷ்டவெல்ல சலிசுவ பாதவ
மல்லர கெலிது கம்சாசுரன கொந்த பாதவ
பலியமெட்டி பாகீரதிய படெத பாதவ. 2.

பண்டெய பாலெய மாடித உத்தண்ட பாதவ
பண்டிலித்த சகடாசுரன ஒத்த பாதவ
அண்டஜ ஹனுமர புஜதொளிப்புவ பாதவ
கண்டேவெ ஸ்ரீரங்கவிட்டலன திவ்ய பாதவ 3.

# 3. காண்பாய் அரங்கநாதனின் சிறிய திருவடிகளை

**இராகம் :** மத்தியமாவதி **தாளம் :** ஏகதாளம்

### பல்லவி

இங்கே காண்பாய் அரங்கநாதனின் திவ்விய திருவடிகளை!

### அனுபல்லவி

சிக்கின திருமகள் நாயகனின் திவ்விய திருவடிகள்.

### சரணம்

சங்குசக்கரம் கதைபடிந்த திருவடியை
அங்குசம் குலிசம் கொடிபடிந்த திருவடியைப்
பங்கய ஆசனனின் இதயத்திலாடும் திருவடியைச்
சங்கடம்தவிர் வேங்கடவன் திவ்விய திருவடியை. 1

திருமகள் அங்கத்தில் விளையாடும் திருவடியைப்
பரமனின் இச்சைகளை நிறைவேற்றும் திருவடியை
மல்லரை வென்று கஞ்சனைக் கொன்ற திருவடியை
மகாபலிமீது வைத்துக் கங்கையைப் பெற்ற திருவடியை. 2

கல்லைக் கன்னியாக்கிய உயர்ந்த திருவடியை
வண்டியில் இருந்த சகடனை உதைத்த திருவடியைக்
கருட அனுமரின் தோள்களில் அமரும் திருவடியைத்
திருவரங்க விட்டலனின் திவ்விய திருவடியை. 3

**இராகம் : சாவேரி** **தாளம் : ஆதி தாளம்.**

## பல்லவி

இட்ஹாங்கெ இருவெனோ ஹரியே என்ன தொரெயே.

## அனுபல்லவி

ச்ருஷ்டி வந்தித பாதபதும ஸ்ரீஹரியே.

## சரணம்

சண்ண சால்யோதன பெண்ணெ காசித துப்ப
சின்னத ஹரிவாணதலி போஜன
கன்ன மஹிம நின்ன கருண தப்பித ம்யாலெக
தன்ன காணதெ பாய்பிடுசுவி ஹரியே. 1

கெம்பிலி பொளெவ பீதாம்பர உடிசுவ
சொம்பினஞ்சின சாலுஹாதி சுவியோ
கபில ஹரே நின்ன க்ருபெயு தப்பிதம்யாலெ
கபர்தக கௌபீனவு தொரெயதோ ஹரியே. 2

சந்த்ரசாலேலி சந்த்ரகிரண தந்தொப்புவ
சந்தத மஞ்சதொள் மலகிசுவி
மந்தரோத்தர நின்ன மமதெ தப்பலு தர்ம
மந்திர தொளு தோள்தலகிம்பு ஹரியே. 3

நரயானதொளு க்ஷண நரவர னெனிசுவி
வரசத்ர சாமர ஹாகிசுவி
கருணாநிதே நின்ன கருண தப்பிதம்யாலெ
சரணரக்ஷேயு தொரெயது ஸ்ரீஹரியே. 4

கங்காஜனக பாண்டுரங்க நின்னய பக்தர
சங்க விரலி துஷ்ட சங்க ப்யாட
அங்கனெயர கூடி அனங்க பாணகெ சிலுகி
பங்கவ படலாரெ ஸ்ரீரங்கவிடல ஹரியே. 5.

# 4. இட்டபடி இருப்பேனோ

**இராகம் :** சாவேரி **தாளம் :** ஆதி தாளம்

## பல்லவி

இட்டபடி இருப்பேனோ அரியே எனதுதுரையே.

## அனுபல்லவி

பிரமன் வணங்கும் தாமரைப்பாத அரியே.

## சரணம்

மெல்லிய சோறு வெண்ணெய் காய்ச்சியநெய்
பொன்னால் செய்ததட்டி உணவு உண்ணலாம்
பெரும்பேர் பெற்றநின் கருணைக் குறைந்தபின்
உணவுகிடைக்காமல் வாய்விட்ட ழச்செய்வாய் அரியே. 1

செந்நிறத்தில் ஒளிவிடும் பீதாம்பரம் உடுத்தச் செய்வாய்
சரிகை கரையிட்ட ஆடைகளைப் போர்த்தச் செய்வாய்
கபில அரியேநின் கருணை குறைந்த பின்னர்
கிழிந்த கோவணமும் கிடைக்காமல் போகும் அன்றோ. 2

சந்திர காந்தக் கல்லால் ஆனமனையில் சந்திரகிரகணம் போன்ற
அழகிய மஞ்சத்தில் உறங்கச் செய்வாய்
மந்த்ர மலையைத் தூக்கிய நின்கருணை குறைந்தால்
அறச்சாலையில் தோளைத் தாழ்த்தி நிற்பர் அரியே. 3

பல்லக்கில் ஒருகணம் அரசனாக அமர்த்துவாய்
குடைபிடித்துச் சாமரம் வீசச் செய்வாய்
கருணாநிதியே உனது கருணை குறைந்தபின்
பாதம் காக்கும் செருப்பும் கிடைக்கப் பெறாதரியே. 4

கங்கையின் தந்தை பாண்டுரங்கா உன்தன் அடியார்களின்
சங்கம் இருக்கட்டும் தீயோரின் சங்கம் வேண்டா
அரிவைய ருடன்கூடி அனங்கனின் அம்புகளால் அலைப்புண்டு
பங்கப்பட மாட்டேன் அரங்க விட்டலா அரியே. 5

**இராகம் :** கேதாரகௌளம் **தாளம் :** ஆதிதாளம்

## பல்லவி

இதனாதரு கொடதித்தரெ நின்ன
பதகமலவ நம்பி பஜிசுவ தெந்தொ.

## சரணம்

க்ராசவாகளிகெ இல்லவெந்து நின்ன
பேசரிசி பேட பந்துதில்ல
வாசுதேவனெ நின்ன தாசர தாசர
தாசர தாச்யவ கொடு சாகெந்தரெ. 1

சதிசுதருகள சஹிதனாகநா
ஹிததிந்த இரபேகம் பொதில்ல
இதர விஷயங்களிகெரகிசதெ மனகெ நின்ன
கதாம்ருதவனெ கொடு சாகெந்தரெ. 2

சாலவாயிதெந்து சம்பள எனகெ
சாலதெந்து பேட பந்துதில்ல
நாலகெயலி நின்ன நாமதுச்சரணெய
பாலிசபேகெந்து பேடிதெ னல்லதெ. 3

ஒடவெகளில்ல ஒட்யாணகளில்லெந்து
படவனெந்து பேட பந்துதில்ல
ஒடெய நின்னடிகளி கெரகுவுதகெ மன
பிடதிஹதொந்தனு கொடு சாகெந்தரெ. 4

ஆகபேகு ராஜ்ய போககளெனகெந்து
ஈகநானு பேட பந்துதில்ல
நாகசயனா ரங்கவிடலா நாநின்ன
பாகில காயுவ பாக்ய சாகெந்தரெ. 5



# 5. இதையாவது கொடாதிருப்பின்

**இராகம் :** கேதாரகௌளம் **தாளம் :** ஆதிதாளம்

### பல்லவி

இதையாவது கொடாதிருப்பின்—நினது
பாதத்தாமரை நம்பிப் பாடுவ தென்றோ.

### சரணம்

உணவுவீடுகள் இல்லை என்று நினைனைத்
தொல்லை செய்து வேண்ட வரவில்லை
வாசு தேவனேநின் அடியார்க் கடியார்க்
கடியார்க் கடிமைப்பணி கொடுத்தால் போதுமென்றால். 1

மனைவி மக்களுடன் கூடிய வனாகிநான்
இனிமையாக இருக்கலாம் என்ப தில்லை
இந்திரிய இச்சைகளில் இறங்காது மனத்திற்குநின்
கதையாம் அமிர்தத்தைக் கொடுத்தால் போதுமென்றால். 2

கடனா யிற்றுச் சம்பளம் எனக்குப்
போதா தென்று வேண்ட வரவில்லை
நாவில் நினது நாமம் உச்சரிப்பைக்
கொடுக்க வேண்டுமென வேண்டினே னன்றி. 3

உடைமைகள் ஒட்டியா ணங்கள் இல்லாத
ஏழை என்று வேண்ட வரவில்லை
உடையாய் உன்னடிகளில் பதிந்த மனத்தை
விடாதிருக்கும் ஒன்றைக் கொடுத்தால் போதுமென்றால். 4

ஆகவேண்டும் அரசபோகம் எனக்கென்றே
இப்போது நானுனை வேண்ட வரவில்லை
பாம்பணையாய் அரங்க விட்டலா நானுனது
வாயிலைக் காக்கும் பேறருள் போதுமென்றால். 5

**இராகம் :** பூர்வி **தாளம் :** ஆதிதாளம்

## பல்லவி

இதிர தாவனு நினகீ தரெயொளு
பதுமநாபன தாச பரமோல்லாசா.

## சரணம்

வாதிதிமிர மார்த்தாண்ட னெந்தெனிசித
வாதிசரப பேருண்ட வ்யாசராயா. 1

யதிகளொளகெ நிம்மந்த தவருகள
ப்ரதி காணெனு ஈ க்ஷிதியொளு யதிராயா. 2

ஹம்மனளிது ஸ்ரீபதி ரங்கவிடலன்ன
சும்மானதிம் சேவிப வ்யாசமுனிராயா. 3

# 6. சமமானவர் யார் உனக்கு ?

**இராகம் :** பூர்வி **தாளம் :** ஆதிதாளம்

### பல்லவி

சமமானவர் யார்உனக்கு நிலவுலகில்
பதுமநாபன் அடியாரே மேலாம் உல்லாசனே.

### சரணம்

வாதியனெும் இருள்நீக்கும் சூரியனாய் எண்ணப்பட்ட
வாதியெனும் சரபத்தை வெல்லும் பேருண்டமாம்
வியாசராயனே. 1

துறவிகளில் உன்னைப் போன்றவரின்
பிரதியைக் காணேன் இப்புவியில் துறவிராசனே. 2

ஆணவத்தை அழித்துச் சிரிபதி அரங்கவிட்டலனை
மகிழ்வுடன் வணங்கும் வியாசமுனி ராயனே. 3

## சுளாதி

**இராகம் :** பைரவி **தாளம் :** துருவதாளம்

ஈ வனதெடெகளு ஈலதெவனகளு
ஈ நதிபுளினகளீ சசிசிலெகளு
ஈ சுரதரு நெளலு சுகபிகரவ
யாகெ மாதவன மரெயலீதிவெ கௌதி
ஆ முகுளு நகெய ஆ சொபக
ஈ சுரதரு நெளலீ ரதிய
ஈ சுரதவனரித பாலயெரெந்தொ
ஈ சுகுணமய ரங்கவிடலனெ கௌதி

## மட்ட தாளம்

இன்னு ரங்கனங்க சங்கவு எத்தணது கோபியரிகெ
மதுரெய மானினியர பலெயல்லி சிலுகிதன
மதுரெய மானினியரு ரதிவிதக்தரா
வதுகள ரசிக நம்ம ரங்கவிடல 2

## திரிபுடை தாளம்

இன்யாதகெ ரங்க இல்லிகெ பாஹா
மதுராபுரி யரசனாத
மல்லரகொந்து மாவன்ன மடுஹித
அவன நெனஹெ சாகு ரங்கவிடலனா 3

## ரூபக தாளம்

பிடுவரு அதனர கணிகெயரு நெரெ
பிடுவவு விபல தருவ த்விஜகண
பிடுவவு ம்ருக தள்ளுரிகொண்டடவிய
பிடுவனு ஜார பரவதுவனு நெரெதின்னு
இவு திடவாயிது நம்ம வல்லபனொளு
அகடகடா ரங்கவிடலனு கருணியெ 4

## அட்ட தாளம்

குந்தகுசும சசாங்க ரஞ்ஜித
வ்ருந்தாவன மந்தமாருத பரலு நலிதனு அர
விந்தநயனனு ஹாஹா
குந்திதெவு குந்தி தெவு நாவு
கந்தர்ப்பன சரதட்டுளிகெ ஹா
இந்துமுகியர வ்ருந்ததொளாக க்ருஷ்ணா
அந்து நம்மொடனொடித பரியனு தானு
இந்தொம்மெயாதரூ நெனெவனெ ஹாஹா
எந்திகாதரு ரங்கவிடலனில்லிகெ பஹனே 5

## ஜம்பெ தாளம்

பொந்தெரதெல்லிய தவ்வா பந்திதெ வ்ரஜதொளகெ
அந்தினக்ரூரனெம்ப க்ரூனனுமரளி பந்தனொ

நம்ம கரெதொய்யலி பேகெந்து
அந்தெம்ம கொந்த
இந்த்யார கொல்லலி பந்த
கொந்துகொள்ளலி தம்ம ஹிரியரனு ஹரலிக
அந்தெம்மனகலிசித ரங்கவிடலனா. 6

## ஏக தாளம்

ஹெத்த தாயி தந்தெயர நோடலெந்து
இத்தலட்டிதனெ உத்தவ நின்ன கோவளா
மத்யாருண்டு வ்ரஜதல்லி நெனெவரு
ஹத்திரகெ தன்னவரல்லி தா பிடுவனெ
அர்த்தக்ருத சிநேஹ நம்மொடனெ மாடித க்ருஷ்ணா
மத்தளிகெ குசுமத நேஹதந்தெ
ரக்தி எம்மொளுண்டு ரங்கவிடலகெ 7

## ஜம்பெதாளம்

பரம சுகதாசெ ஈதன சேவெ அல்லவெ
ஒரெதளெ பிங்களெ ஜனரிகெ ஹிதவனு
அரிதரிது பிடுவ நாவு நரபசுகளல்லவெ
சிரிரமணி பிட்ளு நம்ம ரங்கவிடலன்ன. 8

## ஏக தாளம்

எம்ம தனுமன தன்ன தீன வல்லெ
அந்ய வரியெவு தன்னரிந்தெ வல்லெ
எம்மசுவு தன்ன தீனவல்லெ
அந்ய வரியெவு தன்னரிதந்தெ மாடலி
நம்ம ரங்கவிடல் ரேயகெ
இன்னு சலெ மாருஹோமதெவெகெளரி. 9

## ஜதெ

அவன ஹம்பல வெமகெ ஜீவன வவ்வா
புவன மோஹன ரங்கவிடலனு கருணியெ.

# 7. தோழி! எதற்காக?

**இராகம் :** பைரவி **தாளம் :** துருவதாளம்.

இந்தக் காடுகள் இந்தக் கொடிவனங்கள்
இந்த நதிக்கரை மணல்கள் சந்திரச் சிலைகள்
இந்தத் தேவதாரு நிழல்கள் கிளிகுயில் குரல்கள்
எதற்காக மாதவன் மறைவில் கொடுக்கவில்லை தோழியே!

அந்தப் புன்னகையின் அந்தக் கவர்ச்சி
இந்தத் தேவதாருவின் நிழலில் இரதியின்
இந்தத் தேவத் தன்மை அறிந்த கன்னிய ரன்றோ
இந்த நற்குண மயமான அரங்க விட்டலனே தோழி! 1

## மட்ய தாளம்

இன்னும் அரங்கனின் தொடர்புஎத்தன்மையது கோபியர்க்கு
மதுரை மங்கையரின் வலையில் சிக்கினான்
மதுரை மங்கையர் மன்மதக்கலை தேர்ந்தவர்
மங்கையரைச் சுவைப்பவன்நம் அரங்கவிட்டலன். 2

## திரிபுடை தாளம்

இனிமேல் எதற்கரங்கன் இங்கே வருவான்?
மதுரா புரியின் அரசன் ஆனான்.
மல்லரைக் கொன்று மாமனை வென்று
மதுரா புரியின் அரசன் ஆனான்
அவனின் நினைப்பே போதும் அரங்கவிட்டலன். 3

## ரூபக தாளம்

விடுவர் ஏழைகளைக் கணிகையர் மேலும்
விடுமே பழமற்ற மரங்களைப் பறவைகள்

விடுமே தீபரவிய காட்டை விலங்குகள்
விடுவான் ஞானிபிறன் மனைவியை என்றும்
இவை உறுதி ஆயின நமது வல்லவர்களில்
வல்லவன் அரங்க விட்டலா அருள்வாய். 4

## அட்ட தாளம்

மணம் நிறை மல்லிகை மதியும் கூடிய
பூந்தோட்டத்தில் தென்றல்வர மகிழ்வான்
தாமரைக் கண்ணன் ஆஆ
வாடினோம் வதங்கினோம் நாங்கள்
மன்மதனின் மலரம்புகளால் ஆஆ
மதிமுகத்தியர் கூட்டத்தினுள் கண்ணன்
அன்று நம்முடன் ஆடிய முறையைத்தான்
இன்றொருமுறை நினைவானோ ஆஆ
என்றாவ தரங்கவிட்டலன் இங்கே வருவான். 5

## ஜம்பெ தாளம்

பொன்தேர் எங்கே வந்ததே கோகுலத்துள்
அன்றுவந்த அக்குரூரன்எனும் குரூரன் திரும்பி வந்தானோ
நம்மை அழைத்துச் செல்ல வேண்டும் என்றே.
அன்று நம்மைக் கொன்றான்
இன்று யாரைக் கொல்ல வந்தான்?
கொல்லட்டும் அன்றுதம் பெரியரை அவமதித்தான்
அன்றெம்மைப் பிரிந்தான் அரங்க விட்டலா. 6

## ஏக தாளம்

பெற்ற தாய்தந்தை பார்க்க வேண்டுமென
இங்கே அனுப்பப் பெற்றாயோ கோவலா.
மற்றும் யாருளர் நினைப்பவர் கோகுலத்தில்
அருகேவரத் தன்னவ ரைத்தான் விடுவானே
பொருளற்ற நட்பைநம் முடன்செய்த கண்ணன்
மலர்க்கும் மணத்திற்கும் உள்ளநட் புப்போல்
அன்பெம்மீது வைத்துள்ளான் அரங்க விட்டலா. 7

## ஜம்பெ தாளம்

மேலாம் இன்பமன்றோ இவன்பணி செய்வது
மக்களுக்குப் பிங்களை இன்பம் தந்தாளே.
அறிந்தும் விடும்நாம் மனித விலங்குகள்
திருமகள் பிரியாள்நம் அரங்கவிட்டலனை. 8

## ஏகதாளம்

எங்கள் உடல்மனம் உங்களுக் காட்பட்ட தன்றோ
அன்னியரை அறியாமல் தங்களை அறியுமாறு செய்வீர்
எங்கள் உயிரும் உங்களுக் காட்பட்ட தன்றோ
அன்னியரை அறியாமல் தங்களை அறியுமாறு செய்வீர்
நம்மவன் அரங்கவிட்டல ராயனிடம்
இன்னுமொருமுறை மயங்கினோம் தோழி! 9

## இரட்டை.

அவனின் விளையாடல் எங்கள் உயிர்க்கமுதமாகும்
உலகை மயக்கும் அரங்க விட்டலா அருள்வாய்.

8. **இராகம் :** காம்போதி **தாளம் :** ஜம்பெ தாளம்

## பல்லவி

உத்தமர சங்கயெனகித்து சலஹொ.

## அனுபல்லவி

சித்தஜனக சர்வோத்தம முகுந்த

## சரணம்

திருதிருகி புட்டலாரெ பரர பாதிசலாரெ
பரிபரிய பாபகள மாடலாரெ
மரண ஜனனகளெரடு பரிஹரவ மாடய்ய
கருணா சமுத்ர முரவைரி ஸ்ரீகிருஷ்ணா.

ஏன ஹேளலி தேவநா மாடித கர்ம
நானா விசித்ரவை சிரீநிவாச
ஹீனஜனரொளகாட ச்வானாதிகள கூட
ஞானவந்தன மாடொ ஜானகீரமண. 2

நின்ன நம்பித மேலே இன்னு பயவ்யாதகெ
பன்னகாதிப சயன மன்னிசய்ய
முன்னபகுதரனெல்ல செந்நாகி பாலிசித
என்னொடெய ரங்கவிடல என்ன தொரெயே. 3

# 8. உத்தமனின் சங்கம் தருவாய்

**இராகம்:** காம்போதி. **தாளம் :** ஜம்பெ தாளம்

**பல்லவி**

உத்தமரின் சங்கமெனக்குத் தந்து காப்பாய்

**அனுபல்லவி**

மன்மதனின் தந்தை சர்வோத்தமனே முகுந்தா

**சரணம்**

திரும்பத் திரும்பப் பிறத்த லாற்றேன் பிறரைப் பாதித்த லாற்றேன்
வகைவகை யான பாவங்களைச் செய்ய லாற்றேன்
இறப்பு பிறப்பிரண்டும் நீங்கச் செய்வாய் ஐயா
கருணைக் கடலே முரனின் எதிரியாம் கண்ணனே. 1

என்னவென்று கூறுவேன் நான்செய்த கன்மங்களை
நாலா வகையாம் விசித்திரமே சீனிவாசா
இழிவாம் மனிதருட னாட்டம் நாய்களின் கூட்டம்
ஞானியாகச் செய்வாய் சீதையின் மணாளனே. 2

உன்னை நம்பிய பின்னர் அச்சம் எதற்குப்
பாம்பரசன் மீது படுத்தவனே எங்களை ஏற்பாய்
முன்னம் அடியார்கள் அனைவரையும் நன்றாகக் காத்தவனே
என்னை ஆளுடையாய் அரங்க விட்டலா என்துரையே! 3

9. **இராகம்** : சங்கராபரணம் **தாளம்** : திரிபுடை தாளம்

**பல்லவி**

எல்யாடி பந்த்யோ என்ன ரங்கய்யா நீ
எல்யாடி பந்த்யோ என்னகண்ணமுந்தாடதெ.

**சரணம்**

ஆலயதொளகெ நீனாடதெ சினி
பாலு சக்ரெ நீனொல்லதெ சிக்க
பாலெயரொடனெ கூட்யாடதெ முத்து
பாலய்ய நீ என்ன கண்ண முந்தாடதெ. 1

பட்ட முத்தி பொகசெ கங்களு பணெயொ
ளிட்ட கஸ்தூரி திலக தந்தவு அல்லி
திட்ட தனதி வட்யாடலு
புட்ட க்ருஷ்ணய்ய நீ என்ன கண்ண முந்தாடதெ. 2

அஷ்ட திக்கிலி அரசி காணதெ பஹள
த்ருஷ்டி கெட்டனு நின்ன நோடதெ இன்
னெஷ்டு ஹேளலி கேளபாரதெ ரங்க
விடல நீ என்ன கண்ண முந்தாடதெ.

# 9. எங்கே விளையாடி வந்தாய் அரங்கய்யா !

**இராகம்** : சங்கராபரணம் **தாளம்** : திரிபுடை தாளம்.

**பல்லவி**

எங்கே விளையாடி வந்தாயோ என்னரங்கை யாநீ
எங்கே விளையாடி வந்தாயோ என்கண்முன் ஆடாமல்

**சரணம்**

வீட்டினுள் நீவிளை யாடாமல் காய்ச்சிய
பாலும் சருக்கரைநீ உண்ணாமல் சின்னப்

பெண்களோடு கூடி யாடாமல் முத்துப்
பாலகனே நீஎன் கண்முன் ஆடாமல். 1

முத்துத்தண்டு போலொளிவிடும் கண்கள் நெற்றியில்
இடப்பட்ட கத்தூரித் திலகத்துடன் அங்கே
உறுதித் தன்மையால் கூடி ஆடச்
சின்னக் கண்ணனேநீ என்கண்முன் ஆடாமல். 2

எட்டுத் திக்கிலும் தேடிக் காணாது மிகவும்
பார்வை கெட்டேன் உன்னைக் காணா தின்னும்
எவ்வள வியம்புவேன் கேட்கக் கூடாதா அரங்க
விட்டலா நீஎன் கண்முன் ஆடாமல். 3

10.**இராகம்** : ரேவகுப்தி. **தாளம்:** சாபு தாளம்

## பல்லவி

எல்லாடி பந்த்யோ நீ ஹேளய்யா
நில்லு நில்லு கோபால க்ருஷ்ணய்யா.

## சரணம்.

நொசலல்லி கிருபெவரிட்டிதெ அல்லி
யொசபரி சுத்தியு ஹபட்டி தெ
புசியல்ல ஈமாது முட்டிதெ நின்ன
நசுநகெ கீர்த்தி ஹட்டிதெ 1

பெரள உங்குரவெல்லி ஹோகிதெ நின்ன
கொரள பதகவெல்லி நீகிதெ
சரகெல்ல அவளல்லி சாகிதெ ஆ
தருணி மஹிதெ ஹீங்காகிதெ. 2

கள்ளதனவ ஹீகெ மாடிதெ நின்ன
சுள்ளு கடெகெ நா நோடிதெ
எல்லரிகூ டக்கு மாடிதெ
செலுவ ரங்கவிட்ல நகெகீடாதெ. 3

# 10. எங்கே விளையாடி வந்தாய் நீ கூறுவாய்

**இராகம்:** ரேவகுப்தி **தாளம்** : சாபு தாளம்.

**பல்லவி**

எங்கே விளையாடி வந்தாய்நீ கூறுவாய் ஐயா.
நிற்பாய் நிற்பாய் ரேபால கிருட்டிணய்யா.

**சரணம்**

நெற்றியில் சிறுவியர்வை அரும்பிய தங்கே
புதிய முறையில் செய்தியும் பிறந்தது
பொய்யன் றிச்சொல் நெருங்கியது நினது
புன்னகை புகழை மிகுமாறு செய்தது. 1

விரலின் மோதிரம் எங்கே சென்றதுநின்
கழுத்தின் பதக்கம் எங்கே நீங்கியது
பொருளெலாம் அவளிடம் சென்றன அந்த
இளம்பெண் பெருமை இவ்வா றாகியதே. 2

கள்ளத் தனத்தால் இவ்வாறு செய்தாய்நின்
பொய்யைக் கடைசியில் நான றிந்தேன்
எல்லா ரையும் ஏமாறச் செய்தாய்
அழகிய அரங்கவிட்டலா நகைப்பிற் கிடமானாய். 3

11. **இராகம்** : ஆகரி **தாளம்** : அட்டதாளம்

**பல்லவி**

ஒல்லெனவ்வா லகுமிய நல்ல பாரதித்தரெ
தனுஹொரெயனொல்லெனவ்வா.

**சரணம்.**

ஹார கொரளிகெ பார உவ்வின
பார சைரிசலாரெனெ

மாரனய்யனு பாரதித்தரெ
மாரனம்பிகெ குரிய மாடி 1

எல்ல தேவர வல்லபனெந்து
ஒலிதெ மன நில்லதெ
நில்லதெ ரங்கபோத மதுரெகெ
பில்ல ஹுப்பத நெவன மாடி 2

மாந்தா நிலன ஸகிஸலாகது
நொந்தெ சுகபிகரவகளிந்த
சந்த்ர கிரணதி பெந்தெ இன்னீ
விருந்தாவன வேகவனனகலி. 3

முன்ன ஆடித மாத மரெது
என்ன வனதொள கீடாடி
வன்ன ஜானு பார புரத
வன்னிதெயரனு மெச்சி போத 4

பொங் கொளல த்வனிகெ சிலுகி
பங்கபட்டெ ஙங்கஜனிந்தலி
பெங்களிகுசித வல்ல
ரங்கவிடலன தோரதித்தடெ. 5

# 11. பொறுத்தல் ஆற்றேன்

**இராகம் :** ஆகரி **தாளம் :** அட்ட தாளம்

### பல்லவி

ஆற்றேன் தோழியே இலக்குமி நாயகன் வாராதிருந்தால்
உடற்சுமை தாங்கலாற்றேன் தோழியே.

### சரணம்.

முத்துமாலை கழுத்திற்குச் சுமையே பூவின்
சுமையும் பொறுத்த லாற்றேன்

மாரன் தந்தை வாரா திருந்தால்
மாரன் அம்பிற்குக் குறியாக்கி 1

எல்லாத் தேவர்க்கும் தலைவனென்றே
ஒப்பிதெ மனம்நில் லாமல்
நில்லாமல் அரங்கன் போனான் மதுரைக்கு
வில்விழாவைக் காரணம் காட்டி 2

தென்றல் காற்றைப் பொறுத்த லாற்றேன்
வருந்தினேன் கிளிகுயில் குரலால்
திங்களின் கதிர்களால் வெந்தேன் இன்னும்
விருந்தா வனத்தை எதற்கவன் அகன்றான் ? 3

முன்னம் மொழிந்த மாற்றம் மறந்தே
என்னை வனத்துள்ளே துறந்து
தாமரைக் கண்ணன் மதுரா புரியின்
வனிதயரை மெச்சிப் போனான் 4

பூங்குழல் நாதத்தில் சிக்கிப்
பங்கப் பட்டேன் மன்மதனால்
பெண்களுக் குகந்த தாகா
தரங்க விட்டலனைக் காண்பிக்காதது. 5

12. **இராகம்:** தோடி. **தாளம் :** ரூபக தாளம்

## பல்லவி

கங்களித்யாயதகொ காவேரி ரங்கன நோடத

## அனுபல்லவி

ஜகங்களொளகெ மங்களமூருதி
ரங்கன ஸ்ரீபாதங்கள நோடத.

**சரணம்**

எந்திகாதரொம்மெ ஜனரு
பந்து பூமியல்லி நிந்து
சந்த்ர புஷ்கரிணி ஸ்நானவ மாடி ஆ
னந்ததிந்தலி ரங்கன நோடத. 1

ஹரி பாதோதக சம காவேரி
விரஜாநதி ஸ்நானவ மாடி
பரம வைகுண்ட ரங்கமந்திர
பரவாசு தேவன நோடத. 2

ஹாரஹீர வைஜயந்தி
தோர முத்தின ஸசர தரிசி
தேரனேரி பீதிலி
மெரெவ ரங்கவிடலன நோடத. 3

## 12. கண்கள் எதற்கோ

**இராகம்** : தோடி. **தாளம்:** ரூபக தாளம்

**பல்லவி**

கண்களிருந் தெதற்கோ காவிரி அரங்கனைக் காணாத

**அனுபல்லவி**

உலகங்களி னுள்ளே மங்கல மூர்த்தியாம்
அரங்கனின் திருப்பாதங் களைக்கா ணாத.

**சரணம்**

என்றாவ தொருநாள் மக்கள்
வந்து தரைமேல் நின்று
சந்திர புட்கரணியில் நீராடி
ஆனந்தத் தோடரங்கனைக் காணாத. 1

அரியின் திருவடி தீர்த்தச் சமமான காவிரியாம்
பிறவி நீக்கும் நதியில் நீராடி
மேலான வைகுந்தமாம் அரங்கத்தில் இருக்கும்
மேலான வாசுதே வனைக் காணாத. 2

வயிர மாலை வைசயந்தி
பெரியமுத்து மாலை அணிந்து
தேரில் அமர்ந்து தெருக்களில்
பவனிவரும் அரங்க விட்டலனைக் காணாத. 3

**இராகம் :** ஸ்ரீ **தாளம் :** அட்டதாளம்.

## பல்லவி

கஞ்ஜநேத்ரெ சுப மஞ்சுளகாத்ரெ
குஞ்சரதந்தெ கமனெ ரஞ்சிதாங்கி நிரஞ்ஜனாங்கி.

## சரணம்

தரெய ம்யாலெ ஹிரியளு நா
னிரலு லஜ்ஜெ தொரெது நீனு
சரசவாடோரே முரஹரன.
கரெது பாமினி சுகுணெ காமினி. 1

பதிய ப்ரீதி என்ன ம்யாலெ
அதிசயதி இரலு ஜ்யேஷ்ட
ஸதியளேனே நீனு நோடு
மதிய ருக்மிணி சுபத்மகந்தினி. 2

ஒந்து காலதல்லி தாசி
யிந்த பதியு ஸரஸவாடலு
பந்தளேனே அரசி ஸம
ளெந்து பாமினி சுகுணெ காமினி 3

தாசி ஸமளு நானு அல்ல
தோஷமாதனாட பேட
ச்ரீசன தயராசி இரலு
தாசியெ ருக்மிணி சுபத்மகந்தினி. 4

ஸாரெ க்ருத்யவாரெ மாடி
த்வாரா வதியிந்த என்ன
ஸாரெ பந்த ப்ரீதியு அ
பாரெ பாமினி சுகுணெ காமினி. 5

கடலசாயி தடெத ரின்னு
திடுகு தேஹ பிடுவெனெம்பொ
நுடிய கேளி பிடிதனெ
பிடதெ ருக்மிணி சுபத்மகந்தினி 6

மந்த்ர தரனு ப்ரீதி
யிந்த நின்ன படெதனேனெ
ஒந்து மணிய காரணதி
பந்தெ பாமினி சுகுணெ காமினி. 7

சும்மனெ பந்தவளிகெ
ப்ரஹ்ம லக்னதி பந்தெனகெ
சாம்யவேனே யாகெ நினகெ
ஹெம்மெ ருக்மிணி சுபத்ம கந்தினி. 8

மானாதி பக்தியு கன்யா
தானவு லோகதொள குண்டு
ஏன நின்ன தாத கொட்ட
தீன பாமினி சுகுணெ காமினி. 9

உன்ன யங்கதொந்து ப்ர
ஸன்ன கேளி சததன்வன
பென்னட்டி கொந்தனெ நீ
சன்ன ருக்மிணி சுபத்ம கந்தினி. 10

வீர அரசர ஸ்வபாவ
சோரர கொல்லபேகெம்போ
ஸார ப்ரீதியத ரிந்த
தோரெ பாமினி சுகுணெ காமினி. 11

இந்த்ராமி தேவதெ களொளு
ஸாந்த்ர யுத்தவன்னெ மாடி
வீந்த்ர எனகெ பாரிஜாத
தந்த ருக்மிணி சுபத்ம கந்தினி 12

வரத ரங்க கரதொ ளென்ன
சுரபுஷ்பவிரலு நின்ன
த்வரெ க்லேச நோடி தந்த
தருவ பாமினி சுகுணெ காமினி. 13

நிஜளெந்து ரங்கனு என்ன
விஜய யாத்ரெ யல்லி தன்ன
புஜகளிந் தாலிங்கிசித
சுஜனெ ருக்மிணி சுபத்ம கந்தினி. 14

அரசர ஸ்வபாவ தம்ம
அரசேர மனெயொள கிட்டு
ஸரஸ தாசேரிந்த் ஹோகோது
ஸ்மரிசெ பாமினி சுகுணெ காமினி. 15

ஸாரவசன கேளி பாமெ
மோரெ கௌகெ மாடுதிரலு
நாரி ருக்மிணி பாமெயரன்னு
வீர கரெதனு தாசேரி மெரெதனு. 16

மங்களாங்க மகிம கேசவா
லிங்கிசித பைஷ்மியன்னு
துங்ககுண கோபீரமண
ரங்கவிடலனு அனங்க ஜனகனு. 17

# 13. இருவரின் வாதம்

**இராகம் :** ஶ்ரீ **தாளம்:** அட்டதாளம்.

### பல்லவி

தாமரைக் கண்ணளே இனிய உருவினளே.
யானையனைய நடையினளே கவர்ச்சி ஆனவளே.

### சரணம்

தரையின்மேல் பெரியவள்நான்
இருக்கையில் நாணம் துறந்துநீ
சரசமாடு வாயா முரனைக் கொன்றவனை
அழைத்துப் பாமா நற்குண நங்கையே. 1

கணவனின் அன்பே என்மீது
மிகுந்திருக் கையில் மூத்த
மனைவி யோநீ காண்பாய்
தாமரைப் பூபோன்ற நன்மண உருக்குமணி. 2

ஒரு காலத்தில் தாசியிடம்
கணவன் சரசமாடும் போது
தேடி வந்தவளோ அரசிக்குச் சமம்
பாமா நற்கண நங்கையே. 3

தாசிக்குச் சமமானவள் நானல்லன்
குறையாகப் பேச வேண்டா
கண்ணனின் அருட்கூட்டம் இருக்கையில்
தாசியா உருக்குமணி நன்மண நங்கையே. 4

எல்லாத் தந்திரங்களும் செய்து
துவாரகைப் பதியிலிருந் தென்னைக்
கவர்ந்து வந்த அன்பைக் காண்பாய்
பாமா நற்குண நங்கையே. 5

கடல்மேல் துயின்றோன் இன்னும் தாமதித்தால்
திடமான உடலைத் துறப்பேன் என்னும்
வார்த்தை கேட்டுப் பிடித்தானே விடாது
தாமரைப் பூபோன்ற நன்மண உருக்குமணி. 6

மந்திர மலையை எடுத்தவன் அன்பால்
உன்னைப் பெற்றுக் கொண்டான் ஏனோ
ஒருசமந் தகமணியின் காரணத்தால்
வந்தாய் பாமா நற்குண நங்கையே. 7

வெறுமனே வந்த உனக்கும்
திருமண நாள்குறித்து வந்த எனக்கும்
சமமுண்டே ஏனுனக்கு வீண்கர்வம்
தாமரைப் பூப்போன்ற நன்மண உருக்குமணி. 8

மனத்தின் பக்தியும் கன்னிகா
தானமும் உலகத்தி லுண்டே
என்ன உன்தந்தை கொடுத்தான் ஏழை
பாமா நற்குண நங்கையே! 9

எனக்குத் துன்பமென்னும் சொல்லைக்
கேட்டுச் சததன்வ னென்பவனைத்
துரத்திச் சென்று கொன்றானே நீசிறியவள்
தாமரைப் பூபோன்ற நன்மண உருக்குமணி. 10

வீரமீகு அரசர்களின் இயல்குணம்
கள்வரைக் கொல்லவேண்டு மென்பதே
முழுஅன்பாலும் காட்டிடு வாயே
பாமா நற்குண நங்கையே. 11

இந்திரன் முதலாம் தேவர்களுடன்
வீரம்மிகு கடும்போர் செய்து
கண்ண னெனக்குப் பாரிசாதம் தந்தான்
தாமரைப் பூப்போன்ற நன்மண உருக்குமணி. 12

வரம்தரும் அரங்கனின் கைகளி லெனது
தேவமலர் இருக்கையில் உனது
வருத்தம் கண்டு தந்தான் மரத்தை
பாமா நற்குண நங்கையே. 13

உண்மைய ளென்றரங்கன் என்னை
வெற்றி யாத்திரையில் தனது
கைகளால் அணைத்துக் கொண்டான்
தாமரைப் பூப்போன்ற நன்மண உருக்குமணி. 14

அரசரின் இயல்குணம் தங்கள்
அரசியரை அரண்மனையில் வைத்துச்
சரசத்திற்குத் தாதியரிடம் செல்வதை
நினைப்பாய் பாமா நற்கண நங்கையே. 15

எல்லாச் சொற்களும் கேட்டு பாமா
முகத்தைக் கீழே தொங்கவிட்டிருக்க
மனைவிய ராகிய உருக்குமணி பாமாவை
வீரன் அழைத்துத்தான் அணைத்து மகிழ்ந்தானே. 16

மங்கலமான பெருமையன் கேசவன்
அணைத்தான் வீட்டுமன்மகள் உருக்குமணியை
மேன்மைக்குண கோபியரை மணந்தவன்
அரங்கவிட்டலன் மன்மதன் தந்தை. 17

# 14. உகாபோகம்

கருணதி தனுமன தனங்களெல்லவு
நின்ன சரணகமலகொப்பிசித பளிக
மரளி என்ன மருளு மாடுவரெ
ஸரகு ஒப்பிசித ம்யாலெ சுங்கவுண்டெ தேவா
கருணாகர நின்ன சரணதடியொளிட்டு காயோ ரங்கவிடல.

# 14. சுங்கம் உண்டே உகாபோகம்

கருணையால் உடல்மனம் பொருள் அனைத்தையும்
நினது திருவடிகளில் ஒப்புவித்த பிறகு
திரும்பவும் என்னை மயங்கச் செய்யலாமா
விலைப்பொருள் ஒப்படைத்தபின் சுங்கமுண்டே தேவா
அருள்நிறைந்தாய் நின்திருவடியில் வைத்துக்
காப்பாய் அரங்கவிட்டலா.

15. **இராகம்:** நாதநாமக்கிரியை. **தாளம்** : சாபு தாளம்.

**பல்லவி**

காளபௌதிங்களு ஈஸம்ஸார கத்தலெ பௌ திங்களு.

**சரணம்**

ஸத்யக்கெ தர்மனு லெத்தவனாடலு
அர்த்த பாண்டார வெல்லவ சோது

மத்தெ விராட ராயனமனெயல்லி
தொத்தாதளு த்ரௌபதி ஒந்து வருஷ. 1

புண்டரீகாக்ஷ புருஷோத்தம ஹரியு
பண்டிபோவனாத பார்த்தனிகெ பூ
மண்டலனாளுவ ஹரிச்சந்திர ராயனு
கொண்டவ காயிதனு ஹொளெயனாளாகி. 2

உண்டாத காலக்கெ நெண்டரு இஷ்டரு
பண்டராகி பாகில காய்வரு
உண்டாததன தப்பி படதன பந்த்ரெ
ஒண்டெயந்தெ கோண மேலேத்துவரு. 3

உண்பாக உடுவாக கொம்பாக கொடுவாக
பெம்பலதலி நலிநலிவுதிஹரு
பெம்பலதன தப்பி படதன பந்த்ரெ
இம்பு நினகில்லா நடெயெம்பரு. 4

ஏருவ தண்டிகெ நூறாளு மந்தியு
மூரு தினத பாக்ய ஜணஜணவு
நூறாரு ஸாவிர தண்டவ தத்தரெ
ரங்கவிடலனன ஸரியெம்பொரய்ய. 5

# 15. உலக இன்பம் கருப்பு வெண்திங்கள்

**இராகம்**: நாதநாமக்கிரியை **தாளம்** : சாபு தாளம்.

**பல்லவி**

கருப்பு வெண்திங்கள், இந்த உலக இருட்டும் வெண்திங்கள்.

**சரணம்**

சத்தியத்திற்குத் தருமன் சூதினை ஆடி
நிதிக் குவிய லெல்லாம் தோற்று
மேலும் விராட ராயனின் அரண்மனையில்
அடிமை யானாள் துரௌபதி ஓராண்டு. 1

தாமரைக் கண்ணன் ஆண்டகை அரியும்
தேர்ச்சா ரதியானான் பார்த்தனுக்குப் பூமியாம்
மண்டலத்தை ஆண்ட அரிச்சந்திர ராயன்
தீக்குழியைக் காத்தான் புலையனின் அடிமையாய். 2

உண்டான காலத்தில் உறவினரும் நண்பரும்
அடிமைய ராகி வாயிலைக் காப்பர்
உண்டான தனம்குறைந் தேழ்மை வந்தால்
ஒட்டகம் போல் கழுத்தை மேலே எடுப்பர் 3

உன்கையில் உடுக்கையில் ஏற்கையில் கொடுக்கையில்
செல்வத்தில் திளைத்து மகிழ்கொண்.டாடுவர்
செல்வம் தவறி ஏழ்மை வந்தால்
அடைக்கலம் உனக்கில்லை நடப்பாய் என்பர். 4

ஏறுவதற்குப் பல்லக்கு நூறு ஆட்கள்
மூன்றுநாள் நற்பே றாரவாரம் ஆரவாரம்
நூறாயிரம் தண்டம் கொடுத்தால்
அரங்கவிட்டலன் சரியென்று கூறுவர். 5

16. **இராகம்** : சங்கராபரணம். **தாளம்** : ஆதிதாளம்

## பல்லவி

கேளித்யா கௌதகவன்னு கேளித்யா

## அனுபல்லவி

கேளித்யா கௌதகவன்னு நா
கேளிதெ நினகிந்த முன்னு ஆஹா
சாளிகார க்ருஷ்ணா பேளதெ மதுரெகெ
கோளி கூகத முன்ன நாளெ பயணவந்தெ.

## சரணம்

கரெய பந்திஹனந்தெ க்ரூர தம்ம
கிரியய்யனந்தெ அக்ரூர புர
ஹொரவளயதி பிட்டு தேர ஆஹா
ஹிரியனெந்து காலிகெரகலு ராமக்ருஷ்
ணர டக்கிசி கொண்டு
மருளு மாடித புத்தி. 1

சோதர மாவன மனெய பௌ
காதரெ நாளின உதய பர
மாதரவந்தெ த்வரெய அல்லி தோ
ரித மனெகெ நாரிய ஆஹா
ஸாதிமல்ல மொதலாத பில்லுஹப்ப
ஸாதிசி கொண்டு பருவெனெம்ப சுத்தி. 2

ஹட்டித ஸ்தளவந்தெ மதுரெ கம்ச
னட்டுளிகாரதெ பெதரி தந்
திட்ட தன்ன தந்தெ சதுரெ தோரி
கொட்டளு பயவன்னு பெதரி ஆஹா
எஷ்டு ஹேளலி ரங்கவிடலனு மாவன
பெட்டிகாகி ஒடம்பட்டு போகுவ சுத்தி. 3

# 16. கேட்டாயா அதிசயத்தை

### பல்லவி

கேட்டாயா அதிசயத்தைக் கேட்டாயா.

### அனுபல்லவி

கேட்டாயா அதிசயத்தைநான்
கேட்டேன் உனக்குமுன்பே ஆகா
கேட்டேன் கண்ணன் கூறாமல் மதுரைக்குச்
கோழி கூவும் முன்பே நாளை செல்வானாம்.

### சரணம்

அழைக்க வந்துளானாம் அக்ரூரன்
சிறிய ஆண்டானாம் அக்ரூரன்
ஊர்க்குப் புறத்தே தேரை விடுத்துப் பெரியவ
ரென்றுகாலில் வீழ்ந்த பலராமன்
கண்ணனை வஞ்சனை செய்து
மயங்கச் செய்தான் புத்தியை. 1

தாய்மாமன் அரண்மனையில்
நாளின் விடியல் வேளையில்
துவாரகையில் பெண்கள் காட்டிய
வீட்டினுள் அகப்படுவான் ஆதரவுடன்
மல்லருடன் போரிட்டு வில்விழாவில்
வெற்றி கொண்டு வருவானெனும் செய்தி. 2

பிறந்த ஊராம் மதுரை கஞ்சனின்
வஞ்சனை பொறுத்த லாற்றாது பயந்து
தன்னைக் கோகுலத்தில் கொண்டுவந்த தந்தை
அஞ்சி அச்சம் வெளியிட்டாள் தாயே
எவ்வளவு கூறுவ தரங்கவிட்டலன் மாமனின்
பேட்டிக் குடன்பட்டுப் போகும் செய்தியை. 3

17. **இராகம் :** மாயாமாளவகௌள **தாளம் :** அட்டதாளம்

## பல்லவி

கொம்பு கொளலனூதுத்த நம்பிசி போதனெயவ்வா.
அம்புஜ நாபகெ மன ஹம்பலிசுத்திதெ யவ்வா

## சரணம்

நடெயலாரெனெயவ்வா அடியிடலொசவில்ல
பெடகுகாரன கூடெ நுடி தெரளித்யெவ்வா
மாது மனசு பாரதவ்வா சோதெவவ்வா க்ருஷ்ணகாகி
ஆதன காணதெ மன காதரி சுதிதெயவ்வா. 2

அன்னோதக ஒல்லெவவ்வா கண்ணிகெ நித்ரெ பாரது
மன்னணே காரன கூடெ ஹெண்ண ஜன்ம சாகெயவ்வா. 3

மனெமனெ வாருதெகெ மனவளஸதெயவ்வா
மனெமனெ பிதனொடனெமன தெரளிதெயவ்வா. 4

கோபம்மன வாருதெகெ ஹிரியதாயிதவ்வா
கோப ஜன்ர கூடித ஸ்ரீபதி ரங்கவிடல. 5

# 17. ஏங்கித் தவிக்குதே

**இராகம்:** மாமாமாளவகௌள **தாளம்** : அட்டதாளம்

## பல்லவி

புல்லாங்குழல் ஊதியவாறு நம்பவைத்துப் போனானே தோழி

## சரணம்

நடக்க இயலவில்லை தோழி அடியெடுத்து
வைக்க இயலவில்லை
அழகனிடம் கூடிப் பேச்சும் சென்றதே தோழி. 1

பேச்சும் மனமும் இல்லைதோழி தோற்றேன்
கண்ணனுக்காகத் தோழி
அவனைக் காணாது மனம் கலங்குகின்றதே தோழி. 2

உணவும் நீரும் உண்ணேன் தோழி கண்ணில்
உறக்கமும் வரவில்லை
பெருமைக்குரிய வனிடம் கூடப் பெண்பிறவி
போதுமென்றா யதுதோழி. 3

வீடுவீடாகப் பேசப்படும் வார்த்தை களுக்குமனம்
விரும்பாதே தோழி.
மன்மதன் தன்தையின் பின்னால் மனம்சென்றதே தோழி. 4

கோபியரின் சொற்களால் தாபம் பெரிதாயிற்று தோழி
கோபியருடன் கூடிய திருமகள் தலைவன்
அரங்கவிட்டலா. 5

**இராகம்:** மோகனம் **தாளம்** : சாபு தாளம்.

## பல்லவி

கொல்ல தியரெல்ல கூடி என்ன மேலே
இல்லத சுத்தி புட்டிசி
கள்ளனெந்து தூருதாரெ கோபி என்ன
கொல்ல பேகெம்ப பகெயெ.

ஹரவிய ஹாலு குடியலு என்ன ஹொட்டெ
கெரெயேனெ ஹேளம்மய்ய
கரெது அண்ணன கேளம்ம உண்டாதரெ
ஒரளகெ கட்டம்மய்ய. 1

மீஸிலு பெண்ணெயனு மெலுவுதது எனகெ
தோஷ வல்லவே னம்மய்ய
ஆஸெ மாடிதரெ தேவரு கண்ண
மோஸதி குக்கோ னம்மய்ய 2

அட்டவனேரி ஹிடிவுது அது எனகெ
கஷ்ட வல்லவெ ஹேளம்மய்ய நீ
கொட்ட ஹாலு கடியலாரதெ நானு
பட்டலொளகிட்டு போதெனெ. 3

புண்டு தனவ மாடலு நானு தொட்ட
கண்ட ஸேனெ ஹேளம்மய்ய என்ன
கண்டவரு தூருதாரெ கோபம்ம நா நின்ன
கந்தனல்லவேனே அம்மய்ய. 4

உங்குரத கரதிந்த கோபம்ம தன்ன
ச்ருங்காரத மகனெத்தி
ரங்கவிடலன பாடி உடுபின உத்
துங்க க்ருஷ்ணன தூகிதளு. 5

# 18. கள்ளனென்று தூற்றுகின்றனர்

**இராகம்:** மோகனம் **தாளம்** : சாபுதாளம்

## பல்லவி

ஆய்ச்சியர் அனைவரும் சேர்ந்தென்மீ
தில்லாத செய்தி உண்டாக்கிக்
கள்ளனென்று தூற்றுகின்றனர் என்னைக்
கொல்லவேண்டு மென்ற விருப்பால்.

## சரணம்

பெரிய பானையின் பாலைப் பருக என்வயிறு
குளமா என்று கூறுவாய் அம்மா
அண்ணனை அழைத்துக்கேள் உண்மையெனில்
உரலில் கட்டிவைப்பாய் அம்மா 1

தேவர்க்கு வைத்த வெண்ணையைத் தின்பதெனக்குக்
குற்றம் அன்றோ அம்மா
ஆசை வைத்தால் தேவர்கள் கண்ணை
மோசம் செய்து குத்துவரே அம்மா. 2

எட்டாத உயரத்தில் உள்ளதை எடுப்ப தெனக்குக்
கடினமன்றோ கூறுவாய் அம்மாநீ
கொடுத்த பாலைப் பருக இயலாமல்நான்
கிண்ணத்தில் வைத்துப் போனேன். 3

போக்கிரித் தனங்கள் செய்வதற்கு நான்பெரிய
மகனாயென்று கூறுவாய் அம்மா என்னைக்
கண்டவர் தூற்றுகின்றனர் கோபியே நான்நினது
மகனன்றோ அம்மா. 4

மோதிரக் கையால் யசோதை
தன்அழகிய மகனை எடுத்தாள்
அரங்க விட்டலனைப் பாடி
உடுப்பியின் கண்ணனை எடுத்தாள். 5

19. **இராகம்** : காம்போதி. **தாளம்** : ஆதிதாளம்

## பல்லவி

சித்தஜனய்யன சிந்திசு மனவே
ஹொத்து களெயதெ சர்வோத்தமன நெனெ மனவெ.

## சரணம்

காலனதூதரு நூலு ஹக்கவ தந்து
காலு கைகள கட்டி ம்யாலெ குட்டி
காலபாசதொளிட்டு சூலதிந்திரிவாக
பாலிசுவருண்டெ ஜாலவ மாடதெ. 1

தண்டதரன படரு சண்டகோபதி பந்து
கெண்டத நதிய தடெகெ கொண்டொய்து
கண்ட கண்டவ கித்து கெண்டதொளிடுவாக
ஹெண்டிரு மக்களு பந்து பிடிஸபல்லரெ மருளெ. 2

அங்களிகெ யப்பணங்கள ஸேரிசி எரடு
கங்களிகெ ஸீஸவ காசி பொய்யலு
தங்கி அக்க பந்து பங்கவ பிடிசுவரெ
அங்கவு ஸ்திரவல்ல ரங்கவிடல பல்ல. 3

# 19. சிந்திப்பாய் மனமே

**இராகம்** : காம்போதி. **தாளம்** : ஆதிதாளம்

## பல்லவி

மன்மதன் தந்தையைச் சிந்திப்பாய் மனமே
காலத்தை வீணாக்காது சர்வோத்தமனை நினைமனமே.

## சரணம்

காலனின் தூதுவர் நூல்கயிறு கொண்டு வந்து
கால்கைகளைக் கட்டி மேலே தூக்கிக்
காலபாசத்தில் இட்டுச் சூலத்தால் குத்துகையில்
காப்பவர் உளரோ மோசம் செய்யாமல். 1

எமனின் தூதுவர் மிகுகோபத் தால்வந்து
நெருப்பாற்றின் கரைக்குக் கொண்டு சென்று
துண்டுதுண்டாய் வெட்டி நெருப்பினுள் இடும்போது
மனைவி மக்கள் வந்து விடுவிக்க வல்லரோ மயங்கினவனே. 2

மேலுதட்டில் இரும்பூசி குத்தி இரண்டு
கண்களுக்குள் ஈயத்தைக் காய்ச்சி விடுகையில்
தங்கையும் தமக்கையும் வந்து துன்பத்தை விடுவிப்பவரே
உடல்நிலை யானதன் றரங்க விட்டலன் அறிவான். 3

20. **இராகம்:** சௌராஷ்டிரம். **தாளம்** : ஆதிதாளம்

## பல்லவி

ஜயஜய ஜகத்ராண ஜகதொளகெ சுத்ராண
அகிலகுண சத்தாம மத்வநாம.

## சரணம்

ஆவ கச்சப ரூபதிந்தலண்டோதகவ
ஓவி தரிசித சேஷமூருதியன
ஆவவன பளிவிடிது ஹரிய சுரரெயதுவ்ரு
ஆவாயு நம்ம குலகுர ராயனு. 1

ஆவவனு தேஹதொளகிரலு ஹரி நெலசிஹனு
ஆவவனு தொளகெ ஹரிதா தொலகுவ
ஆவவனு தேஹதா ஒள ஹொரகெ நியாமகனு
ஆவாயு நம்ம குலகுரு ராயனு. 2

கருணாபிமானி சுரரு தேஹவ பிடலு
குரட கிவுட மூகனெந்தெனிசுவ்
பரம முக்ய ப்ராண தொலகலா தேஹவன
அரிது பெணனெந்து பேளுவரு புதஜன. 3

சுரரொளகெ நரரொளகெ சர்வபூதக ளொளகெ
பரதரனெனிசி நியாமிசி நெலசிஹ
யரியனல்லதெ பகெய அன்யரன லோகதொள
குரகுல திரக முக்ய பவமானனு. 4

த்ரேதயலி ரகுபதிய ஸேவெ மாடுவெனெந்து
வாதசுத ஹனுமந்த னெந்தெனிசித
போத பாவதி தரணி பிம்பக்கெ லங்கிசித
ஈதகெணெயாரு மூலோக தொளகெ. 5

தரணிகபிமுகனாகி சப்தசாஸ்த்ரவ படிசி
உருணிசி ஹிந்து முந்தாகி நடெத
பரமபவமான சத உதயாஸ்த சைலகள
பரதியைதித கீதகுபமெ உண்டே. 6

அகில வேதகள ஸார படிசிதனு முன்னல்லி
நிகிள வ்யாகரணகள இவ பேளித

முகதல்லி கிஞ்சிதபசப்த இவகில்லெந்து
முக்ய ப்ராணனனு ராமனனுகரிசித. 7

தரணி சதனனு காய்து சரதியனு நெலொயு
தரணி சுதெயள கண்டு தனுஜரொடனெ
பரதி ரணவனெ மாடி கெலிது திவ்யாத்ரகள
உருயி லங்கெய பந்த ஹனுமந்தனு. 8

ஹரிகெ சூடாமணிய னித்து ஹரிகள கூடி
சரதியனு கட்டி பலு ரக்கஸரனு
ஒரசி ரணதலி தசசிரின உடிகுட்டித
மெரெத ஹனுமந்த பலவந்த தீர. 9

உரகபந்தகெ சிலுகி கபிவரரு மைமரெய
தரணி குலதிலக ஆஞ்ஜெய தாளித
கிரிஸஹித ஸஞ்ஜீவனவகித்து தந்தித்த
ஹரிவரகெ ஸரியுண்டெ ஹனுமந்தகெ. 10.

விஜயரகுபதி மெச்சி தரிணிசுதெயளி கீயெ
பஜிசி மௌக்திகத ஹாரவனு படெத
அஜபதவியனு ராம கொடுவெனெனெ ஹனுமந்த
நிஜ பகுதியனெ பேடி வரவ படெத. 11

ஆமாருதனெ பீமனெனிசி த்வாபரதல்லி
சோமகுலதலி ஜனிசி பார்தனொடனெ
பீம விக்ரம ரக்கசர முரிதொட்டித
ஆமஹிம நம்ம குலகுரு ராயனு. 12

கரதிந்த சிசுபாவனாத பீமன பிடலு
கிரிவடது சதச்ருங்க வெந்ததெனிசிது
ஹரிகள யரிகளிம் கரிகள கரிகளிம்
அரெவ வீரனிகெ சுர நரரு ஸரியே. 13

குரப கரளவனிக்கெ நெரெ உண்டு தேகி
ஹசிதுரககள ம்யாலெபிடல தனொரசித
அரகினரமனெயல்லி உரியனிக்கலு வீர
தரிசி ஜஹ்னவிகொய்து தன்னனுஜர. 14

அல்லிர்த பக இடிம்பகரெம்ப ரக்கஸர
நில்லதொரசித லோக கண்டகரனு
பல்லித சுரர கெலிதுத்ரௌபதிய கைவிடிது
எல்ல சுஜனரிகெ ஹருஷத தோரித 15

ராஜகுல வஜ்ரனெனிசித மாகதன சீளி
ராஜசூயாகவனு மாடிசிதனு
ஆஜியொளு கௌரவர பலவ சவருவெனெந்து
மூஜகவரியெ கங்கண கட்டித. 16

தானவர ஸவரபேகெந்து ப்யாக
மானநிதி த்ரௌபதிய மனதிங்கிதவனரிது
கானனவ பொக்க கிம்மாராதிகள முரிது
மானினிகெ சௌகந்தி கவனெ தந்த. 17

துருள கீசகனு தாம் த்ரௌபதிய செலுவிகெகெ
மருளாகி கரகரிய மாடலவனா
கரடி மனெயலி பரசி அவனன்வயவ
குருபனட்டித மல்லகுலவ ஸதெத. 18

கௌரவர பல ஸவரி வைரிகள நெக்கொத்த
ஓரந்தெ கௌரவன முரிதுமெரெத
வைரி துச்சாஸன்ன ரணதல்லி எடெகெடஹி
வீர நரஹரிய லீலெய தோரித. 19

குரசுதன சங்கரதி நாராயணாஸ்த்ரவனு
உரவணிசி பிடலு சஸ்த்ரவ பிசுடரு
ஹரிக்ருபெய படெதிர்த பீம உங்காரதிம்
ஹரிய திவ்யாஸ்த்ரவன நெரெ அட்டித. 20

சண்ட விக்ரமன கதெ கொண்டு ரணதி
மண்டலதொளி ராந்த களரனெல்லா
ஹிண்டி பிசுடிஹ வ்ருகோதரன ப்ரதாபவனு
கண்டு நில்லுவராரு த்ருபுவனதொளு. 21

தானவரு கலியுக தொளவதரிசி விபுதரொளு
வேனன மதவனருஹலதனரிது
ஜ்ஞானி தா பவமான பூதள தொளவதரிசி
மானநிதி மத்வாக்ய னெந்தெனிசித. 22

அர்பகதனதொளைதி பதரியலி மத்வமுனி
நிர்பயதி ஸகளசாஸ்த்ரவ படிசித
உர்வியொளு மாயெ பீரலு தத்வ மார்கவனு
ஓர்வ மத்வமுனி தோர்த சுஜனர்கெ. 23

சர்வேச ஹரி விஷ்வ எல்ல தா புசியெம்ப
துர்வாதிகள மதவ நெரெ கண்டிசி
சர்வேச ஹரி விஷ்வ ஸத்யவெந்தருஹித
சர்வாதி கீர்வாண ஸந்ததியலி. 24

பதரிகாச்ரமகெ புனரபியை திவ்யாசமுனி
பதகெரகி அகில வேதார்த்தகளனு
பதுமநாபன முகதி திளிது ப்ரஹ்மத்வ
யைதித மத்வமுனி ராயகபி வந்திபெ. 25

ஜயஜயது துர்வாதி மததிமிர மார்தாண்ட
ஜயஜயது வாதிகஜ பஞ்சானன
ஜயஜயது சார்வாக கர்வ பர்வததலிச
ஜயஜய ஜகந்நாத மத்வநாத. 26.

துங்ககுல குரவரன ஹ்ருத்கமலதலி நிலிசி
பங்கவில்ல தெ சுகவ சுஜனகெல்ல
ஹிங்கதெ கொடுவ நம்ம மத்வாந்த ராத்மக
ரங்கவிடலனெந்து நெரெ ஸாரிரை. 27

## பலச்ருதி

சோம சூர்யோபராகதி கோஸஹஸ்ரகள
பூமி தேவரிகெ சுரநதிய தடதி
ஸ்ரீ முகுந்தார்பண வெனுத கொட்ட பலமக்கு
ஈமத்வநாம பரெதோதிதர்கெ. 1

புத்ரரில்லதவரு ஸத்புத்ரரைதுவரு
ஸர்வத்ரதலி திக்விஜயவகுது ஸகல
சத்ருகள கெடுவரபம்ருத்யு பரலஞ்சுவுது
சூத்ரநாமக்ன ஸம்ஸதுதி மாதர்தி. 2

ஸ்ரீபாதராய பேளித மத்வநாம சந்த
தாபகளெதகிள சௌக்யவனவுது
ஸ்ரீபதி ஜகந்நாத விடலன தோரி பவ
கூபரதிந்த கடெ ஹாயிகுவுது. 3

# 20. மத்துவரின் நாமம்

**இராகம்:** சௌராஷ்டிரா. **தாளம் :** ஆதிதாளம்

### பல்லவி

வெற்றியாய் உலகைச் காப்ப துலகினுள் சக்திதருவது
எல்லாக் குணங்களும் தரும்நன்மை யானது
மத்துவரின் நாமம்.

### சரணம்

யார்ஆமை உருவினால் அண்டங்களைச் சுற்றிய நிரினை
விரும்பி அணிந்தான், ஆதிசேட மூர்த்திக் கருளினான்
யாரை உறவு கொண் டரியைத்தேவர்கள் அடைவரோ
அந்த வாயு நமது குலத்தின் குருராயன். 1

யார் உடலினுள் உள்ளதால் அரிநிலைத் திருப்பானோ
யார்துலங் குவதால் அரியும் துலங்குவானோ
யார்உடலின் உள்ளும் புறமும் நியமிப்பானோ
அந்தவாயு நமது குலத்தின் குருராயன். 2

இந்திரிய சுகம்விரும்பும் தேவர்கள் உடலைவிட்டதும்
குருடன் செவிடன் ஊமையென் றெண்ணப்படுவர்
மிகவும் முக்கியமான உயிரில்லா உடலை
அறிந்து பிணமென்று கூறுவர் அறிஞர். 3

தேவர்களுள் மனிதர்களுள் எல்லாப் பூதங்களுள்
தலைசிறந்த அரியடியனாய் நிலைத்து நின்றான்
அரியைத் தவிர அன்னியரை நினையான் உலகில்
குருகுல திலகன் மேலான வாயு. 4

திரேதாயுகத்தில் இரகுபதியின் பணிபுரிவே னென்னும்
வாயுவின் மைந்தன் அனுமன் எனப்பட்டான்
குழந்தைத் தனத்தால் சூரியன்மீது தாவினான்
இவனுக்குச் சமம்யார் மூன்று லகத்திலும். 5

சூரியன் வியக்கமாறேழு சாத்திரங்கள் படித்துத்
தேர்ந்து பின்னும் முன்னும் நடந்தான்
மேலாம் வாயுவின் மகன் உதயஅத்தன மலைகளை
விரைந்தடைந்தான் இவனுக்குவமை உண்டே. 6

எல்லாவேதங்களின் சாரத்தை அறிந்தான் மேலும்
எல்லா இலக்கணங் களுமிவன் கூறினான்
வாயிலிந் தொருதவறான சொல்லும் இவனிடம் இல்லை
முக்கியமான உயிராவா னென்றிராமன் அருள்செய்தான். 7

சூரியகுல மகனைக் காத்துக் கடலைக் கடந்து
தரையின் மகளைக் கண்டே அசுரருடன்
கடும்போரிட்டு வென்று திவ்வியாத் திரங்களை
முறித்திலங் கைக்கு வந்தான் அனுமன். 8

இராமனிடம் சூளாமணி தந்து குரங்குகளைச் சேர்ந்தே
அணையைக் கட்டிப்பல அரக்கர்களை
அழித்துப் போர்க்களத்தில் பத்துத் தலையனைப்
பொடியாகச் செய்து
திரிந்த அனுமன் வல்லவன் தீரன். 9

நாகபாசத்தில் சிக்கி வானரர் மெய்ம்மறக்கச்
சூரியகுல திலகன் ஆணையை மேற்கொண்டு
மலையுடன் சஞ்சிவியைப் பெயர்த்து வந்து தந்தான்
அரிவரத் திற்குச் சமமுண்டா அனுமனுக்கு. 10

வெற்றிரகு பதிமெச்சச் தரைமகள் கொடுக்க
விரும்பிய முத்து மாலையைப் பெற்றான்
பிரமபதவி இராமன் கொடுக்க அனுமன்
உண்மைபக்தி வேண்டும் என்னும் வரம்பெற்றான். 11

அந்தவாயுவே வீமசேனன் எனும்பெயரில் துவாபரயுகத்தில்
திங்கள் குலத்தில் பிறந்து பார்த்தனுடன்
வீமன் வலிய அரக்கரை முறியடித்தான்
அந்தப் பெருமை யன்நமது குலத்தின் குருராயன். 12

கைகளால் குழந்தைத்தன வீமனை விடுவிக்க
மலைசத சிருங்கா எனும்பெயர் பெற்றது
சிங்கம் மீது சிங்கத்தையும் யானை மீது யானையையும்
தூக்கியெறிந்து மோதும் வீரன் வீமனுக்குத் தேவரும்
மனிதரும் சமமா. 13

துரியோதனன் விடம்கலந்த உணவையிட உண்டு
பாம்புகளுடன் போரிட் டவைகளை வென்றான்
அரக்கு மாளிகையில் தீயிட வீரவீமன்
காத்துக் கங்கையை அடைவித்தான் தம்பியரை. 14

அங்கிருந்த பகாசுரன் இடும்பனெனும் அசுரரை
நில்லா தோடச் செய்து உலகிற்குத் துன்பமிழைத்த

வல்லசுரரை வென்று துரௌபதியின் கைபிடித்
தெல்லா நல்லோர்க்கும் மகிழ்வைத் தந்தான். 15

அரசகுல வைரமாம் சராசந்தனைப் பிளந்து
ராசசூயயாகம் நடைபெறச் செய்தான்
களத்தில் கௌரவரின் வலியழிப்பே னென்று
மூவுல கறியக் கங்கணம் கட்டினான். 16

அரக்கரை அழிக்க வேண்டுமென வேகமாக
மானமிகு துரௌபதியின் மனத்தை யறிந்து
காட்டை அடைந்து கந்தர்வரை வென்று
துரௌபதிக்குச் சௌகந்திகா எனும்பூவைத் தந்தான். 17

தீயவன் கீசகன் துரௌபதி அழகிற்கு
மயங்கித் தொல்லை தந்த அவனைப்
பாக சாலைக்கு வரச்செய் தழித்தான்
துரிய னனுப்பிய மல்லர்குலம் அழித்தான். 18

கௌரவரின் வலியழித்துப் பகைவரை வென்ற
ஒருவனாகத் துரியனைக் கொன்று திரிந்தான்
பகைவன் துச்சாதனனைக் களத்தில் உடல்பிளந்து
வீரன் நரஅரியின் விளையாட்டைக் காட்டினான். 19

குருவின் மகன் நாராயணாத் திரத்தை
உச்சரித்து விட்டதும் அத்திரத்தைக் கீழே போட்டனர்
அரியின் அருள்பெற்ற வீமன் அரவத்துடன்
அரிஅத் திரத்தினை எதிர்கொண்டு நின்றான். 20

கடுமையாகப் போரிடுவோன் கதைகொண்டு களத்தின்கண்
பூவுலகில் எதிர்த்த அரக்கரை யெல்லாம்
கொன்றழித்த வீமனின் பெருமை யெல்லாம்
கண்டெதிர் நிற்பவர்யார் மூவுலகி னுள்ளே. 21

கலியுகத்தில் பிறந்த கற்றோ ரில்பலர்
வேனன் மதத்தைப் பின்பற்றுவ தறிந்து
ஞானியாம் வாயு பூவுலகில் அவதரித்துப்
பெருமைநிறை மத்துவா சாரியர் எனப்பெற்றான். 22

இளம்வய தடைந்ததும் பதிரி அடைமத்துவமுனி
பயமின்றி எல்லாச் சாத்திரமும் படித்தான்
உலகில் மாயாவாதம் நிறைந்திருக்கத் தத்துவ மார்க்கத்தை
உணர்ந்த மத்துவமுனி காட்டினான் நல்லோர்க்கு. 23

முழுமுதற் கடவுள்அரி உலகம் பொய்யெனும்
தீய வாதிகளின் மதத்தைக் கண்டித்து
முழுமுதற் கடவுள் அரிஉலகம் உண்மையென நிரூபித்தான்
சிவன்முதலாம் தேவர்களின் கூட்டத்தில். 24

பதிரிகா சிரமத்திற்குத் திரும்பவந்து வியாசமுனி
திருவடி வணங்கியெல்லா வேதங்களின் பொருளைத்
தாமரை உந்தியனால் தெளிந்து பிரமதத்துவம்
பெற்ற மத்துவமுனி ராயரை வணங்குவோம். 25

வெற்றிவெற்றி தவறான மதவாத இருள்நீக்கும் சூரியனுக்கு
வெற்றிவெற்றி வாதிகளாம் யானைகளை வெல்லும் சிங்கத்திற்கு
வெற்றி வெற்றி சாருவாக மலையை அடக்கும் வயிரத்திற்கு
வெற்றிவெற்றி உலக நாதனுக்கு மத்துவனாம் நாதனுக்கு. 26

மேன்மைக் குலகுருவை இதயகமலத்தில் நிறுத்திப்
பங்கம் இல்லாத இன்பத்தை நன்மக்களுக்குக்
குறைவின்றிக் கொடுக்கும் நம்மத்துவரின் உள்ளிருக்கும்
அரங்க விட்டலனின் புகழைப் பகர்வீர். 27.

## பலத்துதி

சந்திர சூரிய கிரகண காலத்தில்
அந்தணர் கங்கை நதியின் கரையில்

முகுந்தனுக் கர்ப்பண மெனக்கொடுத் தபயன்
இந்தமத்துவ நாமமெழுதிப் படித்தவர்க் குண்டே. 1

பிள்ளைகள் இல்லாதவர் நன்மகனைப் பெறுவர்
எல்லா இடங்களுக்கும் செல்வர் எல்லாப்
பகைவரும் அழிவர் அகாலமரணம் வரஅஞ்சும்
சூத்திர நாமத்தைக் கூறிய அளவில். 2

சிரிபா ராயர் கூறிய மத்துவ நாமம்
துன்பங்களைக் களைந்தின்பம் நல்குமே
சிரிபதி சகந்நாத விட்டலனைக் காட்டிப்
பிறவிக் கடலிலிருந்து கரையேறச் செய்யுமே. 3

21. **இராகம்:** சங்கராபரணம். **தாளம்** : ஆதிதாளம்

## பல்லவி

ஜோ ஜோ ஜோ ஜோ ஜோ ரங்கதாம
ஜோ ஜோ ஜோ ஜோ ஜோ ரணபீம.

## அனுபல்லவி

ஜோ ஜோ பக்தர கஷ்ட நிர்தூம
ஜோ ஜோ தசரத ராம நிச்சீம.

## சரணம்

பூமிய சின்னத தொட்டில மாடி
சோமசூர்யரெம்ப கலசவ மாடி
நேமதி வேதகள ஸரபணி மாடி
ஆமஹாசக்கெ கொண்டிகள ஹாகி. 1

ஸரசிஜோத்பவ ஸரஸ்வதி பாரதி
கருட சேஷ ருத்ரரிவர ஸதியரு
சுரரு கின்னரரு கிம்புருஷ நாரதரு
பரிபரி கீததி துதிசி பாடிதரு. 2

வசுதேவ சுதனாத முத்து முராரி
அசுரெ பூதனிய ப்ராணாபஹாரி
அஸம ஸாஸமல்ல தைத்யர வைரி
சிசுவாகி தேவகி கானந்த தோரி. 3

ஜகவன யொட்டெயொளிம்பிட்டெ த்ருவ்வி
ஜகவெல்ல நிர்மாண மாடிதெ த்ருவ்வி
நியமகோசர நித்யானந்தனெ த்ருவ்வி
மகவெந்த நாவ் தூகபல்லெவெ தருவ்வி. 4

தமன மர்திசி வேதததிகளனு தந்தெ
சுமனஸரிகாகி மந்த்ர பொத்து நிந்தெ
க்ஷமெகாகி போகி இரண்யகன கொந்தெ
நமிசி கரெதரெ கம்பதிந்த் ஹொரடு பந்தெ. 5

தரளனாகி பலிய தானவ பேட்தெ
பரசு தரிசி க்ஷத்ரியர ஸவரிதெ
துருள ராவணன சிரவ செண்டாடிதெ
சரிசி மனெகள பாலுமொஸரன்னு குடிதெ. 6

புத்தனாகி பதிவ்ரதெரனாளிதெ யல்ல
முத்து துரகவனேரி கல்க்யனாத்யல்ல
பத்மநாப சரி பக்தவத்ஸல்ல
நித்ரெய மாடய்ய ஸ்ரீரங்க விடல. 7

# 21. கண்ணுறங்கு

**இராகம்** : சங்கராபரணம் **தாளம்** : ஆதிதாளம்

### பல்லவி

கண்ணுறங்கு கண்ணுறங்கு அரங்கத்தில் வாழ்பவனே
கண்ணுறங்கு கண்ணுறங்கு போரில் வல்லவனே.

### அனுபல்லவி

கண்ணுறங்கு கண்ணுறங்கு துன்பங்களை நீக்குவோனே
கண்ணுறங்கு ராமா எல்லை இல்லாதவனே.

### சரணம்

புவியைத் தங்கத் தொட்டி லாக்கிச்
சந்திர சூரியரைக் கலசமாக வைத்து
நியமப்படி வேதங்களைச் சங்கிலி செய்து
பெரிய வானில் கொக்கியாக மாட்டி. 1

தாமரையி லுதித்த பிரமன் கலைமகள்
கருடன் ஆதிசேடன் உருத்திரன் பத்தினிகள்
தேவர் கின்னரர் கிம்புருடர் நாரதர்
முறைப்படிக் கீதங்களால் துதித்துப் பாடினர். 2

வாசுதேவன் மகனான முத்து முராரியே
அரக்கி பூதனையின் ஆருயிர் உண்டவனே
சமமற்ற மல்லனே அசுரரின் எதிரியே
குழந்தையாய் தேவகிக் கானந்தம் தந்தாயே. 3

புவியை வயிற்றினுள் அடக்கினாய்
புவியைத் திரும்பவும் உண்டாக்கினாய்
வேதங்களி னுட்பொருளே என்றும் இன்பனே
குழந்தையென நாங்கள் தொட்டிலாட்ட வல்லோமோ. 4

தமனனைக் கொன்று வேதங்களைக் கொணர்ந்தாய்
நன்மனத் தவர்க்காக மந்திரத்தைச் சுமந்தாய்
பூதேவிக் காக இரணியனைக் கொன்றாய்
வணங்கி அழைத்ததும் தூணிலிருந்து வெளிப்பட்டாய். 5

வாமனனாகிப் பலியிடம் தானம் வேண்டினாய்
பரசினைப் பிடித்தே அரசரை அழித்தாய்
தீயவன் இராவணனின் தலையைப் பந்தாடினாய்
ஆய்ச்சியர் மனைகளில் பால்தயிர் குடித்தாய். 6

புத்தனாகிப் பத்தினிகைளைப் பங்கப் படுத்தினாய்
முத்தான குதிரையேறிக் கல்கியாக வருவாய்
தாமரை உந்தியனே அடியார் விருப்பினனே
கண்ணுறங்கு திருவரங்க விட்டலனே. 7

22.**இராகம்:** முகாரி. **தாளம்:** ஜம்பெ தாளம்

## பல்லவி

தயமாடி ஸலஹய்ய பயநிவாரணனெ
ஹயவதன நின்ன சரண நம்பிதெனொ ஜீய.

## சரணம்

க்ஷண க்ஷண கெ நா மாடி தந்த பாபங்களன
எணிஸலளவல்ல அஷ்டிஷ்டு யெந்து
பணிசாயி நீனென் அவகுணகளெணிஸதெ
நெனகினாதுர கொட்டு தாஸனெந்தெனிஸய்ய. 1

கண்ட கண்ட கடெகெ போப சஞ்சல மனவு
பிண்ட திம்பல்லி பகு நிஷ்டு தானு
பண்டாடதவனெந்து பயலிகெ தாரதெ
கொண்டாடுவந்தெ பகுதிய கொட்டு ஸலஹய்ய. 2

ஜாதி தர்மவ பிட்டு அஜாமிளன இருதிரளு
ப்ரீதியிந்தலி முகுதி கொடலில்லவெ
க்யாதியனு கேளிநாம ரெஹொக்கெ ஸலஹய்ய
வாதஜன பரிபால ஸ்ரீரங்க விடல. 3

# 22. அருள் செய்து காப்பாய்

**இராகம்:** முகாரி **தாளம்** : ஆதிதாளம்

## பல்லவி

அருள்செய்து காப்பாய் அச்சத்தை அகற்றுபவனே
குதிரைமுக னேயுன்னை நம்பினே னையனே.

## சரணம்

கணம்கணம் நான்செய்து வரும்பாவங்கள்
எண்ணி லடங்கா அவ்வளவில் வளவென்று
பாம்பணையாய் என்தீய குணங்களைக் கருதாமல்
நினைந்தே ஆதரவுதந் தடியவ னாக்குவாய். 1

கண்டகண்ட இடங்களில் அலையும் மனமே
பிண்டம் உண்பதில் ஈடுபட்ட வன்நான்
நாணிலி யெனயெனைப் புறத்தே போக்காது
கொண்டாடு மாறுபக்தி கொடுத்துக் காப்பாய். 2

சாதிதரு மம்விட்ட சமிலன் இருக்கையில்
அன்புடன் அவனுக்கு முத்திதர வில்லையா
அப்புகழைக் கேட்டுநான் முறையிட்டேன் காப்பாய்
வாயுமகனை நேசிக்கும் திருவரங்க விட்டலா. 3

23. **இராகம்** : நாதநாமக்கிரியை. **தாளம்** : ஆதிதாளம்

## பல்லவி

துரிதகஜ பஞ்சானன–நர
ஹரியெ தேவர தேவ காயோ கோவிந்த

## சரணம்

ஹெருள்ள நதிகள ஒள்கொம்பொ ஸமுத்ரனு
பிசுடுவனெ காலுஹெறாளெகள கோவிந்த 1

ஒந்து மொலகெ ஆறு உறுளபந்து கவிதிவெ
பந்தன பிடிஸென்ன தந்தெ கோவிந்த. 2

ஹெத்த மக்களு உறுச்சராதரெ தாயி தந்தெ
எத்ததெ நெலகெ பிசுடுவரெ கோவிந்த. 3

முன்ன மாடித கர்ம பென்ன பிடதித்தரெ
நின்ன வாலைஸல்யாகெ கோவிந்த. 4

ஆபத்து தாபத்ரய பென்ன பிட தித்தரெ
ஸ்ரீபதி சரணென்னல்யாகெ கோவிந்த. 5

அரசு முட்டலு தாசி ரம்பெயாதளு அதவ
புருஷ முட்டலு லோஹ ஸ்வர்ண கோவிந்த. 6

மானாபிமான தொடெய ரங்கவிடல
ஜ்ஞானிகளரஸனெ காயோ கோவிந்த. 7

# 23. காப்பாய் கோவிந்தா

**இராகம்:** நாதநாமக்கிரியை. **தாளம்:** ஆதிதாளம்

## பல்லவி

பாவங்களாம் யானையை அடக்கும் சிங்கமே
நரஅரியே தேவாதிதேவா காப்பாய் கோவிந்தா.

## சரணம்

பெயர்பெற்ற நதிகளைத் தன்னுள் கொள்ளும் கடலரசன்
விடுவானோ வாய்க்கால்களைக் கோவிந்தா. 1

ஒருமுயலை ஆறுபுலிகள் வந்து சூழ்ந்துள்ளன
கட்டினை அவிழ்ப்பாய் தந்தையே கோவிந்தா. 2

பெற்ற மக்கள் பித்தராயின் தாய்தந்தை
தூக்காமல் நிலத்தில் வீசுவார்களோ கோவிந்தா. 3

முன்புசெய் கன்மங்கள் முதுகை விடாதிருப்பின்
உனதன் பெதற்குக் கோவிந்தா. 4

ஆபத்தாம் ஏடணை மூன்றும் முதுகை விடாதிருப்பின்
திருவின்நாயகன் அடைக்கல மெதற்குக் கோவிந்தா. 5

அரசன்தொட தாசி அரம்பை யானாள் தேவா
பரிசக்கல் முட்டியதும் இரும்பு பொன்னாயிற்று கோவிந்தா. 6

மானாபி மானங்களின் உடையவனே அரங்கவிட்டலா
ஞானிகளின் அரசனே காப்பாய் கோவிந்தா. 7

24). **இராகம்:** ஆனந்தபைரவி. **தாளம்:** ஆதிதாளம்

## பல்லவி

த்ருஷ்டி தாகீதோ பீதி முட்டப்யாடவோ
ஸ்ருஷ்டிய நாரிய ரெல்ல கண்ணிட்டு ஈருவரோ நின்ன

## சரணம்

புட்ட கமலதி மெட்டி ரதுன பாதுகா
இட்டி கிருகெஜ்ஜெ பெண்ட்யெ திட்ட தனதி
கட்டி ஸாசிர பாளுவ பட்டெயனெ பகி
துட்டு மேகில்லதெ பெலெயாத பட்ட துடுதாரவிட்டு. 1

சிரியிருவ பாததல்லி பரிமள கந்தவ பூசி
பரிபரி பதகமுத்து ஸர வைஜயந்தி
கொரள கௌஸ்துபத காந்தி நிருப ஸ்ரீவத்லாஞ்சன
ஸரிகெ தாளி பதகவு ஸோரித முத்தின ஜல்லெ. 2

உகுர கோரண்டெ சாயா சிகிரு போலுவ பெரளு
பகெபகெ ரதுனங்கள நககளனிட்டு
நகவனெத்திய புஜகெ பிகித பாகுபுரி கெம்பு
நிகிநிகிகுட்டுவ காந்தி நகுதிதெபால பானுவ. 3

எளமாவின ஸொகின தளிருபோலுவ கெந்துடி
சுளிமல்லு மந்தஹாஸவு நளினகுளாக
தளதளிப குண்டலவு பொளெவ நாசிக லலாட
செலுவ புப்பு கஸ்தூரிய திலக நப்புவ முகதி. 4

கோடி ஹொன்ன பாளுவ கிரீடவிட்டு கடெகண்ண
நோட திந்த தருணேந போடி மாடுத
சாடுமாதுகளாடுத பொட்டனந்தெ திருகிதரெ
நீடல்லவோ நினகிது பாடலாதரனெ கேளு. 5

பிங்கதிந்த எரடு கரதி சங்க சக்ரவ பிடிது
அங்கித வேணுனூதுத சங்கெ இல்லதெ
மங்கு மாடுத பாலேர பங்கஜாக்ஷ சுளிதரெ
மங்குகாரனெந்து நின்ன அங்கித மாடுவரல்லோ. 6.

மங்களமூருதி முஞ்செ ச்ருங்காரகளனெ மாடி
பொங்கொளலனூதுத ஸ்ரீரங்க சுளிதரெ
ஹேங்கள ரம்பேரொந்தாகி கங்களிடலு உன்னந்த
ரங்கவிடலகலதிரோ இங்கதெ நரசிங்கனே. 7

## 24. கண்ணேறு தாக்கியதோ?

**இராகம்:** ஆனந்தபைரவி. **தாளம்** : ஆதிதாளம்

### பல்லவி

கண்ணேறு தாக்கியதோ தெருவை அடைய வேண்டா
பெண்களாகப் பிறந்த எல்லாரும் கண்களால் பருகுவரே உன்னை

### சரணம்

சிறிய திருவடித் தாமரையில் மெட்டி இரத்தினப் பாதுகை
அணிந்த சிறுசதங்கை வெண்டை அஞ்சாமையுடன்
கனமான ஆயிரம் விலையுள்ள பட்டாடையை
இறுகக் கட்டி அதன் மேல் விலையுள்ள பட்டரைஞாண் கட்டி 1

திருமகள் இருக்கும் மார்பில் மணக்கும் சந்தனத்தைக் பூசி
முறைமுறை பதக்கம் முத்துமாலை வைசயந்தி
கழுத்தில் கௌத்துபத்தினொளி திருமாலின் அடையாளம்
சரிகை சேர்ந்து பதக்கத்தில் பதித்த முத்தின்கற்கள். 2

மருதாணி யிட்டநகம் இளந்தளிர் போன்ற விரல்களில்
வகைவகை இரத்தினங்களை ஒளிவிட இட்டு
மலையெடுத்த தோள்களில் வாகுவளையம் சிவப்பாய்
தகதகவென ஒளிதரும் இளஞ்சூரியனைப் போன்றே. 3

இளையமா மரத்தின் இளந்தளிர் போன்ற சிவந்த உதடுகள்
தூய பற்களின் புன்னகை பெற்ற தாமரைக் கண்ணனே
பளபளவென ஒளிவிடும் குண்டலங்கள் எடுப்பான
மூக்கு நெற்றியில்
இடப்பட்ட அழகிய கத்தூரித் திலகம் அமைந்த முகமே. 4

கோடி செம்பொன் ஒக்கும் கிரீடம் அணிவித்துக் கடைக்கண்
நோக்கால் இளம்பெண்களுடன் விளையாட்டைச் செய்து
சதுரமான சொற்களைப் பேசி இணையற்றவனாகத் திரிந்தால்
உசிதமாகுமோ உனக்கிது சிவந்த உதடனே கேட்பாய். 5

பெருமிதத்தால் இரண்டு கைகளில் சங்கு சக்கரம் பிடித்துப்
பெயர்பெற்ற குழலை ஊதியவாறு நாண மின்றி
இளம்மங்கையரை மயக்கித் தாமரைக் கண்ணா திரிந்தால்
பித்த னென்று நின்பெருமையைக் குறைப்பர் ஆன்றோ. 6

மங்கல மூர்த்திக் கழகினைச் செய்ய
பூங்குழல் ஊதித் திருவரங்கன் திரிந்தால்
பெண்களும் அரம்பையரும் ஒன்றாகிக் கண்டிடுவ துண்மை
அரங்க விட்டலனை அகலாதீர் குறையில்லா நரஅரியை. 7

# 25. உகாபோகம்

த்யானவ க்ருதயுகதி
யஜன யஜ்ஞவு த்ரேதாயுகதி
தானவாந்தகன தேவதார்சனெ த்வாபரயுகதி
ஆமானவரிகெஷ்டு பலவோ அஷ்டு பலவு
கலியுகதி கானதலி கேசவயெனலு
கை கொடுவனு ரங்கவிடல.

# 25. கைகொடுப்பான்

# உகாபோகம்

தியானம் கிருத உகத்தில்
வேள்வி செய்வித்தல் வேள்வி செய்தல் திரேதா யுகத்தில்
அசுரரை அழித்தவனை அருச்சித்தல் துவாபர யுகத்தில்
அந்தமானிடர்க் கெவ்வளவு பலனோ அவ்வளவு பலன்
கலியுகத்தில் இசையில் கேசவன் என்பது
கைகொடுப்பான் அரங்க விட்டலன்.

26. **இராகம்:** வசந்தா **தாளம்:** அட்டதாளம்

### பல்லவி

நந்தநந்தன பாஹி குணவ்ருந்த
சுந்தரரூப கோவிந்த முகுந்த.

### சரணம்

தினகர பவபால கனகாகிங்கித சேல
ஜனகஜாலோல ஜனகானுகூல. 1

பவனஜபரிவார யவனவிதார
நவரத்னஹார நவநீத சோர 2

துங்கவிஹங்க துரங்க தயாபாங்க
ரங்கவிடல பவபங்க சுபாங்க. 3

# 26. நந்தனின் மகனே காப்பாய்

**இராகம்:** வசந்தா **தாளம் :** அட்டதாளம்

**பல்லவி**

நந்தனின் மகனே காப்பாய் குணங்கள் நிறைந்தவனே
அழகிய உருவனே கோவிந்தா முகுந்தனே.

**சரணம்**

சூரிய குலத்துதித்த இராமனே
பொன்னாடை அணிந்தவனே
சனகனின் மகளுக்கு விருப்பானவனே
மக்களுக்கு நன்மை செய்தவனே. 1

வீமன் முதலாம் பாண்டவரின்
துன்பத்தைத் துடைத்தவனே
நவரத்தின் மாலை அணிந்தவனே
வெண்ணெய் திருடியவனே. 2

மேலான கருடனைக் குதிரையாய் உடையவனே
அருள்நிறைந்தோய்
அரங்கவிட்டலா பிறவியை நீக்குவோய்
அழகிய உறுப்பினனே. 3

27.**இராகம்:** வசந்தா **தாளம்:** திரிபுடை தாளம்

**பல்லவி**

நா நினகேனு பேடுவுதில்ல – என்ன
ஹ்ருதய கமலதொளு நெலெசிரு ஹரியே.

### சரணம்

சிர நின்ன சரணக்கெரகலி – சக்சு
எரக திந்தலி நின்ன நோடலி ஹரியெ
கரண கீதங்கள கேளலி – நாசிக
நிருமால்யானுதின க்ராணிசலி ஹரியெ. 1

நாலிகெ நின்ன கொண்டாடலி–என்ன
தோளு கரங்கள முகியலி ஹரியெ
காலு தீர்த்தயாத்ரெகெ போகலி –மன
பல்விநிந்தலி நின்ன ஸ்மரிசலி ஹரியெ. 2

சித்த நின்னொள முளுகாடலி –நின்ன
பக்த ஜனர ஸங்க தொரகலி ஹரியெ
வ்ருத்தி தத்வயோகாப்யாஸக் காகலி –ரங்க
விடல நின்ன தயவாகலி ஹரியெ. 3

## 27.இதய கமலத்தில் நிலைத்திருப்பாய்

### பல்லவி

நான்நின்னை எதுவும் வேண்டுவதில்லை–என்றன்
இதய கமலத்தினுள் நிலைத்திருப்பாய் அரியே.

### சரணம்

தலைநினது திருவடி காணட்டும்– கண்கள்
பத்தியுடன் நின்னைக் காணட்டும் அரியே
காதுகள் கீதங்கள் கேட்கட்டும் – மூக்கு
நிர்மால் யத்தை முகரட்டும் அரியே. 1

நாக்கு நின்னைக் கொண்டாடட்டும்–எனது
தோளும் கையும் குவியட்டும் அரியே.

கால்கள் தீர்த்தயாத்திரை செல்லட்டும் —மனம்
நிலைத்து நின்று நின்னை நினைக்கட்டும் அரியே. 2

சித்தம் நின்னுள் மூழ்கட்டும் —நின
தடியார்களின் கூட்டம் கிடைக்கட்டும் அரியே
மனம்தத்துவ யோகங்களில் ஈடுபடட்டும்
அரங்க விட்டலா நின்னருள் கிடைக்கட்டும் அரியே. 3

28.) **இராகம்:** பூர்வி **தாளம்** : ஆதிதாளம்

## பல்லவி

நானே ஸஜ்ஜனனாதடெ இந்த
ஹீன விஷயகளி கெரதவெ னேனய்ய.

## சரணம்

நிருததி பரர நிந்திசுதீஹெனெ
குருஹிரியரு ஸஜ்ஜனரென்ன தெ
ஹரிபரதைவவெந்தரிது பஜிஸதெ
பரர ஒடவெகள பயசுவெனேனய்ய. 1

சித்தவ புருஷோத்தம னல்லிடதெ
உத்தம ராதவ ரொடனாடதெ
தத்வ விசாரவ மாடதெ நான்
உன்மத்தர ஸங்கவ மாடுவெனேய்ய. 2

ஹேய சரீரவ போஷிசி கொண்டு
உபாயவ சிந்திசி பளலுவெனு
ராயர மாடி சரணர ஸலகுவ
ரங்கவிடலன பிடுவெனேனய்ய. 3

# 28. நான் நல்லவனாயின்

**இராகம்:** பூர்வி **தாளம்** : ஆதிதாளம்

**பல்லவி**

நானே நல்ல வனாயின் இத்தகைய
ஈனச் செயல்களில் இறங்குவேனா ஐயா.

**சரணம்**

எப்போதும் பிறரை நிந்திப் பேன்நான்
குருவைப் பெரியரை நன்மக்கள் என்னாமல்
அரிமேலான தெய்வம் என்றறிந்து புகழாமல்
பிறரின் உடைமைகளை விரும்புவேன் ஐயா. 1

சித்தத்தைப் புருடோத்தமனிடம் வைக்காமல்
உத்தம ரானவருடன் கூடப் பெறாமல்
தத்துவ விசாரணை செய்யா மல்நான்
உன்மத்தரின் கூட்டம் அடைவேன் ஐயா. 2

அவலமாம் உடலைக் காக்கும்
உபாயம் சிந்தித்து வாடுவேன்
அரசராக்கி அடியவரைக் காக்கும்
அரங்கவிட்டலனை விடுவேனே ஐயா. 3

29.**இராகம்:** சங்கராபரணம் **தாளம்** : அட்டதாளம்

**பல்லவி**

நாராயண நின்ன நம்பிதெ – லக்ஷ்மீ
நாராயண நின்ஹொரது பொரெவ தைவவெல்லிதெ.

## அனுபல்லவி

நா மீரி துஷ்ட கரமவ மாடிதெ
அபார மஹிம தயாநிதே.

## சரணம்

நானா யோனிகளிந்த பந்தெனோ
மன தாளலாரதெ பலு நொந்தெனோ
தீன ரக்ஷக என்னகதி முந்தேனோ
மானதிந்தலி பாலிசுவந்த தொரெ நீனேனோ. 1

தாஸர மன உல்லாஸனெ
ச்ரீச ஆச்ரித ஜனர போஷனெ
ஸாசிர அனந்த மஹிமனெ
க்லேச நாச மாடிஸோ ஸ்ரீநிவாஸனெ. 2

ரங்க நகர உத்துங்கனெ
கங்கா ஜனக கருடதுரங்கனெ
உத்துங்க குணகளந்தரங்கனெ
அனங்கன பெத்த ரங்கவிடலனெ. 3

# 29. நாராணயணா உன்னை நம்பினேன்

**இராகம்:** சங்கராபரணம். **தாளம்:** அட்டதாளம்

## பல்லவி

நாராயணா உன்னை நம்பினேன்—இலக்குமி
நாராயணா உன்னைவிட்டால் காக்கும் கடவுள் எங்குளது?

## அனுபல்லவி

என்னை மீறீத் தீய செயல்கள் செய்தேன்
மிகுந்த பெருமையனே கருணை நிதியே.

## சரணம்

பல்வகை யோனிகளில் பிறந்து வந்தேனோ
மானம் பொறுக்காமல் மிகவும் நொந்தேனோ
எளியரைக் காப்பவனே இனியென் கதிஎன்னவோ
அபிமானத்தால் காக்கும் தலைவன் நீயோ. 1

அடியார் மனத்தில் மகிழ்வுடன் இருப்பவனே
அடைக்கலம் அடைந்தாரைக் காக்கும் கடவுளே
எல்லை இல்லாப் பெருமை பெற்றவனே
துன்பம் துடைப்பாய் திருவுறை மார்பனே. 2

அரங்க நகரின் முதல்வன் ஆனவனே
கங்கையைப் பிறப்பித்தோய் கருடக் குதிரையோய்
மேன்மைக் குணங்களை உள்ளுக்குள் உடையோய்
அனங்களைப் பெற்ற அரங்க விட்டலனே. 3

30. **இராகம்:** சாரங்கா

## துருவதாளம்

நின்னாதீன சரீர கரண சேஷ்டெகளெல்ல
நின்னாதீன பந்த மோக்ஷ நிரயகளு
நின்னாதீன யோக்யதெ ஸாதன ஸாத்யகளெல்ல
நின்னதீன சுக்ருத துஷ்க்ருத பலவு
நின்னாதீன விஷயாத்ம புத்திகளெல்ல
நின்னாதீன சராசர வெந்து ச்ருதி ஸாருதலிவெ
இந்து புண்ய பாபவெல்ல நின்ன லேபிஸவோ தேவா
எந்து ஜீவரனு புண்ய பாபங்களனுணிசுவெ
அந்தரராத்மனெ நின்ன மஹிமகெ நமோ எம்பெ
எந்தோ சித்த வின்னெந்தோ பாலிஸோ ரங்கவிடல. 1

## மட்ய தாளம்

முன்ன நின்ன சரண கமலவ நம்பிதெ
பவபங்களலி பந்தெனோ
பன்னகேச சயன ஸ்ரீஹரே
அன்னு பிடேனோ பிடேனய்யாஸம்பன்ன
என்ன குணதோஷவரஸதெ
இன்னு காயோ ரங்கவிடல. 2

## ரூபக தாளம்

கரணகளு பிடதெ தம்மதம்ம
விஷயங்களிகெ எளெவுதலிவெ
என்ன ஹரண நின்னது கருணாகரனே
ஈதர ரவண மாணிஸோ ஹரியே
நின்ன சரண பகுதர சரணனாதெனு
ஹொரெவுது என்ன ரங்கவிடல ரேய. 3

## அட்ட தாளம்

பந்து பந்து நானா பவதல்லி பெந்தெனய்ய
நந்தநந்த இந்திரானந்த

குந்த சுத்த தவளதந்தெ மந்தஹாஸ
நந்தன கந்த இந்திரானந்த
இந்தென்ன ஸலஹய்ய ரங்கவிடல. 4

## ஏகதாளம்

ஹரியெ நின்ன ஒம்மெ நெனெதவ
நரகவ ஹொகனந்தெ
ஆன ஒம்மெ இம்மெ நெனெவெனய்ய
ஆனநின்ன நம்பிதெ கருணிகளரச
ஹொதெதென்ன காயோ ரங்கவிடல. 5

## ஜதெ

மங்கள மஹிம புஜங்கசயன நமோ
ஜங்குளி தைவத கண்ட ரங்கவிடல.

# 30. எல்லாம் உன் ஆதிக்கத்தில் உள்ளன

**இராகம்:** சாரங்கா

## துருவதாளம்

உன்ஆதிக்கம் உடல் கரணங்கள் செயல்கள் எல்லாம்
உன்ஆதிக்கம் கட்டு வீடுபேறு நரகங்கள்
உன்ஆதிக்கம் தகுதி சாதனை சாத்தியங்கள்
உன்ஆதிக்கம் நல்வினை தீவினைப் பயன்கள்
உன்ஆதிக்கம் செய்தி ஆன்மா புத்திகளெல்லாம்
உன்ஆதிக்கம் அசையும் அசையாப்
பொருள்கள் எனவேதம் அறிவித்தவா றுள்ளதே
இன்று புண்ணிய பாவங்கள் உன்னைப்
பாதிப்பதில்லையோ தேவா
என்றுயிர் களுக்குப் புண்ணிய பாவங்களை உண்பிப்பாய்
ஆன்மாவிற்குள் இருப்பவனே உனது பெருமைக்கு
வணக்கம் என்பேன்
என்றோ சித்தத்திலிருந் தென்றோ காப்ப
தரங்க விட்டலனே. 1

## மட்ய தாளம்

முன்பே நினது திருவடித் தாமரையை நம்பினேன்
பல பிறவிகளில் பிறந்து வந்தேன்
பாம்பரசனின்மேல் படுத்தவனே திருஅரியே.
இன்னும் விடேன் விடேன் ஐயா நிறைந்தவனே
எனது நற்பண்பு குறைகளை ஆராயாமல்
இன்னும் காப்பாய் அரங்க விட்டலா. 2

## ரூபக தாளம்

கரணங்கள் விடாமல் தங்கள் தங்கள்
நுகர்வுகளில் இழுத்தவா றுள்ளன

என்னுயிர் உன்னது கருணை நிறைந்தவனே
இத்தரையில் குற்றங்களைக் களைவாய் அரியே
நின் திருவடியின் அன்பர்க் கடைக்கலம் ஆனேன்
காப்பாய் என்னை அரங்க விட்டலா. 3

வந்து வந்து பல்வகைப் பிறவிகளில்
வெந்தேன் ஐயா
நந்தனின் மகனே திருமகளுக் கின்பம்
தருபவனே
தூய மல்லிகையின் வெண்ணிறப் புன்னகையனே
நந்தனின் மகனே திருமகளுக் கின்பம் தருபவனே
இன்றெனைக் காப்பாய் அரங்க விட்டலா. 4

## ஏக தாளம்

அரியே உன்னை ஒருமுறை நினைந்தவன்
நரகிற்குச் செல்லான் அன்றோ
நானொருமுறை இருமுறை நினைப்பேன் ஐயா
நானுன்னை நம்பினேன் அருளாளரின் அரசனே
ஆதரித் தென்னைக் காப்பாய் அரங்க விட்டலனே. 5

## இரட்டை

மங்கல மகிமையனே பாம்புப் படுக்கையனே வணக்கம்
தெய்வங்கள் கூட்டத் தலைவனே அரங்க விட்டலனே.

31. **இராகம்** : பைரவி **தாளம்** : ஆதிதாளம்

## பல்லவி

நீனெ பல்லிதனோ ரங்கா
நின்ன தாஸரு பல்லிதரோ

## அனுபல்லவி

நானா தெரதி நிதானிசி நோடலு
நீனே பக்தராதீனனாத ம்யாலெ.

## சரணம்

பரமபுருஷ பரபொம்மனெந் தெனுதலி
நிருததி ச்ருதியு கொண்டாடலு நின்னனு
நர தர்ம ஜனரமனெய ஔகெ நிந்த
ஹருஷதிந்த கரெதல்லி போத ம்யாலெ. 1

க்யாதியிந்த புருகூத ஸஹித சுர
வ்ராதவு நின்னனு வாலை சுதிரெ
பூதளதொளு ஸம்ப்ரீதியிந்த
பார்த்தன ரதகெ நீ சூதனாதம்யாலெ. 2

ஜலஜபவாண்ட தொடெயனெந் தெனிசுவ
பலபலு தொட்டவனாகுத உறுதாதடெ
ஒடிலது ஸத்கதிவெீ அனுதினதலி நீ
பலிய மனெய பாகில காய்த ம்யாலெ. 3

துரதொளு பணெயனெச் சொடதெ பீஷ்மனு
மரளிபுதெனதலி சக்ரவ பிடியலு
ஹரி நின்ன கருணத ஜோடு தொட்டிரலவ
நிரவ கண்டு சும்னெ திருகித ம்யாலெ. 4

தரளனு கரெயலு ஒடெது கம்பதி பந்து
நரம்ருக வேஷத் பகுதர தெத்திகனாதெ
கருணதி ஸலஹொ ஸ்ரீரங்கவிடல நின்ன
ஸ்மரிபர மனதலி ஸெரெய சிக்கித ம்யாலெ. 5

# 31. நீயே வல்லவனோ

**இராகம்:** பைரவி **தாளம்:** ஆதிதாளம்

### பல்லவி

நீயே வல்லவனோ அரங்கனே
நினதடியார் வல்லவரோ

### அனுபல்லவி

நால்வகையில் நிதானித்துப் பார்ப்பின்
நீயேயடியார் ஆதிக்கத்துள் அடங்கியதும்

### சரணம்

மேலான புருடன் பரம்பொரு ளென்றே
எப்போதும் வேதங்கள் புகழ்வன உன்னை
மனிதனாம் தருமனின் அரண்மனை உள்ளே
மகழ்ச்சியுடன் அழைத்ததும் சென்ற பிறகு. 1

பெருமையில் இந்திரனுடன் சேர்ந்து தேவர்கள்
கூட்டம் உன்னைப் புகழ்ந்து கொண்டிருக்கையில்
புவியின் மீது மிகுந்த அன்புடன்
அருச்சுனன் தேர்க்குநீ சாரதி ஆன பிறகு. 2

பிரம்மாண் டங்களின் உடையவன் என்னப்பட்ட
மிகவும் பெரியோன் ஆவான் என்கையில்
விரும்பி நற்கதி தருவாய் நாள்தோறும்நீ
மாவலி மனையின் வாயிலைக் காத்தபிறகு. 3

போரில் சபதத்தைச் செய்த வீடுமன்
பின்வாங்கினா னெனுமாறு சக்கரத்தைப் பிடித்ததும்
அரியே உனது கருணையைப் புகழ்ந்த
நிலைகண்டு வெறுமனே திரும்பிய பிறகு. 4

சிறுவன் அழைத்ததும் உடைத்துக் கொண்டு தூணிலிருந்து வந்து
நரஅரி வேடத்தில் அடியாரின் அடிமை ஆனாய்
கருணையால் காப்பாய் அரங்க விட்டலா உன்னை
நினைப்பவர் மனத்தில் சிறைப்பட்ட பிறகு. 5

32. **இராகம்** : மத்யமாவதி **தாளம்** : ஆதிதாளம்

## பல்லவி

பாலொளகத்து நீரொளகத்து ஹரி
நா நின்ன நிம்பிதெனோ

## அனுபல்லவி

ஜலஜநாப நீனிட்டெ தெரதல்லி இருவெனய்ய

## சரணம்

சுகதுக்கதொளகிடு சுக்ருத தஷ்க்ருத மாடு
நிகிள துரிதக தொளென்ன நோல்யாடிசு
அகிள களனெனிசு அபய பயவ சூசு
மகரகுண்டல நின்ன மதவெ சன்மதவய்ய. 1

ஜ்ஞாஜ்ஞானதொளகிடு மானாபமானவெ மாடு
அநாத நாதரொளென்ன அனவரதாகிரிசு
தீனாதீனதெயொளகென்ன நீநீட்யாடு
ஸ்ரீநாத நின்னய மதமதவெ சன்மதவய்ய. 2

ப்ராணாபான வ்யானோதான ஸமானங்கள பேதிசு
கனதார்த்ரயதி நூகு சுகவே சுரரொளக்ஹாகு
முனிஜனர ஸங்க பொரெவ ரங்கவிடல
நின்னய மதமதவெ சன்மதவய்ய. 3

# 32. பாலுள் அழுத்து அன்றி நீருள் அழுத்து

**இராகம்:** மத்தியமாவதி. **தாளம்:** ஆதிதாளம்

## பல்லவி

பாலுள் அழுத்து நீருள் அழுத்தரியே
நானுன்னையே நம்பினேனோ

## அனுபல்லவி

தாமரை உந்தியனே நான்நீ
இட்டநிலையிலிருப்பேன் ஐயா

## சரணம்

இன்ப துன்பங்களினுள் வைப்பாய்
நல்வினை தீவினை செய்விப்பாய்
எல்லாப் பாவங்களினுள் என்னைவைத் தாட்டுவாய்
கட்டுக்களில் வைப்பாய் அபயம்
பயங்களைக் காட்டுவாய்
மகர குண்டலனே உன்மதமே நன்மதம் ஐயா. 1

ஞான அஞ்ஞானங்களுள் வைப்பாய்
மானஅவ மானங்கள் செய்வாய்
அநாதை யானவர் நடுவே என்னை
எப்போதும் இருத்துவாய்
அடிமை உரிமைகளில் என்னை வைத்து
நீயே ஆட்டுவாய்
திருமகள் தலைவனே உன்மதமே
நன்மதம் ஐயா. 2

பிராண அபான வியான உதான
சமானங்களை வேறுபடுத்துவாய்

மிகுந்த ஏழ்மையில் அழுத்துவாய்
இன்பமாய் தேவர்க்குள் இருத்துவாய்
முனிவர் கூட்டம் காக்கும் அரங்க விட்டலனே
உனது மதமே மதமாகும் நன்மதம் ஐயா. 3

33). **இராகம்** : தன்யாசி. **தாளம்:** ஆதிதாளம்

**பல்லவி**

போபு ஹோகோண பாரோ ரங்க
போபு ஹோகோண பாரோ.

**சரணம்**

ஜாஹ்னவிய தீரவந்ததெ ஜனகராயன குவரியந்தெ
ஜானகீய விவாஹவந்தெ ஜானநீ பரபேகந்தெ. 1

குண்டினீய நகரவந்தெ பீஷ்மகன குவரியந்தெ
சிசுபாலன ஒல்லனந்தெ நினகெ வாலெ பரரெதளந்தெ. 2

பாண்டவரு கௌரவரிகெ லெத்தவாடி சோதரந்தெ
ராஜ்யவன்னு பிடபேகந்தெ ரங்கவிடல பரபேகந்தெ. 3

# 33.புறத்தே போகலாம்

**இராகம்:** தன்யாசி. **தாளம்** : ஆதிதாளம்

**பல்லவி**

புறத்தே போகலாம் வாஅரங்கா
புறத்தே போகலாம் வருவாய்

**சரணம்**

கங்கைக் கரையாம் சனகனின் மகளாம்
சீதையின் திருமணமாம் ஞானிநீவர வேண்டுமாம். 1

குண்டினீய நகரமாம் வீடுமகனின் மகளாம்
சிசுபாலனை வேண்டாதவளாம்
உனக்கோலை எழுதியவளாம். 2

பாண்டவர் கௌரவருடன் சூதாடித் தோற்றனராம்
அரசாட்சி விடவேண்டுமாம் அரங்க விட்டல
வரவேண்டுமாம். 3

34.**இராகம் :** வராளி **தாளம் :** ஆதிதாளம்

**பல்லவி**

பாரோ நம்மமனெகெ கோபாலக்ருஷ்ண

**சரணம்**

கொல்ல பாலகரனு நில்லிசி பெகலேரி
குல்லு மாடாத மொஸரெல்ல ஸவிதக்ருஷ்ண. 1

கஸ்தூரி திலகவ சிஸ்தாகி பணெயொளிட்டு
மஸ்தகதலி பரவஸ்து தோரித க்ருஷ்ண. 2

முஜ்ஜகவெல்ல பொஜ்ஜெயொளகிட்டு
கெஜ்ஜெய கட்டி தப்ஹெஜ்ஜெயனிக்குத 3

நாரேரு பிச்சிட்ட சீரெகளெனெ வொய்து
ம்யாரெ இல்லதெ கரதோரெந்த ஸ்ரீக்ருஷ்ண. 4

அங்கனெயர வ்ரதபங்கவ மாடித
ரங்கவிடல பவபங்கவ பரிஹரிஸோ 5

# 34. வருவாய் நம் வீட்டிற்கு

**இராகம்:** வராளி **தாளம் :** ஆதிதாளம்

**பல்லவி**

வருவாய்நம் வீட்டிற்குக் கோபால கிருட்டிணா

**சரணம்**

ஆயர்குலச் சிறுவரை நிறுத்தித் தோள்மீதேறி
ஒலிசெய்யாது மோரெல்லாம் குடித்த கண்ணனே 1

கத்தூரி திலகத்தை நெற்றியில் இடப்பட்டுத்
தலையில் வேறொன்றைக் காட்டிய கண்ணனே. 2

மூவுலகமும் வயிற்றினுள் வைத்துச்
சதங்கை கட்டித் தப்படி வைத்திட்டாய். 3

நாரியர் வைத்த சேலைகளை மறைத்து வைத்து
நாணமின்றிக் கைகளை உயர்த்துங்கள் என்ற கண்ணன். 4

மகளிரின் விரதம் பங்கப் படுத்திய
அரங்க விட்டலா பிறவிநோயைப் போக்குவாய். 5

35. **ராகம்:** ஆரபி. **தாளம் :** அட்டதாளம்

**பல்லவி**

பாரோ மனெகெ கோவிந்த – நின்னங்கரி கமலவ
தோரோ எனகெ முகுந்தா நலிதாடு மனதலி
மாரபித ஆனந்த நந்தன கந்த.

## அனுபல்லவி

சாருதர சரீர கருணா
வாரிநிதி பவகோர நாசன
வாரிஜாஸன வந்த்ய நிரஜ
ஸார ஸத்குண ஹே ரமாபதே.

## சரணம்

நோடொ தயதிந்தென்ன கரபதும சிரதலி
நீடோ பக்தப்ரஸன்ன நலிதாடொ மனதலி
பேடிகொம்பெனொ நின்ன ஆனந்த கன்ன
மாட திரு அனுமானவ– கொண்
டாடுவெனு தவ பாதமஹிமெகளனு
ஜோடிசுவெ கரகளனு சரணகெ
கூடிஸொ தவ தாஸஜனரொளு. 1

ஹேசிவிஷயகளலி– தொளல்யாடி நா பலு
க்லேச படுவுது பல்ல– கனயுவதியர சுக
லேசு எம்புதன்னு கொல்லி மூ ஆஸெ பிடிசில்லி
ஏசு ஜனுமத தோஷதிந்தலி
ஈசுவெனு இதரொனகெ – இந்திகெ
மோஸவாயிது ஆதுதாகலி
ச்ரீச நீ கைபிடிது ரக்ஷிசு. 2

நீனெ கதியெனகிந்து உத்தரிஸொ ப்யாகனெ
தீன ஜனரிகெ பந்து – நா நின்ன ஸேவக
ஶ்ரீனிவாஸ எந்தெந்து காருண்ய சிந்து
ப்ராணபதி ஹ்ருதயாப்ஜ மண்டப
ஸ்தானதொளகபி வ்யாப்த சினுமய
த்யான கோசரனாகி கண்ணிகெ
காணிசுவெ ஶ்ரீரங்க விடல. 3.

# 35. வருவாய் வீட்டிற்குக் கோவிந்தா

**இராகம் :** ஆரபி **தாளம் :** அட்டதாளம்

## பல்லவி

வருவாய் வீட்டிற்குக் கோவிந்தா
திருவடித் தாமரை காட்டுவாய் எனக்கே
முகுந்தனே அலைபாயும் மனத்தில்
மன்மதன் தந்தையே ஆனந்தமான
நந்த கோபனின் மகனே.

## அனுபல்லவி

அழகிய மெய்யனே கருணைக்
கடலே பிறவியை அழிப்பவனே
பிரமனால் வணங்கப் படுவோய் நின்மலனே
எல்லா நற்குணங்களும் நிறைந்தவனே
திருமகளின் கணவனே.

## சரணம்

காண்பாய் கருணையோ டென்னைக்
கமலக்கை தலைமீ திருப்பதைக்
காண்பாய் அடியார்க்குக் காட்சி தருவோய்
மகிழ்ந்தாடு மனத்தில் வேண்டுவேன் உன்னை
இன்பம்நிறை தூய்மையோய்
ஐயங்கள் கொள்ளாதிரு
கொண்டாடுவேன் நின்திருவடிப் பெருமையைக்
குவிந்த கரங்களால் வணங்குவேன் திருவடியைச்
சேர்ப்பாய் நினதடியார் கூட்டத்துள். 1

தீய செயல்களைச் செய்துநான் மிகவம்
துன்பப்படுவதை அறிவாய்

இளம்பெண்களின் இன்பம்
எளிதென்பதைக் கொல்வாய்
ஆசையை அறுப்பாய்
எத்தனைப் பிறவிகளில் செய்குற்றத்தால்
நீந்துவேன் இதனுள் – இன்றைக்கு
மோசமாயிற் றானதா கட்டும்
நல்லவனே நீ கைப்பிடித்துக் காப்பாய். 2

நீயே கதியெனக் கின்று பதில்கூறு வேகமாக
எளியவரின் உறவினனே நானுன் அடிமை
சீனிவாசனே என்றும் கருணைக் கடலே
உயிர்த்தலைவ இதயமாம் மண்டபத்தில்
நிறைந்திருக்கும் சின்மயனே
தியானத்தில் வெளிப்பட்டுக்
கண்ணிற்குக் காட்சிதரும்
திருவரங்க விட்டலனே. 3

36.**இராகம்:** பௌளி **தாளம்:** ஜம்பெ தாளம்

## பல்லவி

பிடிபிடி ஸந்தேஹவனு பொடவி மனுஜரெல்ல
ஒடெயனொப்பனெ ஜககெ ரங்கவிடல

## சரணம்

ஹரிஹர விரிஞ்சரொள பரதைவவாரெந்து
பரம முனிகளு விவாதவனு மாடெ
ஜரசிஜாதன சுதன ப்ருகுவனட்டலு போத
அரிது பஹேனெந்து பத்மஜன ஸபெகெ. 1

முனிவரனு கண்டு பத்மஜகெ வந்திஸதிரலு
வனஜ கோபவனு மாடி ஜரியெ
முனி பரம தத்துவ இவனல்ல வெந்தனெ கனலி
மனசிஜ வைரிய லோககெ போதனு. 2

ஹரகண்டு ப்ருகுமுனி பரலு தன்னனுஜனெந்து
பரவஸதல்லெத்து தக்கேருஸ போகெ
ஜரிது ஹரனனு முட்ட திரெ சங்கரனு கனலி
கரத சூலவ படிது கொலலு பகெத. 3

ஹரன கோபவ கண்டு கிரிஜெ சரணவ பிடிது
கருணி முனியனு காயபே கெந்ததெனலு
மரண பயதிந்த நிர்முக்தனாகி முனிவரனு
ஸரசிஜனய்யனிப்ப வைகுண்டகெ போதனு. 4

அல்லி மஹலக்சுமிய தொடெயல்லி பவடிசி இரலு
புல்ல நாபன சரணதிந்தலொதெயெ
மெல்லனெ பாதவ பிடிது முனவரகெ பொட மட்டு
இல்லி பிஜயங்கைஸ பேகெந்தனு. 5

பரமமுனி நிம்மபத ஸோங்கலு பாவனனாதெ
சரணரஜ பரம பாவன சுலபவெ
சிரிகெ நெலெவனெயாதெ பதஸங்கதிந்தலெனெ
பரம ஹருஷதலி முனிதனுவ மரெத. 6

பரதத்வவனு கண்டு பந்து முனிவரனந்து
ஒரெயெ ரிஷிவரரி கவரவர பரிய
அரிதரா முனிவரருஹரியெ பரதைவவெந்து
நெரெ திளிது பஜிசி நரஹரிய ஹரிய. 7

கடல தனுஜரு சுரரு கடெயெ கடலொளகிர்த
மடதி மஹாலக்சுமி அவதரிசி பரலு
ம்ருட கமலஜ சுரமுக்யரனு ஜரிது சிந்துவின
தடதல்லி ஹரிய வரிசிதளு வரனெந்து 8

கரிபதிய ஸரசியொளு மொஸளெ பிடியலு பரதி
பரமபுருஷ ஜகத்பதி யெனலு
கருடவாஹனனாகி ஹரியந்தவன காய்த
பரதைவவாரு ஜகதொளகெ பேளா. 9

ராஜசூயவ தர்மசுத்மாடெ அவனக்ர
பூஜெகருஹரு சுரரொளாரெந்ததெனலு
பாஜனனு ஸத்குணனு க்ருஷ்ணனொப்பனெயெந்து
ராஜஸபெயலி தேவவ்ரத நுடிதனு. 10

கங்கெ ஈதன பாதஸங்கதி பாவனவெனலு
கங்கா தரனு பரமதாஸனெனலு
மங்களாத்மக விஷ்வ ஜன்மாதிகாரனனு
ரங்கவிடல ரேயன நெரெ நம்பிரோ. 11

# 36. உலகிற்கு உடையவன் ஒருவனே

**இராகம் :** பௌளி **தாளம் :** ஜம்பெ தாளம்

### பல்லவி

விடுவீர் விடுவீர் ஐயத்தை உலகமாந்தரே
உடையவன் ஒருவனே உலகிற் கரங்க விட்டலன்.

### சரணம்

அரிஅரன் அயன்மூவருள் மேலான தெய்வம் யாரென்று
மேன்மைமிகு முனிவர்கள் வாதிடத் தொடங்கிப்
பிரமனின் மைந்தன் பிருகுவை நெருங்கியதும்
அறிந்து வருவேனென்று பிரமன் சபைக்குப் பிருகு சென்றான். 1

முனிவன் கண்டு பிரமனை வணங்காதிருக்கப்
பிரமன் கோபம் கொண்டு நிந்தித்தான்
முனிவன் பரதத்துவன் இவனல்லன் என்றுகோபித்து
மன்மதன் எதிரியின் உலகிற்குச் சென்றான் 2

பிருகுமுனி வரவை அரன்கண்டு தம்பியெனப்
பரவசத்துட னெழுந்தாலிங் கனம்செய்யச் செல்ல

நிந்தித்தரனை நெருங்காதிருக்கச் சங்கரன் கோபித்துக்
கையிலிருந்த சூலத்தை வீசிக் கொல்ல முற்பட்டான். 3

அரனின் கோபத்தைக் கண்ட மலைமகள் பாதங்கள் பற்றிக்
கருணை காட்டி முனிவனைக் காப்பீரென வேண்டலும்
மரண பயத்திருந்து விடுதலை பெற்ற முனிவனும்
பிரமன் தந்தை வதியும் வைகுந்தம் சென்றான். 4

அங்குத் திருமகள் தொடைமேல் படுத்திருந்த
தாமரை உந்தியனைக் காலால் உதைத்தான்
மென்மையாகப் பாதம்பிடித்து முனிவனை வணங்கி
இ,ங்கே வரவேண்டும் என்று வேண்டினான். 5

மேலான முனியே நின்பாதம் பட்டதால் புனிதமானேன்
பாத தூளி மிகவும் புனிதம் எளிதானதே
செல்வத்தின் நிலையமானேன் திருவடியின் தொடர்பால்
மிக்க மகிழ்ச்சியில் முனிவன் மெய்யை மறந்தான். 6

பரதத்துவம் கண்டு வந்த முனிவனை
முனிவர்களுக் கவரவர் நிலையைக் கூறுமென
அறிந்தனர் முனிவர்கள் அரியேபர தெய்வமென்று
முற்றும் தெளிந்து புகழ்ந்தனர் நரஅரியாம் அரியை. 7

கடலை அசுரரும் தேவரும் கடையக் கடலுளிருந்து
பெண்ணாம் மகாலக்குமி அவதரித்து வரவும்
சிவன்பிரமன் முதல்தேவர்களைத் தவிர்த்துக் கடலின்
கரையில் அரியை மணந்தாள் வரனாக. 8

கசேந்திரனை நீரின்கண் முதலை பிடித்ததும் விரைந்து
பரம புருடனே உலகின் தலைவ எனஓலமிட
கருட வாகனத்தில் அரிவந் தவனைக் காத்தான்
உலகினுள் பரதெய்வம் யாரென்று கூறுவாய். 9

இராசசூயம் தருமன் செய்யும் பொழுதில்
அக்ரபூசைக் குரியவர் தேவரில் யாரெனப்

பூசைக்குரிய நற்குணன் கண்ணன் ஒருவனேயென
அரசவையில் வீடுமன் விளம்பி னானே. 10

கங்கை இவனின் பாதத்துதித்த புனிதள்
கங்கையை அணிந்தோன் மேலாம் அடியாரென
மங்கலம் நிறைந்தோன் உலகைப் படைத்தற் குரியோன்
அரங்க விட்டலனே என்று முற்றும் நம்புவீரே.' 11

37. **இராகம்:** சங்கராபரணம் **தாளம் :** ஆதிதாளம்

### பல்லவி

பக்தி பேகு விரக்தி பேகு ஸர்வ
சக்தி பேகு முந்தெ முக்திய பயசுவகெ

### சரணம்

ஸதி அனுகூல பேகு சுதனல்லி குணபேகு
மதி வந்தனாக பேகு மத ஒந்தாகிரபேகு 1

ஜபத ஜாணுவெ பேகு தபதநேமவெ பேகு
உபவாஸ வ்ரத பேகு உபசாந்தவிரபேகு. 2

சுஸங்க ஹிடியலிபேகு துஸ்ஸங்க பிடபேகு
ரங்கவிடலன்ன பிடதெ நெரெ நம்பிரபேகு. 3

# 37. முத்தி பெற விரும்புபவன்

**இராகம்:** சங்கராபரணம் **தாளம்** : ஆதிதாளம்

### பல்லவி

பத்தி வேண்டும் வேண்டாமை வேண்டும் எல்லாச்
சத்தியும் வேண்டும் முத்திபெற விரும்பு பவனுக்கே.

### சரணம்

மனைவி உதவியாய் இருக்க மகனிடம் நற்பண்பிருக்க வேண்டும்
அறிஞனாக வேண்டும் மதம்ஒன்றாக வேண்டும். 1

செபத்தில் ஈடுபாடு வேண்டும் தவத்தில் நியமம் வேண்டும்
உபவாசம் விரதம் வேண்டும் அமைதி இருக்க வேண்டும் 2

நற்சங்கம் பற்ற வேண்டும் தீயசங்கம் விட்டுவிட வேண்டும்
அரங்க விட்டலனை விடாமல் முற்றும் நம்ப வேண்டும். 3

38. **இராகம்** : சாரங்கா **தாளம்** : ஜம்பெ தாளம்

### பல்லவி

பூஷணக்கெ பூஷண இது பூஷண
சேஷ கிரிவாச ஸ்ரீவர வெங்கடேச

### சரணம்

நாலிக்கெ பூஷண நாராயண நாம
காலிகெ பூஷணு ஹரியாத்ரெயு
ஆலயகெ பூஷண துளசி வ்ருந்தாவன
விசால கர்ணகெ பூஷண விஷ்ணுகதெயு. 1

தானவே பூஷண இருவ ஹஸ்தங்களிகெ
மானவே பூஷண மானவரிகெ
ஜ்ஞானவே பூஷண முனியோகி வரரிகெ
மானினிகெ பூஷண பதிபக்தியு. 2

ரங்கனது நோடுவுதெ கங்களிகெ பூஷண
மங்களாங்கஙெ மணிவ சிர பூஷண
ச்ருங்கால துலசி மணி கொரளிகெ பூஷண
ரங்கவிடல நிம்மநாம அதி பூஷண. 3

# 38. அணிகலன்களுக்கு அணிகலன்

**இராகம் :** சாரங்கா **தாளம் :** ஜம்பெ தாளம்

**பல்லவி**

அணிகலன்களுக் கணிகலன் இதுவே அணிகலன்
பாம்பு மலையில் வாழ்பவனே வரம் தரும் வேங்கடேசனே.

**சரணம்**

நாக்கிற் கணிகலன் நராராயண நாமம்
காலிற் கணிகலன் அரிக்காக யாத்திரை
ஆலயத்திற் கணிகலன் துளசி விருந்தாவனம்
அகன்ற காதிற் கணிகலன் திருமாலின் கதைகள். 1

ஈகையே அணிகலன் இருக்கும் கைகளுக்கு
மானமே அணிகலன் மனிதர் களுக்கே
ஞானமே அணிகலன் முனிவர்க்கும் யோகிகளுக்கும்
பெண்டிர்க் கணிகலன் கணவன் பக்தியே. 2

அரங்கனைக் காண்பதே கண்களுக் கணிகலன்
மங்கலனை வணங்கும் தலையே அணிகலன்
அழகிய துளசிமணி கழுத்திற் கணிகலன்
அரங்கவிட்டலனே நின்நாமம் சீர்மிகு அணிகலன் 3

39. **இராகம்** : தேசி **தாளம்** : அட்டதாளம்

**பல்லவி**

ப்ருங்கா நின்னட்டிதனெ– ஸ்ரீரங்க மதுரெலி நிந்து
அங்கஜலுப்தகெ பூகோலங்கள தடெயனிக்கி
அங்கனேரெம்போ உல்லெம்ருகங்களிகெ குறியெச்சு
ஹிங்கி சுதைதானெ அசுவஹே கிதவா.

**சரணம்**

நின்ன நோடெ நம்ம அச்யுதன்ன கண்டந்தாயிதய்ய
சன்னிகரரஸ குசலோன்னதியொளிஹனேனோ
சிண்ணதன மொதலாகவன்ன கிதவ பல்லெவோ
கன்னகார சித்த சேரன்ன ஸ்ரீஹரியா
மன்னணெகெ மெச்சி தனுவன்னொப்பிசித முகுதெ
வெண்ணுகள விரஹாப்தியன்னெ தாடிசுவெனெந்து
தன்ன நஹவெம்போ நாவெயன்னோரிசி மோஸதி
நடுநீரொளு தொத் ஹோதனே ஹே கிதவா. 1

தம்ம நந்தகோப யசோதம்மன கண்டு பாரெந்து
ரம்மெய ரமண நின்னன்னொம்மெ களுஹிதனைஸெ
ஹம்மு கெட்டாரம்மணே ரிந்தும்மளிசுவெவோ வ்ருதா
நம்ம யம்பலின்னேனவகெ ஸ்ரீஹரிகெ
யொம்மோலட்டித லஞ்செயகம்ம நேரகுசத
குங்கும்ம கஸ்தூரிய கரதிம்மனதி சிலுகிதங்கெ
கம்ம கோலன பாணங்களும்மளி நோயிசுதிவெ
சும்மனெ பாஹோது சுலபவெ ஹே கிதவா. 2

மதுகுஞ்ச வனதல்லி மதுவைரி கொளலனூதலு
மதுர நிஸ்வன கேளி மதிராக்ஷியரெல்ல தா
மத த்யானவ பிட்டு ம்ருகமதகம் பவிடி
தைதி மதனனய்யன காணுத ஸ்ரீஹரிய
முதவேரி தலெவாகி மேதினி நிட்டிஸலாகெ
ம்ருது வாக்ய தொளெம்மப்பி அதராம்ருத போஜனம்
கொதகுவ ஸதத ஸன்னத்த நம்மனகலி
கல்லெதெயாதனெந்தோ க்ருபாளுஹே கிதவா. 3

வஜ்ராங்குச த்வஜாங்கித ஹெஜ்ஜெயன்னெ திளித
நம்மப்ஜாக்ஷியரொடனெ ரதிகஜ்ஜ துபவனதல்லி
நிர்ஜரோத்தம்ஸரொடனெ மஜ்ஜன க்ரீடெயாடுவ
ஸாயுஜ்ய சுகவெத்தலிப்புதொ ஸ்ரீஹரிய
அப்ஜபவ முனிஜன பூஜ்யனகலித ம்யாலெ
நிர்ஜீவிகளாகி கண்ண கஜ்ஜல கலகி கொண்டு
லஜ்ஜெகெட்டு தனுலதெ ஜர்ஜரிததி ஜீவிஸெ
வஜ்ஜரெதெயல்லவெ நம்மது ஹே கிதவா. 4

கத்தூரிய பட்டணிட்டு முத்தின ஜொல்லே துருபிலி
கஸ்தூரி திலக சலத்யுண்டலவெளகு
வ்ரத்தவதனதி மந்த்ஸ்மித திங்களிந்தலெம்ம
ஹ்ருத்தாப பரிஹரி ஸ்ரீஹரிய
மத்தெவக்ஷத ஸ்ரீவத்ஸ கௌஸ்துப வைஜயந்தி மாலை
ஸ்ரீ துலசி கமகமிசுத்தலிஸ வனமாலெ
ரதுன கங்கண புஜகீர்த்தியிந்தொப்புவ
புருஷோத்தமன்ன பண்ணி பருண்டெ ஹே கிதவா. 5

உத்பல ச்யாமல முதவெத்த பாவன்னவ தீடி
அத்யமல பொன்னம்பர சுத்தித
மத்தா நூபுர ஜணத்காரதி மிஞ்சியொம்ம
சித்த சிகிகெ பீயூஷசிக்த மேகதந்தெ உப்புவ ஸ்ரீஹரிய
ஹெத்த தாயி ஆப்த பந்து கோத்ர கதி நீனெ நம்ம
சித்தவெந்து நம்பி தன்ன ஹத்திலி ஸாரிதவர
ஒத்தி தாம் ரதவனேரி ஸத்வர பருவெனெந்து
மத்தக்ரூரனொட நைதித ஹேகிதவா. 6

லக்சுமி ரமணவ சூக்சும கொல்ல தேராவு
குக்சியொளு பொம்மாண்ட விவகெ மக்சிகேளந்திப்பெவு
மோக்ஷ தரஸனு அவ கோக்ஷீரதி ஸ்ரீஹரியு
ரக்ஷிஸலுதிசி ஜனரக்ஷணெகெ பால்பெண்ணெய
பக்ஷிசி நிருத நம்ம அக்ஷிகெ ஹப்பவனுணிசி
ஈக்ஷேஷாண சராசர தீக்ஷிகெ நாரஸாம்ய
வக்ஷமணராதவொ மூர்க்கரே ஹே கிதவா. 7

ஹிந்தெ மாடித ஸத்தர்மதிந்த மதுராநகரத
இந்தீவராக்ஷியரானந்த சிந்துவிகுதித பூர்ண
சந்தரனந்தொப்புவ சிரி மந்தரோத்தரனங்க்ரிய
பொந்துவ கபாக்யக்கெணெ உண்டெ ஸ்ரீஹரிய
அந்தெம்மொள ராஸக்ரீடெயிந்த பந்தபராகுவ
நொன்னெணிஸதெ ஸலஹெந்து பின்னைசி ஸாஷ்டாங்கதிந்த
வந்திபெவொ பக்த பந்துவிகெ நம்மஹ்ருதய
மந்திர தொளெந் தெந்திரெந்து ஹே கிதவா. 8

ஹெங்களேரொந்தாகி அந்தரங்கதரஸனாடித
மங்கள சரித்ரெயன்னு ஸங்கீததிம் பொகளுத்த
கங்களச்ருகளெவுத்த இங்கிதஜ்ஞ தேவ
ணங்கஸங்கத சுகவ நெனெது ஸ்ரீஹரிய
மங்கள வேதஸ்தேயாரி ச்ருங்கார கூரும நம்ம
பொங்கண்ணன் சீள்த நரசிங்கவடு பார்கவனெ
அங்கத பார்த்த கம்புதுரங்கப ரங்கவிடல
மங்கள மஹிம நமோ எம்பெவோ ஹே கிதவா. 9

# 39. வண்டு விடு தூது

**இராகம்** : தேசி **தாளம்** : அட்ட தாளம்

## பல்லவி

மன்மதன் உன்னை அனுப்பினானா
திருவரங்கன் மதுரையில் நின்று
மன்மதனாம் வேடன் மலரம்புகளைப்
பெண்டிரெனும் விலங்குகள் மீது குறியிட்டுமே
இம்சை செய்கின்றானே மோசக்காரா.

## சரணம்

உன்னைக் காணின்நம் அச்சுதனைக்
கண்டது போ லாயிற்றையா.

யாதவர்க் கரசன் நன்மை பற்றிஅறியானோ
சிறுவயதி லிருந்தவனைக் கபடனென் றறிவோமே
மோசக் காரன் உள்ளங்கவர் கள்வன் திருஅரியின்
முகமனை நம்பி உடலை ஒப்புவித்தோம்
பெண்டிரை விரகக் கடலைத் தாண்டச்செய்வேன் என்றான்
தனது நட்பென்னும் நாவாயில் ஏற்றி வஞ்சித்து
நீரின் நடுவில் துறந்து சென்றானே வஞ்சகன். 1

நந்தகோபன் அசோதரை கண்டுவா வென்று
திருமகளை மணந்தவன் என்னை அனுப்பினானோ
சிந்தனை இழந்து துன்புற்றால் வெறுமனே
நம்துன்பம் பற்றி அரியாம் அவனுக்கென்ன
பொன்மாளிகையில் அன்னநடை பெண்டிரின் முலையிலுள்ள
குங்குமம் கத்தூரி கைகளில் சிக்கியபின்
மன்மதனின் அம்புகள் துன்புறுத்து கையில்
எதுவுமின்றி வருவ தெளிதா வஞ்சகனுக்கே. 2

மதுகுஞ்ச வனத்தில் மதுவெதிரி குழலூதியதும்
மதுரையில் கேட்ட அம்பன்னகண்ணர் எல்லோரும்
மனையை மறந்து தந்தையைக் காண வந்தனர்
மதம்மிகுந்து தலைகுனிந்து நிலத்தில் நிற்கவும்
அமுதமொழி யாலணைத் திதழமிழ்த உணவிற்
குதவும் வகையில் எப்போதும் இருக்கும் எம்மை அகன்று
கல்லிதயன் ஆனானன்றோ அந்த வஞ்சகன். 3

வைர அங்குசம் கொடிபெற்ற பாதத்தை அறிந்த
பெண்டிருடன் இரதிக்கிரீடை உவவனத்தி லாடி
தேவருடன் நீர்விளையாட் டாடி
எப்போதம் இன்புறும் திருஅரியே
பிரமனும் முனிவரும் வணங்குபவன் அகன்றபின்
உயிரற்ற வராகிக் கண்ணால் காட்டைக் கலக்கி
நாணம் கெட்டு கொடிஉடல் நடுங்க உயிர்த்திருக்கும்
எங்கள் இதயம் வைரமன்றோ வஞ்சகனே. 4

கத்தூரிப் பொட்டிட்டு முத்துச்சர மணிந்து
கத்தூரித் திலகத்தருகில் அசையும் குண்டலம்
புன்னகை முகமாம் திங்களால் எங்களின்
இதய தாபத்தைப் போக்கும் திருஅரியை
இதயத்தில் கௌதுபமும் வைசயந்தி மாலையும்
துளசி கமகமவென மணக்கும் வனமாலை
இரத்தின வளையல் வாகுவளையம் அணிந்த
ஆண்டகையைப் புனைந்துரைப்ப தெளிதா வஞ்சகனே. 5

கண்நெய்தல் கருநீல உடலில் சந்தனம் பூசித்
தூய பொன்னாடை சுற்றிக் கொண்டு
மேலும் நூபுரம் ஒலியால் மிகஎங்கள்
மனமாம் மயிலுக்கு நீர்நிறை மேகம் போன்ற அரியே
பெற்றதாய் நெருங்கிய உறவு கோத்திரம் கதிநியே எங்கள்
சித்தமென்று நம்பி உன்னருகில் உரைத்தால்
உயர்ந்த தேரேறி விரைந்து வருவேனென்று
மற்றும்அக்ரூரனுடன் அடைந்தான் வஞ்சகனே. 6

திருமகளை மணந்தவனை சூக்குமம் நிறைந்தவனை
வயிற்றினுள் பிரமாண்டம் அடக்கியவனை அட்டைபோல் ஒட்டினோம்
முத்திக் கரசாம் அவன்பசும் பாலில்மனம் குளிர்ந்தான்
பொருட்படுத்துவ தென்றோ எங்களைத் திருஅரியே.
காக்க அவதரித்து மக்களைக் காக்கப் பால்வெண்ணெய்
தின்று நாட்டியமாம் பண்டிகை உணவைநம் கண்களுக் குண்பித்
திவ்வுலகில் சராசரங்களைத் தாங்கும் தேவர்க்கு
மனிதர் சமமோ மூர்க்கர்களை வஞ்சகனே. 7

முற்பிறவியில் செய்த நல்வினையால் மதுரைநகரின்
நெய்தல் கண்ணரெல்லாரும் இன்பக்கடலில் திளைக்கின்றார்
முழுத்திங்கள் போன்ற முகத்தனாம் மந்தரமலை தூக்கியோனின்
அடியை அடைவதற்குச் சமமான பேறுண்டோ அரியே.
அன்றெங்களுடன் அரசக் கிரீடை ஆடித்

தவறுகளை எண்ணாது காப்பாயென்று வேண்டி வணங்கி
வந்திப்போமா பக்தரின் உறவினர்க்கு நம்மிதயக்
கோயிலில் என்றென்றும் இருப்பாய் வஞ்சகனே. 8

பெண்டிருடன் ஒன்றாகி அந்தரங்கத்தின் அரசன் ஆடினானின்
மங்கல சரிதத்தை இசையில் புகழ்ந்தும்
கண்கள் நீரைச் சிந்தத் தேவனின்
உடல்தீண்டும் இன்பம் நினைத்துத் திருஅரியின்
அழகிய வேதத்தைக் கவர்ந்தவனைக் கொன்றோன்
அழகிய ஆமைநம்
இரணியாக்கனைக் கொன்ற நரஅரி வாமனன் பரசுராமன்
இராமன் கிருட்டிணன் சங்கு போன்ற கழுத்துள்ள
குதிரையுடைய கல்கி.
அரங்க விட்டலன் மேன்மைக்கு வணக்கம் என்போம்
வஞ்சகனே. 9

### 40. உகாபோகம்

மனெயிந்த சந்தோஷ கெலவரிகெ லோகதல்லி
தனதிந்த சந்தோஷ கெலவரிகெ லோகதல்லி
வனிதெயிம் சந்தோஷ கெலவரிகெ லோகதல்லி
தனயரிம் சந்தோஷ கெலவரிகெ லோகதல்லி
இனிது சந்தோஷ அவரவரிகாகலி நின்ன
நினெவோ சந்தோஷ எனகாகலி நம்ம ரங்கவிடல.

# 40. நின் நினைவே இன்பம்

### உகாபோகம்

வீட்டினால் இன்பம் சிலர்க்கு லகத்தில்
பொருளால் இன்பம் சிலர்க்கு லகத்தில்
வனிதையரால் இன்பம் சிலர்க்கு லகத்தில்

மக்களால் இன்பம் சிலர்க்கு லகத்தில்
இவ்வள வின்பம் அவரவர்க்காக நினது
நினைவே இன்பம் எனக்காகட்டும் எங்கள் அரங்க விட்டலனே.

41. **இராகம் :** நாதநாமகிரியை **தாளம்:** அட்டதாளம்

மருதம்சர மத பிடியதெ இஹ
பரதல்லி சுகவில்லவந்தெ.

## அனுபல்லவி

அறிது விவேகதி மரெயதெ நம்ம
குரு ராயர நம்பி பதுகிரோ.

## சரணம்

க்ஷீரவ கரெதிட்ட மாத்ரதி ஸம்
ஸ்காரவில்லதெ க்ருதவாகதந்தெ
சூரிஜனர ஸங்கவில்லதெ ஸார
வைராக்யபாக்ய புட்ட தந்தெ. 1

உபதேச வில்லத மந்த்ர ஏசு
ஜபிஸலு பலகள கொட தந்தெ
உபவாஸ வ்ருதகளில்லதெ ஜீவ
தபசியெனிசி கொள்ளலரியனந்தெ. 2

ஸார மத்வசாஸ்த்ர வோததெ குரு
தாரதம்ய ஜ்ஞான புட்டதந்தெ
ஸ்ரீரங்கவிடலன பஜிஸெ முந்தெ
பரமகதி தொர கொள்ள தந்தெ. 3

# 41. குருராயரை நம்பி வாழ்.

**இராகம் :** நாதநாமகிரியை **தாளம் :** அட்டதாளம்

## பல்லவி

மாருதத்தின் கூறானவர் மதத்தைப் பிடியாமல்
இம்மை மறுமை இன்பங்கள் இல்லையே

## அனுபல்லவி

அறிந்து விவேகத்தால் மறவாமல் நமது
குருராயரை நம்பி வாழ்வீரே.

## சரணம்

பாலைக் கறந்ததால் மட்டுமின்றித் தீயால்
சூடேற்றாமல் நெய்யா காதது போன்று
கற்றோரின் கூட்டத்தில் சேராமல் எல்லா
வைராக்கியம் நற்பே றுண்டா காதே. 1

உபதேசம் இல்லாத மந்திரம் எவ்வளவு
செபித்தா லும்பலன் கொடுக்காதது போன்றே
உபவாசம் விரதங்கள் இன்றி வாழ்வில்
தவம்செய் வோனாக நினைக்க அறியானே. 2

எல்லா மத்துவ சாத்திரங்கள் ஓதாமல்
குருதத்துவ ஞானங்கள் உண்டாகாதது போன்று
திருவரங்க விட்டலனைப் புகழாமல் முன்னால்
நற்கதி அடைய இயலாமல் ஆகுமே. 3

42. **இராகம்** : காம்போதி **தாளம்** : ஜம்பெதாளம்

## பல்லவி

மரெதெயெனோ ரங்கா மங்களாங்கா
துருகர காய்வல்லி தொண்டனாகித்தென்ன.

## சரணம்

கோலு கையலி கொளலு ஜோலு கம்பளி ஹெகல
ம்யாலெ கல்லி சீல கொங்களல்லி
காலகடகவனிட்டு காடொளிஹ பசுஹிண்ட
லாலிசுவ பாலகர ம்யாளதொளகித்தென்ன 1

கல்லு மணி கவடெயனு காடொளிஹ குலுகஜ்சி
சல்ல தொடவெய நீனு ஸர்வாங்ககெ
அல்லல்லெஸெயெ தரிசி நவிலகரிகளகொண்டை
அல்லி கொல்லரகூட சல்லாட மாடுதலி. 2

சிரிதேவி பந்து ஸேரித பளிகலோகதலி
சிரி அரஸனெந்து ஸேவகராரிவரோ
சரணாகதர பொரெவ ஸ்ரீரங்கவிடலய்ய
நரசிங்க நீனிருவ பரியு முந்தின சிரியு. 3

# 42. மறந்தாயோ அரங்கா

**இராகம்** : காம்போதி **தாளம்** : ஜம்பெ தாளம்

**பல்லவி**

மறந்தாயோ அரங்கா மங்கலம் நிறைந்தோனே
மாடுகளை மேய்ப்பதில் தொண்டனாக் கென்னை

**சரணம்**

கைகளில் கோலும் குழலும் கம்பளியும்
தோளின்மேல் கட்டுச் சோறு முன்கையில்
கடகம் அணிந்து காட்டில் பசுக்கூட்டம்
மேய்க்கும் பாலகர் கூட்டத்திருத் தென்னை. 1

மாணிக்கம் பதித்த தாயக்காய் காட்டுக் குன்றிமணி
விலையற்ற எளிய அணிகளை எல்லா உறுப்புக்களிலும்
ஒளிமயமாக அணிந்து கொண்டு மயில்தோகை கொண்டை
அங்கே ஆயருடன் சரசம் ஆடுவாய். 2

திருமகள் வந்து சேர்ந்ததும் உலகத்தில்
செல்வமிகு அரசனென் றடிமைகள் அறிவரோ
அடைக்கலம் அடைந்தாரைக் காக்கும் அரங்கவிட்டலா
ஐயாநரஅரி நீயிருக்கும் நிலையமே முந்திய செல்வம். 3

43. **இராகம்:** ரேகுப்தி **தாளம்** : ஜம்பெ தாளம்

**பல்லவி**

மானநிதி ஸ்ரீக்ருஷ்ண மதுரெகைதுவனந்தெ
ஏனு மதவம்ம நமகெ.

## அனுபல்லவி

மானவேனின்னிதகெ மானினயரெல்லரு
ஆணெயனு கட்டிவனிகட்ட நில்லுவ பன்னி

## சரணம்

கள்ளதனவே நம்ம வல்லபரு ஈசுளுவு
எல்லவன பல்லரம்ம
ஒல்லதலெ நம்ம பிட்டரெ ஒளிது வனஜாக்ஷ
எல்லிதிதரெ நாவல்லிகைதுவ பன்னி. 1

இந்துதயதி மொதலு இந்தீவராக்ஷியரு
கோவிந்தன பளிகைதுவ
ஒந்து கடெயலி குளிது வனஜாக்ஷியோர்வளகை
யந்தவல்லி கெ களுஹி கேள்விவேனு பேளுவனோ. 2

ஹரிணாங்க வதனெயரு நெரெது பருதிரெ கண்டு
பரமஹருஷதலி பந்து
ஸரிராத்ரியொளு ஹீகே பருவுதேனெந்தெனலு
எரகி பின்னைசிதரு அம்புஜதளாக்ஷனிகெ. 3

## சுலோகம்

ஹலவி காலவு நின்ன ஸ்னேஹ ஸங்கவ ஹாரைசி கொண்டிருதிஹ
லவனாவ்யூஹவ பிட்டு அக்ரூரனெடெனெ நீ மதுரெகெ போதரெ
களெயலாபெவே காந்தகேளு தினவ ஈ கந்துவின் பாதெகெ
களிகொந்து யுகவாகி தோருதிகுதோ ஜலஜாக்ஷ நீனில்லதெ.

## பதம்

ப்யாட மதுரகெ போகப்யாடெலவோ ஸ்ரீக்ருஷ்ண
பேடி கொம்பெவோ தைன்யதி
நோடு நம் ம்யாலெ தயமாடு மதனங்கீடு
மாடுவுதேனு சிதவெலோ மாதவ க்ருபாகரனே. 4

## சுலோகம்

பாலபாவதலிந்த லங்காசுகவ பகுபகெய லிந்துளுஹிதெ
லோலலோசனெ நிம்மபிட்டு புரத நாரேரிகானொலிதரெ
நீலகண்டன மெச்ச ரோடு நிஜவ நிமக்யாதகீ ஸம்சய
காலக்ஷேபவனல்லி மாடெ கிஞ்சித்யால தொளானைதுவெ.

## பதம்

பாலிசிரெனகப்பணெய பாடல சுகந்தியரெ
காலஹரணவ மாடதெ
நாளெ உதயகெ போகி நால்யெண் தினதொளு
வ்யாளெகில்லிகெ பருவெ காளா கஹிவேணியரெ. 5

## சுலோகம்

மாரனய்யனெ கேளு அல்லிருநதிஹ நாரேரு பல நிபுணரோ
நீரஜாம்பக நோடு நின்ன மனவ நிமிஷார்ததொளு ஸெளெவரோ
மாரகேளிய சாஸ்த்ரமர்மவரித ஆனாரேரு நெரெயலு
காரு பள்ளியலிப்ப கோபியர விசாரங்களம் ஸ்மரிபெயா.

## பதம்

பில்ல ஹப்பவெ சுள்ளு பிஸருஹக்ஷியரிக்சு
பில்லனுத்ஸவகெ நின்ன
குல்ல அக்ரூரன்னு களுகி கரெசிதரல்லி
வல்லபெயரன நெரெவெ நம்மெல்லரனு மரெவெ. 6

## சுலோகம்

நாரீஹார கிரீட கண்டலயுக கேயூரவல யாதிகளு
சாரு வஸ்த்ர சுகந்த புஷ்ப நிசய ஹாரங்களம் தரிஸதெ
மார கேளிய மதிலிந்தவர மனஸெம்மோ ளொந்தாகதெ
நாரேரொலுமெயுண்டே லோகதொளகெ நன்னயாதகெ தூர்விரே

## பதம்

மல்லயுத்தவ நோட் பேகெனுத நம்மாவ
அல்லிகெ கரெஸலதகெ
இல்லதபவாத ஈ சுள்ளு சுத்திகள நீ
வெல்லி ஸ்ருஜி சிதிரி ஸரியில்ல நிமகிளெயொளகெ. 7

## சுலோகம்

வாரிசாம்பக வாரிஜாரிவதன வராசிஜாவல்லப
வாரிவாஹநிபாங்க வாஸவனத வாகெம்ம தொந்தாலிஸோ
வாரிஜோத்பவனய்ய நின்ன விரஹ வாராசியொளு முளுகிஹ
நாரீனிசயவ பாருகாணிசு க்ருபா நாவெயலிந்தெம்மனு

## பதம்

மாரனெம்புவனு பலுக்ரூர நம்மகலி நீ
ஊரிக்ஹோதுதனு கேளி
வாரிஜாஸ்த்ரவனு எதெகெரிஸெம்மனு பிடதெ
யோருவனு அஹோ ராா்ரியலி தபிசுத. 8

## சுலோகம்

நீலகுந்தளெ கேளு மனெயொளா நெலுவின ம்யாலின
பாலு பெண்ணெய கத்து மெத்து பஹள காலங்களம் களெதெனெ
பாலெ மன்மத பாணதெச்சு தபிஸெ பகு பகெயலிந்துளுகிஹித
லோல லோசனெ நிம்மொளானு பஹள ஜாலத்வமம் மாள்பெனெ.

## பதம்

பட்ட கங்களெ நிம்ம பிட்டு களிகிரலா ரெ
துஷ்ட கம்ஸனு கரெஸலு
அட்டிதரெ போகதிரெ சிட்டினிந்தலிவ்ரஜகெ
அட்டுளிய மாடுவனு அம்புஜ சுகந்தியரெ. 9

## சுலோகம்

பதி சுத பித்ரு முக்ய ப்ராத்ரு பாந்தவரு எம்ப
அதிசய நமகில்ல அலிஸோ மாதனெல்ல
ரதிபதிபித நீனே ராத்ரியொளு கொளலனூதெ
க்ஷிதிபதி நின்னெடெகெ க்ஷப்ரதிம் பந்தெவல்லோ.

## பதம்

பாலதனதலி யமுனா தீரதலி நீ வத்ஸ
பாலனெய மாடுதிரலு ஆ
கால மொதலாகி ஈவ்யாளெ பரியந்தரவு
காலு களிககலதிஹ காந்தெயர ய்ாஜிசுவரெ. 10

## சுலோகம்

பரிபரியலி நிம்ம பாடிசி நோடெ முன்ன
கருணகெ கொரதில்ல காந்தெ கேளென்ன ஸொல்ல
த்வரிதமி பாரதலெ தடெது நா நிந்தரல்லெ
ஸரஸஜபவ மாரராணெ காணெ ப்ரவீணெ.

## பதம்

ஹரிணாங்க வதனெயரெ ஹருஷபூரிதராகி
கரெது தாம்பூலவித்து
களுஹிரென்னனு நிம்ம கலுப்தகாலகெ பந்து
நெரெயதித்தரெ நான பரம புருஷோத்தமனெ. 11

## சுலோகம்

மாரனெம்புவனந்தெ மமிடதனு சிவன மூரனெ கண்ணிலி
நாரேரில்லதெ நாபியிந்த படெத ஆ ப்ரய்மனெம் பாதன
நாரி ஈர்வ குமாரராணெ ஹரியு தானிட்டனேனெம்பெவெ
மாரி ஹொரகின யொரகெ ஹோயிதெம்போ தீராயிதெ பாவுகி.

### பதம்

ஹலவு மாதுகள்யாகெ ஜலஜாக்ஷ நின்னபத
நளினகள நெரெ நம்பிஹ
ஒலுமெயல்லிருதிப்ப லலனெயரனெல்லரனு
ஸலஹோ ஸலஹோ ஸலஹதெமாணு ரங்கவிடலரேய. 12

## 43. என்ன வழி நமக்கு

**இராகம் :** ரேகுப்தி **தாளம்:** ஜம்பெ தாளம்

### பல்லவி

மானநிதி கண்ணன் மதுரைக்குச் செல்வானாம்
என்னவழி அம்மா நமக்கு,

### அனுபல்லவி

இதற்காகப் பெண்டி ரெல்லாரும்
ஆணையிட் டவனைத் தடுத்து நிற்போம் வருவீர்.

### சரணம்

கள்ளத்தனத் தால்நம் வல்லவன்
இத்தகு சூழ்ச்சியெல்லாம் வல்லவ ரம்மா
இயலா தெம்மை விடுவது விரும்பித் தாமரைக் கண்ணனே
நீஎங்குச் செல்வாயோ அங்குநாம் வருவோம் வருவாய். 1

இன்று வைகறைமுதல் தாமரைக் கண்ணார்
கோவிந்தனின் அருகே செல்வோம்
ஒருபக்கத் திலமர்ந்து தாமரைக் கண்ணி ஒருத்தியை
அவனிடம் அனுப்பினால் கேட்பானோ பேசுவானோ. 2

திங்கள் முகத்தியர் நிறைந்து வருவதைக் கண்டு
மிக்க மகிழ்ச்சியுடன் வந்து
நடுஇரவில் இவ்வாறு வந்தேன்எனக் கேட்டதும்
வணங்கி வேண்டினர் தாமரைக் கண்ணனிடம். 3

## சுலோகம்

நீண்ட காலமாக நின்நட்பின் இனிமையை நுகர்கின்றோம்
பெண்டிரின் வியூகத்தைவிட் டக்ரூரனுடன்
நீமதுரைக்குச் சென்றால்
களைந்து கொள்ள இயலாது தினமும் மன்மதன்
தொல்லையை
நாழிகை ஒருயுகமாகக் தோன்றுமே
தாமரைக் கண்ணா நீயின்றி

## பதம்

வேண்டா மதுரைக்குப் போகவேண்டா கண்ணனே
வேண்டிக் கொள்வோம் பணிவுடன்
பார்எங்கள்மேல் கருணைகாட்டு மன்மதனுக்குக்
குறியாக்குவ துசிதமோ மாதவா கருணை நிறைந்தோனே. 4

## சுலோகம்

இளம்பருவப் பாவனைகளால் உறுப்புகளின்
இன்பம் பலவகையாக உள்ளன
இன்ப வெறிதரும் கண்ணனே உம்மைவிட்
டூர்பெண்டிர்க் குதவிபுரியின்
நீலகண்டன் புகழப் பார்ப்பாய் உண்மையை
உமக்கேன் சந்தேகம்
காலத்தை அங்கே கழிப்பேன் சிறிது
காலத்திற்குள் நானடைவேன்.

## பதம்

எனக்காணை இடுங்கள் நன்மணம் பெற்றவரே
காலத்தை வீணாக்காமல்
நாளை வைகறையில் சென்று
நாலெட்டு நாட்களுக்குள்
குறித்த வேளையில் இங்கு வருவேன்
கருநாகம் போன்ற கூந்தல் உடையவரே. 5

## சுலோகம்

மாரனாம் ஐயகேள் அங்குள்ள பெண்டிர் மிகநிபுணரோ
தாமரைக் கண்ணனேபார் நின்மனத்தை
நிமிடத்திற்குள் கவர்வரோ
மாரகேள் சாத்திர மருமங்கள் அறிந்த
நாரியர் நிறைந்ததும்
எளிய ஊர்களில் வாழும் கோபியர்களின் செய்திகளை
நினைப்பாயோ.

## பதம்

வில்விழாவே பொய்யானது
கரும்புவில் விழாவிற் குன்னைக்
கபட அக்ரூரனை அனுப்பி அழைத்ததும்
வல்ல பெண்களை நெருங்குவாய்
எங்களெல்லோ ரையும் மறந்து. 6

## சுலோகம்

புதிய மாலை கிரீடம் குண்டலம் தோகை
வளையம் முதலாக
மனங்கவர் ஆடைகள் மணமிகு மலர்மாலைகளும் அணியாமல்
மாரனேகேள் சொல்லால் அவர்மனம் எங்களுள் ஒன்றாகாமல்
அன்பு பெண்டிரிடம் இருக்க எங்களைத் தூற்றுவதேன்.

## பதம்

மற்போர் காண வேண்டுமென் றெங்கள் மாமன்
அங்கே அழைக்க அதற்கே
இல்லாத அபவாதங்களாம் இந்தப்பொய்ச் செய்திகளைநீ
எங்கே மறப்பாய் சரியன் றுமக்கிந்த உலகத்தில். 7

## சுலோகம்

தாமரைக் கண்ணனே திங்கள் போலும்
முகத்தோனே திருவின் கணவனே
மேகம் போன்ற உடலினனே இந்திரன்
கொண்டாடுவோனே வாக்கால் எம்மொ டொன்றாவாய்

பிரமன் தந்தையே நினைப்பிரிந்த
விரகத்தில் மூழ்கியிருக்கும்
பெண்டிர் வட்டத்தைக் கரையேற்று
கருணை நாவாயால் எங்களை.

## பதம்

மாரன் என்போன்மிகக் கொடியோன்
எங்களை விடுத்து நீ
ஊருக்குச் செல்வதைக் கேட்டால்
தாமரை அம்பினை மார்மீது விடுக்காமல்
போராடுவான் பகலும் இரவும் துன்புறுத்தி. 8

## சுலோகம்

கருங்குழலாய் கேள்உங்கள் மனையில் உறியிலுள்ள
பால்வெண்ணெய் திருடி மெதுவாகப் பலகாலம் கழித்தான்
இளையவளே மன்மதன் அம்பு தாக்க
பலவகையில் மிகவும் துன்புற்றாய்

இன்பவெறி யூட்டும் கண்ணனே நின்னிடம்பல
ஏமாற்றங்கள் கண்டேன்.

## பதம்

அகன்ற கண்ணினாய் உம்மைப் பிரிந்தொரு
கணமும் இருக்க லாற்றேன்
தீயவன் கஞ்சன் அழைத்து
நெருங்கினால் போகாதிரு கோபத்தால் கோகுலத்தில்
தொல்லை தருவான் மன்மதன் நன்மண மங்கையரை. 9

## சுலோகம்

கணவன் மகன்தந்தை முக்கிய மானவர்
சகோதரர் உறவினரென்னும்
அதிசயம் எமக்கில்லை புரப்பாய் சொற்களை
இரதிகணவனின் தந்தைநீயே இரவில் குழலூதுவாய்
உலகத் தலைவனாம் நின்னிடம் விரைந்து வந்தேன் அன்றோ.

## பதம்.

பிள்ளைப் பருவத்தில் யமுனைக்கரையில் நீ
மாடு கன்றுகளை மேய்த்திருக்கையில்
அந்தக் காலம்முதல் இந்தக் காலம்வரை
காற்கண மாயினும் அகல்வரோ மனைவியரைத் துறந்து. 10

## சுலோகம்

முறைமுறை உம்மோடு வாதிட்டால் உனது
கருணைக்குக் குறைவில்லை மனைவியே
கேளென் சொல்லை.
விரைந்து வராவிடில் தடைப்பட்டு நின்ற இடத்தில்
பிரமன் மன்மதன் ஆணை காண்பாய் அறிவு பெற்றாய்.

## பதம்

திங்கள் முகத்தியர் மகிழ்ச்சி மிகுந்தவராகி
அழைத்துத் தாம்பூலம் கொடுத்தே
அனுப்பின ரென்னை நீங்கள் குறித்த காலத்தில் வந்து
சேரா திருப்பின்நான் மேலான ஆண்டகையா. 11

## சுலோகம்

மாரன் என்போன் அன்றே மடிந்தான்
சிவனின் மூன்றாவது கண்ணால்
மனைவியின்றி நாபிக் கமலத்தில் பெற்ற
பிரமன் ஆகிய

இரண்டு பிள்ளைகள்மீ தானைணவைத்தான்
அரியென் றெவ்வாறு கூறுவோம்
மாரி வெளிக்கு வெளியே ஓடிற்று
தீர்ந்த தச்சம் என்பாய்.

## பதம்

பலபேச்சுக்க ளெதற்கோ தாமரைக்
கண்ணனேநின்
பாதத் தாமரைகளை முற்றும் நம்பினோம்
அன்பினுள் இருத்துவாய் பெண்கள் எல்லோரையும்
காப்பாய் காவாது விடுப்பாய் அரங்க விட்டல ராயனே. 12

44. **இராகம்:** பாடி. **தாளம் :** ஆதிதாளம்

## பல்லவி

மாயாமத வொளிதல்ல நினகெ
நாயி ஜன்மவு பாரதெ பிடதல்ல.

## சரணம்

ஜககெ காரண தேவதா னிரலு
பொகளிகொம்பெ பேதவில் லெந்து
தெகெவனு யம பென்ன சர்மஇது
நகெயல்ல கேளோ திளியொ துஷ்கர்ம 1

பேதவில் லெந்து திளிதுநீ
மாதிகர மனெயல்லி உணலொல்லெ யாகொ
ஸாதிசி நோடலு நினகெ இஷ்டு
பதுகு ண்டாதரு உசுரலின்யாகொ 2

அக்க தங்கிய ரிரலு நீனு
ரொக்கவிக்கி மதுவெ ஆகத்யாகொ
சிக்கதங்கி தாயி மொதலு நின்ன
லெக்கதலி நோடலு ஒந்தல்ல வேனோ. 3

சங்கர மதகெ நீ யொந்தி
பங்கதொள பீளபேகல்லொ
ஸங்கட கொள காதியல்ல நின்ன
பிங்கவ முரிவரு யமனவரல்லொ. 4

இன்னாதரு பேதமதவன நீனு
செந்நாகி திளியொ ரங்கவிடலனு
தன்ன தாஸ்யவனு கொட்டு
உன்னந்த பதவீவனு நினகெ. 5

# 44. மாயாமதம் ஏற்றதன்று.

**இராகம்:** பாடி **தாளம்:** ஆதிதாளம்

### பல்லவி

மாயாமதம் ஏற்றதன் றுனக்கே
நாய்ப்பிறவி வராமல் விடாது.

### சரணம்

உலகின் காரணமாம் தேவன் அவனிருக்கக்
குரைப்பாய் வேற்றுமை இல்லை யென்றே
உரிப்பான் காலன் அழகிய தோலைஇது
நகைச்சொல் லன்றுகேள் தெளிவாய் தீயதை. 1

வேற்றுமை இல்லை யெனத்தெ ளிந்தநீ
புலையர் மனையில் உண்பதில்லை எதற்கோ
சாதித்துப் பார்ப்பின் உனக்கிவ் வளவு
வாழ்வுண்டா னதுயிரால் இன்னும் எதற்கோ. 2

தமக்கை தங்கை இருக்கையில்நீ
மகிழ்ச்சிமிகத் திருமணம் ஆவ தெதற்கோ
சின்ன தங்கைதாய் முதலாக நின்னின்
எலும்பை முறிப்பார் காலனார் அல்லவா ? 4

இனியாவது வேற்றுமை மதத்தைநீ
நன்றாகத் தெளிவாய் அரங்கவிட்டலன்
தனக்கடிமை யாவதைக் கொடுத்தே
உயர்பதவி கொடுப்பான் உனக்கே. 5

45. **இராகம்:** சுருட்டி **தாளம்:** ஆதிதாளம்

**பல்லவி**

மோஸ ஹோதெனல்ல ஸகலவு வாசுதேவ பல்ல
பாசு ராங்க ஸ்ரீவாசுகி சயனன
ஸாசிர நாமவ லேஸாகி படிஸதெ.

**சரணம்**

துஷ்ட ஜனர கூடி நானதி
ப்ரஷ்ட னாதெ நோடி
ச்ரேஷ்டரூப முரமுஷ்டிக வைரிய
நிஷ்டெயிந்த நா த்ருஷ்டிசி நோடதெ. 1

காயவு ஸ்திரவல்ல என்னொளு
மாயெ தும்பிதல்ல
ப்ராயமததி பரஸ்த்ரீயர கூடாடி
காயஜஜனகன காயன மாடதெ. 2

கங்களிந்தலி நோடோ தேவ
நின்னங்க ஸங்கவ நீடோ
மங்கள மஹிம ஸ்ரீரங்கவிடல முந்
தங்க பாரதந்தெ நீ தயமாடோ. 3

# 45.இழந்தேன் அனைத்தும்

**இராகம்:** சுருட்டி **தாளம்:** ஆதிதாளம்

**பல்லவி**

இழந்தேன் அன்றோ அனைத்தும் வாசுதேவன் அறிவான்
ஒளிமய உடலினன் பாம்பணைப் பள்ளியானின்
ஆயிரம் நாமங்களை நன்றாக ஓதாமல்.

## சரணம்

தீயோருடன் சேர்ந்து நான்மிக
இழிந்தவ னானேன் காண்பாய்
உயர்உருவன் முரமுட்டிகர் பகைவனை
நிட்டையில் நானாழ்ந்து பார்க்காமல். 1

உடல்நிலை யான தன்றென்னுள்
மாயை நிறைந்த தன்றோ
வாழ்நாள் முழுவதும்பிறன் மனைவியோடு கூடியாடி
மன்மதன் தந்தையைப் புகழ்ந்து பாடாமல். 2

கண்களால் காண்பாய் தேவாநின்
னுறுப்புக்களைத் தழுவும் பேற்றினைத் தருவாய்
மங்கலமாம் பெருமையோய் அரங்க விட்டலா
உடலெடுக் காமல்நீ கருணை செய்வாய். 3

46. **இராகம்:** வராளி **தாளம்:** ஆதிதாளம்

## பல்லவி

பாகசாஸன வந்த்ய போகதனகளின்னு
ஸாகுஸாகய்ய க்ருஷ்ண.

## சரணம்

கொல்ல பாலகரு வெல்லரு கூடிகொண்டு
குல்லு மாடதெ மொஸரெல்லஸவிதெயந்தெ க்ருஷ்ண. 1

பூதனி மொலெயன்னு பீதியில்லதெ உண்டு
காதவ மாடிதெ மாதனாடய்ய க்ருஷ்ண 2

துஷ்ட கம்ஸன நீனுகஷ்டவில்லதெ மடுஹி
முஷ்டி கனகொந்தெ த்ருஷ்டி தாகீதந்து. 3

நிர்ஜன ஸ்தளதி யமளார் ஜ்னரன்னு மடுஹி
துர்ஜனார கொந்தெ அர்ஜுன ஸாரதி. 4

அங்கி டொப்பிகெ உங்குர உடிதார
ச்ருங்கரிசி கொண்டு ரங்கவிடல பாரோ. 5

# 46.குறும்புகள் போதும் கண்ணா.

**இராகம் :** வராளி. **தாளம்:** ஆதிதாளம்

## பல்லவி

இந்திரனால் வணங்கப்படுவோய் குறும்புகள் இன்னுமோ
போதும் போதும் ஐயா கண்ணனே.

## சரணம்

இடைக்குலச் சிறுவர் நீங்கள் எல்லாரும் சேர்ந்தே
ஓசையின்றித் தயிர்முழுவதும் குடித்தாய் கண்ணா. 1

பூதனியின் உயிரைப் பயமின்றி உண்டு
கொலைபுரிந்தாய் பேசுவாய் கண்ணா. 2

தீயவன் கஞ்சனை நீதுன்பமின்றிக் கொன்று
முட்டிகனைக் கொன்றாய் கண்ணேறு பட்டதேஅன்று. 3

ஆளற்ற இடத்தில் அரளிமரம்மீது மோதித்
தீயவரைக் கொன்றாய் பார்த்த சாரதியே. 4

சட்டை தொப்பி மோதிரம் ஆடையணிந்து
சிங்காரித்துக் கொண்டரங்க விட்டலா வருவாய். 5

47. **இராகம்:** வராளி. **தாளம்:** ஜம்பெ தாளம்

## பல்லவி

யாகெ புட்டிசிதி நீ ஸாகலாரதெ ஜக
தேக காரண புருஷனே க்ருஷ்ண.

## அனுபல்லவி

ஏனோ விஷ்ணுயெம்பொ வாகு சிந்திஸெ இந்த
காகு மாடுவுதுசிதவெ க்ருஷ்ண.

## சரணம்

ஒடலிகன்னவ காணெ உடலு அரிவெய காணெ
கடகடனெ நடுகுதிஹெனோ க்ருஷ்ண
மடதிமாதெயரபிட்டு ஒடஹுட்டிதவர
பிட்டடவி பாலாதெனல்லோ க்ருஷ்ண
குடுதெ கொடுவவரில்ல நுடியகேளுவரில்ல
படதனவு கங்கெடிசிதோ க்ருஷ்ண
கடெ யாயிசுவர காணெ நடும டுவினொளுகை
பிடதெ தடவனு ஸேரிஸோ க்ருஷ்ண. 1

கொட்டவர ஸாலவனு கொட்டு தீரிஸதவர
பொட்டெயொளு புட்டலாய்தோ க்ருஷ்ண
எஷ்டு ஜனுமதி மனமுட்டி மாடித கர்ம
சுட்டீக உணிசுதிஹுதோ க்ருஷ்ண
ஸ்ருஷ்டியொளகென்னந்த கெட்ட பாபிஷ்டஜன
கட்டிஸலில்வேனோ மனமுட்டி பஜிசி யிந்தெ
எஷ்டு ஜன பதுகலில்லோ க்ருஷ்ண. 2

ஆளுதேயவு கேணு கீளாகி பல்மொரெது
கூள ஜனர மனெகெ க்ருஷ்ண
ஹாளு ஒடலிகெ துத்து கூளிகெ ஹோகி அவர

வாலைஸலாரெனல்லோ க்ருஷ்ண
பாளுஈ பரியாதம்யாலெ பூமியலி பஹல
கால களெயுவுதுசிதவெ க்ருஷ்ண
ஆலஸ்ய மாடதலெ ஈவ்யாள்யதலி அரிது
பாலிஸலு பஹ கீர்த்தியோ க்ருஷ்ண. 3

எந்தெந்து சிரி அரஸனெந்து ச்ருதி ஸாருதிதெ
பந்துதீகெனு சிரியோ க்ருஷ்ண
ஒந்தொந்து நிமிஷ யுககிந்ததிக வாகுதிதெ
முந்தோரத் ஹாங்காயிதோ க்ருஷ்ண
ஸந்தேஹவில்ல கோவிந்த ஸ்ரீபாததாணெ
தந்தெ பஜிசுவர ஹீகெந்து வாருதெ கேளி
பந்துதப கீர்த்தி மாது க்ருஷ்ண. 4

ப்ருதிவியொளகுதிசி முவத்தாரு வத்ஸர ஈ
ரீதி காலகளெதெனோ க்ருஷ்ண
வ்யர்தவாயிது ஜனும ஸார்தகாகது கண்ணு
கத்தலெகவிசிதல்லோ க்ருஷ்ண
இத்த பாரெந்தெந்து ஹத்திலிகெ கரெதொந்து
துத்து கொடுவர காணெனோ க்ருஷ்ண
விஸ்தரிஸலாரெ இன்னெத்தபோகலா நின்ன
சித்தவ்யாதகெ கரகதோ க்ருஷ்ண. 5

ஆருகதி நினகதிகராரு தாருணியொளகெ
தோரிஸை கருணாநிதியெ க்ருஷ்ண
ஈரேளு லோககாதார வாதவகெ பலு
பரவாதவனெ நானு க்ருஷ்ண
மீரி நுடியலு ஹதினாரெரடு பல்களு
பேரு களகளியிதோ க்ருஷ்ண
தோரு பங்காபுரத தாருணிபுரவாஸ
வீர நரசிம்ஹதேவ க்ருஷ்ண. 6

ஹரியாத்ரெ மாடலில்ல ஹரிமூர்த்தி நோடலில்ல
ஹரிதாஸ ஸங்கவில்ல க்ருஷ்ண

ஹரிஸ்மரணெ மாடலில்ல சுரநதிய மீயலில்ல
தரணிஸ ஞ்சஸலில்ல க்ருஷ்ண
அரிதரிது மன விஷயகெரகி ஹருஷவ தாளி
பரிதாயிதாயுவெல்ல க்ருஷ்ண
மருதாந்தகர்கத சிரியரஸ ஹரியெந்து
ஹருஷாப்தி மக்னனல்ல க்ருஷ்ண. 7

ஹரிநாராயணனெந்து கரவெத்தி முகிதொம்மெ மை
மரெது நடிஸலில்ல க்ருஷ்ண
ஹரிஸ்மரணெ ஸ்மரிசி சிரிதுளசி புஷ்பவனு
கரவெத்தி நீடலில்ல க்ருஷ்ண
ஸர்வஜ்ஞ ராய்ரு விரிசிசித க்ரந்தவனு
தருசனவெ மாடலில்ல க்ருஷ்ண
ஸ்மரிஸலாரத பாப ஸ்மரணெ பூர்வகமாடி
ஸ்திரபாரனாதெனல்லோ க்ருஷ்ண. 8

துருளஜனரொடனாடி ஹரிணாக்ஷியர கூடி
ஸரியாரு எந்து திருகி க்ருஷ்ண
நிருத க்சுத்ரவ நெனெசி நெரெதூரமாரி
ஹெக்கரெ கோணனந்தெ திருகி க்ருஷ்ண
பரர அன்னவ பயசி சரீரவனெ போஷிசி
சிரபலிது சிலெகெ ஹாயிது க்ருஷ்ண
சரணவத்ஸலனெம்போ பிருது பஸரிசு வந்த.
கருண இன்னெந்திக ஹதோ க்ருஷ்ண 9

உரியொளகெ பித்து சரீரவன களெயலோ
பருவதனோர்யுருளலோ க்ருஷ்ண
கரளமடுவனெ துமுகி உரகபண துளியலோ
எரடொந்து சூலக்ஹாயலோ க்ருஷ்ண
கொரளிக் ஹக்கவ ஹாகி மரவேரி கரபிடலோ
கரகஸதி சிரகொய்யலோ க்ருஷ்ண
கருண வாரிதி என்ன கரபிடிது ஸலஹதிரெ
தரெயொளுத்தரிபர் யாரோ க்ருஷ்ண. 10.

எஷ்டு ஹேளலி என்ன கஷ்ட கோடிகளன்னு
சுட்டீக பெய்சுதிஹவோ க்ருஷ்ண
கஷ்டபட்ட மகனெந்து த்ருஷ்டி நீரொரெஸென்ன
பொட்டியொள் பிடிவர் யாரோ க்ருஷ்ண
க்ருஷ்ண நாம வஜ்ரக்கெ பெட்ட துரிதவ நீகி
தட்டனெ பந்து நீனு க்ருஷ்ண
இஷ்டவனு ஸலிசி குட்டலி ஸ்ரீரங்க
விடல என்ன காயோ க்ருஷ்ண. 11.

## 47. ஏன் பிறக்கச் செய்தாய்?

**இராகம்:** வராளி. **தாளம்:** ஜம்பெ தாளம்

### பல்லவி

ஏன்பிறக்கச் செய்தாய் நீகாக்க இயலாமல்
உலகிற்கொரு காரண னான கண்ணனே!

### அனுபல்லவி

எதற்கோ விட்டுணு என்ற பெயர் சிந்திப்பாய்
இவ்வாறு வார்த்தை தவறினால் கண்ணனே!

### சரணம்

உடலிற் குணவு காணேன் உடுக்க ஆடை காணேன்
கடகடவென நடுங்குகின்றேன் கண்ணா
மனைவி தாயை விட்டுடன் பிறந்தோரை விட்டுக்
காட்டைச் சார்ந்தவ னானேன் கண்ணா
பாத்திரம் கொடுப்பவரில்லை சொல்லைக் கேட்பவரில்லை
ஏழ்மை கண்களைக் கெடுத்ததோ கண்ணா
ஊன்று கோல்தரு பவரைக் காணேன்
நடுக்கடலில் கைவிடாமல் கரைசேர்ப்பாய் கண்ணா! 1

கொடுத்தவரின் கடனைத் கொடுத்துத் தீர்க்காதவர்
வயிற்றினுள் பிறத்த லாயிற்றோ கண்ணா
எத்தனையோ பிறவிகளில் மனம் சேர்ந்து
செய்தவினைகள்
ஒன்றுசேர்ந் துன்பிக்கின்றனவோ கண்ணா
பிறந்தவரில் என்னைப் போன்ற பாவியைப்
பிறக்கச் செய்ய வில்லையா கண்ணா
விட்டலனே உன்னைமனம் விரும்பிப் புகழ்ந்து
முன்பே எத்தனைபேர் வாழ்ந்தனர் கண்ணா. 2

நல்லஉடல் முதுகு வளைந்து பல்முறிந்
திழிந்த மக்களின் மனைகளில் கண்ணா
பாழான் உடலிற் குணவுகூழ் வேண்டி
அவர்க்கடிமை செய்ய இயலுமோ கண்ணா
வாழ்விவ்வா றானபின் னுலகின் கண்பல
காலம் கழிப்பது செய்யாமல் இந்தவேளை அறிந்து
காப்பது மிகுந்த பெருமையே கண்ணா. 3

திருவினரச னென்று வேதம் என்றென்றும் கூறுகையில்
இப்போதெனக்கு வந்திருப்ப தென்னசெல்வம் கண்ணா
ஒவ்வொரு நிமிடமும் உகத்தைவிட மிகுந்துள்ளதே
பின்வரும் காலம் எவ்வா றிருக்குமோ கண்ணா
ஐயமில்லை கோவிந்தா திருவடிமீ தாணை
தந்தைநீ காவா திருப்பின் கண்ணா!
முன்பு புகழ்வோர் இவ்வாறெனச் சொற்கேட்பின்
வந்தது களங்கம் புகழ்க்குக் கண்ணா.! 4

உலகில் பிறந்து முப்பத்தா றாண்டுகள்
இவ்வாறு காலம் கழித்தேன் கண்ணா
வீணாயிற்று பிறவி பயனற்றன கண்கள்
இருளெங்கும் சூழ்ந்த தன்றோ கண்ணா
இங்கே வாவென் றருகில் அழைத்தே
உணவு தருபவரைக் காணேண் கண்ணா
விளக்க இயலேன் இனியெங்குச் செல்வேன்
நின்சித்தம் எதற்கோ இளகாதிருப்பது கண்ணா. 5

காட்டுவாய் உன்னைவிட உயர்ந்தோர்யார் இவ்வுலகில்
காட்டுவாய் அருளின் நிதியாம் கண்ணா
பதினான் குலகிற்கு மாதாரமான உனக்குமிகச்
சுமையாக ஆனேனோ நானே கண்ணா
மீறிப்பேசின் முப்பத்திரண்டு பற்களும்
வேர்களைந்து கடகடவென ஆடுபவவோ கண்ணா
காட்டு பங்காபுரத்தின் தாருணிபுர வாசனே
வீர நரசிம்ம தேவனே கண்ணா. 6

அரியாத்திரை செல்லவில்லை அரிஉருவைக் காணவில்லை
அரியடியார் சங்கம் இல்லை கண்ணா
அரியை நினைக்கவில்லை கங்கையில் மூழ்கவில்லை
நிலத்தில் எங்கும் செல்லவில்லை கண்ணா
அறிந்துமனம் இந்திரிய இன்பத்தி லிறங்கி
வீணாயிற்று வாழ்நாள் முற்றும் கண்ணா
மாருதத்தின் உள்ளிருக்கும் திருவின் அரசனரி யென்று
மகிழ்ச்சிக் கடலில் மூழ்கினேனல்லன் கண்ணா. 7

அரிநாராயணா யென்று கைகுவித் தொருமுறை
மெய்ம்மறந்து மகிழ்ந்தா டவில்லை கண்ணா
அரியை நினைத்த ழுகுதுளசி மலர்களைக்
கைகளால் தூவி வணங்கவில்லை கண்ணா
மத்துவா சாரியர் அருளிய நூல்களின்
காட்சியே கண்ட தில்லை கண்ணா
நினைக்கக் கூடாத பாவங்களை நினைந்துசெய்து
நிலையான சுமையானேன் அன்றோ கண்ணா. 8

காமுகரைச் சேர்ந்து மான்கண்ணா ரைக்கூடிச்
சமம்யார் எனக்கென் றலைந்து கண்ணா
நாடொறும் புறங்கூறி ஊரின் மாரிக்கு
விடுத்த எருமைபோல் அலைவேன் கண்ணா
பிறர்மனை உணவு விரும்பி உடலையே பேணி
தலையோ வெறுமை யாயிற்று கண்ணா
அடியாரை விரும்புபவன் எனும்பெயர் மெய்ப்பிக்கக்
கருணை என்றைக் காகுமோ கண்ணா. 9

தீயின்கண் விழுந்தே உடலைக் களைவேனோ
மலையின் மீதேறி உருள்வேனோ கண்ணா
விடம் நிறை மடுவில் விழுந்து பாம்பின்படம்பிடிப்பேனோ
திரிசூலத்தால் உடலைக் குத்தவோ கண்ணா
கழுத்தில் கயிறுகட்டி மரமேறிக் கைவிடவோ
ரம்பத்தால் தலையை அறுக்கவோ கண்ணா
கருணைக் கடலேயெனைக் கைப்பிடித்துக் காவாவிடில்
நிலவுலகில் காப்பவர் யாரோ கண்ணா. 10.

எவ்வளவு கூறுவதென் கோடி துன்பங்களைச்
சுட்டிப் போதே அழிக்கவோ கண்ணா
துன்புற்ற மகனென்று பார்வை நீராட்டி
வயிற்றில் பிடிப்பவர் யாரோ கண்ணா
கண்ணனாம் வைரத்தில் துன்பமலை நீங்க
உடனே வருவாய் நீயே கண்ணா
நினைத்ததைக் கொடுத்தருள் கரவில்லாத் திருவரங்க
விட்டலனே என்னைக் காப்பாய் கண்ணா. 11.

48) **இராகம்:** நாட்டை **தாளம்:** சாபு தாளம்

## பல்லவி

ரங்கநாதனே நோடுவ பன்னிஸ்ரீ

## அனுபல்லவி

ரங்கனதிவ்ய விமானதல்லிஹன

## சரணம்

கமனீயகாத்ரண கருணாந்தரங்கன
காமிதார்த்தவீவ கல்பவ்ருக்ஷன
கமலதள நேத்ரன கஸ்தூரி ரங்கன
காமதேனு காவேரி ரங்கன. 1

வாசுகிசயனன வாரிதிநிலயன
வாசுதேவ வாரிஜநாபன
வாஸவாதி பக்த ஹ்ருதயாம்புஜதல்லி
வாஸவாகிருதிஹ வசுதேவசுதன. 2

மங்களகாத்ரன மஞ்சுள பாஷன
கங்காஜன அஜஜனகன
ஸங்கீத லோலன ஸதுஸம்மதன
ரங்கவிடல ராஜீவ நேத்ரன. 3

## 48. காண வாருங்கள்

**இராகம்:** நாட்டை **தாளம்:** சாபு தாளம்

### பல்லவி

அரங்க நாதனைக் காண வாருங்கள்

### அனுபல்லவி

திருவரங்கத் திவ்விய விமானத் திருப்பவனை

### சரணம்

உளம்கவர் உடலினன் கருணை உள்ளுள் உள்ளவன்
வேண்டியதை வழங்கும் கண்ணன் கற்பக மரமாம்
தாமரையிதழ் கண்ணன் கத்தூரி அரங்கன்
காம தேனுவாம் காவிரி அரங்கன். 1

வாசுகி மீதுபடுத்தவன் கடலில் நிலைத்தவன்
வாசு தேவன் தாமரை உந்தியன்

இந்திரன் முதலாம் அடியாரிதயத் தாமரையில்
வாழ்ந்து வருபவன் வசுதேவன் மகனாம். 2

நலம்பல புரிபவன் இனிய மொழியினன்
கங்கையைத் தந்தவன் அயனின் தந்தை
நல்லிசை விருப்பினன் சாதுக்களை ஏற்பவன்
அரங்க விட்டலன் தாமரைக் கண்ணன். 3

49) **இராகம்:** கூர்ஜரி **தாளம்:** ஆதிதாளம்

## பல்லவி

ரங்கா மனெகெ பாரோக்ருபாங்க ஸ்ரீரங்க.

## அனுபல்லவி

ரங்க கலுஷவிபங்க கருட து
ரங்க நவமோயனாங்க ஸ்ரீரங்க

## சரணம்

பச்செ பாவுலிகளனு நின்ன கிவியொளகிட்டு
மெச்சி முத்தாடுவெனு
யெச்சித வாலியனு பாணதி சுச்சித
ஸப்த தாளங்களனு பிச்சித
ஸமுத்ரவ சத்த மூச்சித
எச்சரிகெயலி லங்கெயனு பொகு
கிச்சுகள ஹச்சிசித ஹனுமன
மெச்சித கரதூஷணர சிரகள
கொச்சித அச்யுதானந்த. 1

முத்தின ஹாரவனு கண்டதொளிட்டு
எத்தி முத்தாடுவெனு

ஹத்தித ரதவனு முந்தொத்தித
கௌரவர ஸேனேகெ முத்தித
உபயரிகெ ஜகளவ பித்தித
மத்த மாதங்ககளெனெல்ல
ஒத்தரிசி நிந்த வரரதிகர
கத்தரிசி காளகவ மாடித. 2

உங்குரகளனு நின்ன அங்குளிகிட்டு
கங்களிந்தலி நோடுவெ
ஹெங்கள உத்துங்கத குசங்கள
ஆலிங்கிசித புஜங்கள
கமல ஸம பாதங்கள
ஹிங்கதெ பரிஹரிசி ப்யாகதி
மங்கள ஸ்வர்கவனித்த உத்
துங்க விக்ரம ரங்கவிடலனெ. 3

# 49. அரங்கா வீட்டிற்கு வருவாய்.

**இராகம்:** கூர்ஜரி **தாளம்:** ஆதிதாளம்

## பல்லவி

அரங்கா வீட்டிற்கு வருவாய்
அருளுருவனே திருவரங்கா

## அனுபல்லவி

அரங்கா தீமை அகற்றுவோய் கருடனாம்
குதியை உடையோய் மோகனவுரு திருவரங்கா.

## சரணம்

பச்சைக் கடுக்கண்களை நின்காதுகளில் இட்டுப்
புகழ்ந்து முத்தம் கொடுப்பேன்
மிகுந்த வாலியை வாளியினால் கொன்ற
ஏழு தாள மரங்களைத் துளைத்த
கடலைச் சுற்றி அணையிட்ட
எச்சரிக்கையுடன் இலங்கையுள் புகுந்து
தீயை மூட்டிய அனுமனால்
புகழப்பட்ட கரதூடணர் தலையைக்
கொய்தவனே நிலைத்த இன்பனே. 1

முத்து மாலையைக் கழுத்தில் அணிவித்துக்
கையிலெடுத்து முத்தம் கொடுப்பேன்
ஏறிய தேரை முன்னால் செலுத்திய
கௌரவர் சேனையை முற்றுகையிட்
டிருபிரிவிற்கும் சண்டை உண்டாக்கி
மேலும் யானைகள் எல்லாம்
எதிர்த்து முன்னால் நடந்தே
இருவகையாய் நின்று வீரர்களைக்
கொன்று போரினைச் செய்தாய். 2

மோதிரங்களை நின்விரல்களில் இட்டுக்
கண்குளிரக் காண்பேன்
பெண்களின் சிறந்த மார்பினைத் தழுவிய கைகளைத்
தாமரை நிகர் திருவடிகளை
விடாமல் நினைத்த கசேந்திரனின்
துன்பத்தைப் போக்கினாய் விரைந்து
நலம்நிறை சுவர்க்கம் தந்த
சிறந்த வீரனே அரங்க விட்டலா. 3

50) **இராகம்:** ஆனந்த பைரவி **தாளம்:** ஜம்பெ தாளம்

## பல்லவி

லாலி கோவிந்த லாலி கௌஸல்யா
பால ஸ்ரீராம லாலி

## அனுபல்லவி

லாலி முனிவந்த்ய லாலி ஜானகீ
ரமண ஸ்ரீராம லாலி.

## சரணம்

கனகரத்னகளல்லி கால்களனெ ஹரடி
நால்கு வேதகளன்னு ஸரபணிய மாடி
அநேக பூமண்டலவ ஹலகெயனு மாடி
ஸ்ரீகாந்தனுய்யாலெயன விரசிசதரு. 1

ஆச்சர்ய ஜனகவாகி நிர்மிசித
பச்செய தொட்டிலல்லி
அச்யுதானந்தனிரலு தூகிதரு
மத்ஸ்யவதார ஹரிய. 2

தர்மஸ்தாபகனு எந்து நிரவதிக
நிர்மல சரித்ரனெந்த
மர்ம கர்மகள பாடி தூகிதரு
கூர்மாவதார ஹரிய. 3

ஸரசிஜாக்ஷியிரெல்லரு ஜனவசீ
கர திவ்யரூபனெந்து
பரம ஹரஷதலி பாடி தூகிதரு
வராஹாவதார ஹரிய. 4

கரிகும்பகள போலுவ குசதல்லி
ஹார பதகவு யொளெயலு
வர வர்ணினியரு பாட தூகிதரு
நரசிம்ஹாவதார ஹரிய. 5

பாமாமணியரெல்லரு யதுவம்ச
ஸோமனிவனெந்து பொகளி
நேமதிந்தலி பாடி தூகிதரு
வாமனாவதார ஹரிய. 6

ஸாமஜவரதனெந்து அதுள ப்ருகு
ராமாவதாரனெந்து
ஸ்ரீமதானந்த ஹரிய தூகிதரு
ப்ரேமாதிரேகதிந்த. 7

காமினிகெ காமனெந்து சுரஸார்வ
பௌம குணமாமனெந்து
வாம நேத்ரெயரு பாடி தூகிதரு
ராமாவதார்ர ஹரிய. 8

ஸ்ருஷ்டியகர்த்தனெந்து ஜகதொளகெ
சிஷ்ட ஸந்துஷ்டனெந்து
த்ருஷ்டாந்த ரஹிதனெந்து தூகிதரு
க்ருஷ்ணாவதார ஹரிய. 9

வ்ருத்த நாரியரெல்லரு ஜகதொளகெ ப்ர
சித்தனிவனெந்து பொகளி
பத்தானுராதிகிந்த தூகிதரு
பௌத்தாவதார ஹரிய. 10.

தளதளாத்யாரதிந்த ரஞ்ஜிசுவ
மலயஜலேபதிந்த
ஜலஜகந்தியரு பாடி தூகிதரு
கல்க்யாவதார ஹரிய. 11

கனகமய கசிதவாத தல்பதலி
வனஜபவ ஜனகணிரலு
வனஜநாபன்ன பாடி தூகிதரு
வனிதாமணிய ரெல்லரு. 12

பத்மராகவ போலுவ ஹரிபாத
பத்மவன தம்மஹ்ருதய
பத்மதலி நிலிசி பாடி தூகிதரு
பத்மினீ பாமினியரு. 13

ஹஸ்த புஷண மெரெயலு திவ்யகர
ஹஸ்த லாகவ கனிந்த
ஹஸ்தகள பிடிது கொண்டு தூகிதரு
ஹஸ்தினீ பாமினியரு. 14

மத்தகஜ காமினியரு திவ்யதர
சித்ர வஸ்த்ரகளனுட்டு
சித்த ஸந்தோஷதிந்த தூகிதரு
சித்தினீ பாமினியரு. 15

கங்கண த்வனிகளிந்த ரஞ்சிசுவ
கிங்கிணி ஸ்வனகளிந்த
பங்கஜாக்ஷியரு பாடி தூகிதரு
சங்கினீ பாமினியரு. 16

சொக்க கஸ்தூரி பங்கதிம் ரஞ்சிசுவ
மகரிகா பத்ர பரெது
லிகுசஸ்தனியரு பாடி தூகிதரு
அகளங்க சரித ஹரிய. 17

பல்லவாதரெய ரெல்ல ஈ சிசுவு
துர்ய வர்ஜிதனெனு தலி
ஸல்லலித கானதிந்த தூகிதரு.
கல்யாணி ராகதிந்த 18

ஆனந்த ஸதனதொளகெ கோபியரு
ஆ நந்த சுதன கண்டு
ஆனந்த பரிதராகி தூகிதரு
ஆனந்த பைரவியிந்த 19

தேவாதி தேவனெந்து ஈ சிசிவு
பாவனாதீனெந்து
தேவகந்தர்வர் பாடி தூகிதரு
தேவ காந்தாரதிந்த 20

நீலகனலீல ஜோ ஜோ கருணால
வால ஸ்ரீக்ருஷ்ண ஜோ ஜோ
லீலாவதார ஜோ ஜோ பரமாத்ம
பாலகோபால ஜோ ஜோ. 21

இந்துதரமித்ர ஜோ ஜோ ஸ்ரீக்ருஷ்ண
இந்து ரவி நேத்ர ஜோ ஜோ
இந்துகுல புத்ர ஜோ ஜோ பரமாத்ம
இந்திரா ரமண ஜோ ஜோ. 22

துங்க பவபங்க ஜோ ஜோ பரமாத்ம
ரங்க க்ருபாங்க ஜோ ஜோ
மங்களா பாங்க ஜோ ஜோ மோஹனாங்க
ரங்கவிடலனெ ஜோ ஜோ. 23

# 50. ஊஞ்சல் பாட்டு

**இராகம்:** ஆனந்த பைரவி **தாளம்:** ஜம்பெ தாளம்

**பல்லவி**

ஊஞ்சலாடு கோவிந்தா ஊஞ்சலாடு கோசலையின்
மகனே இராமனே ஊஞ்சலாடு

## அனுபல்லவி

ஊஞ்சலாடு முனிவரால் வணங்கப்படுவோய் சீதையின்
கணவனே இராமனே ஊஞ்சலாடு.

## சரணம்

பொன்னிரத் தினத்தால் கால்கள் நாட்டி
நான்கு வேதங்களைச் சங்கிலி ஆக்கி
பலவுல கங்களைப் பலகையாய் வைத்துச்
சிரிகாந்தனுக் கூஞ்சல் செய்தனர். 1

ஆச்சரியப் படுமாறு நிர்மித்த
பச்சைத் தொட்டிலில்
நிலைத்த இன்பனைப் புகழ்ந்தனர்
மீனாக அவதரித்த அரியை. 2

அறத்தை நிலைக்கச் செய்தவன் எல்லையிலாக்
களங்க மற்ற சரிதம் உடையவன்
என்று மர்மச் செயல்களைப் பாடிப் புகழ்ந்தனர்
ஆமையாய் அவதரித்த அரியை. 3

தாமரைக் கண்ணியர் மக்களைக்
கவரும் ஒளியுருவின னென்று
மேலாம் மகிழ்ச்சியால் பாடிப் புகழ்ந்தனர்
பன்றியாய் அவதரித்த அரியை. 4

யானையின் மத்தகம் போன்ற மார்பில்
மாலையும் பதக்கமும் ஒளிவிட
வனிதையர் பாடிப் புகழ்ந்தனர்
நரஅரியாய் அவதரித்த அரியை. 5

பெண்டிரெல்லாரும் எதுகுலத்தின்
சந்திரனென்று புகழ்ந்து
நியமத்தோடு பாடிப் புகழ்ந்தனர்
வாமனனாய் அவதரித்த அரியை. 6

யானையரசனுக் கருளியவ னென்றும்
பரசுராமா வதார னென்றும்
இன்பமிகு அரியைப் புகழ்ந்தனர்
அன்பின் மிகுதியால் மகிழ்ந்து. 7

காமனுக்குக் காமன் தேவர்களில் எங்கும்
நிறைந்தவன் பண்பு நிறைந்தோன் என்றும்
அழகிய கண்ணியர் பாடிப் புகழ்ந்தனர்
ராமனாக அவதரித்த அரியை. 8

படைப்பின் கருத்தன் உலகில்
சிறந்தோன் மகிழ்ச்சி நிறைந்தோ னென்றும்
பார்வையைக் கடந்தவ னென்றும் புகழ்ந்தனர்
கிருட்டிண னாக அவதரித்த அரியை. 9

முதிய பெண்டி ரெல்லாரும் உலகில்
புகழ் பெற்றவ னென்றும் புகழ்ந்தே
ஒன்றிய அன்பினால் புகழ்ந்தனர்
புத்தனாக அவதரித்த அரியை. 10

தளதள என்றே ஒளிவிடும்
சந்தனம் பூசிய தாமரைபோல்
வாசனையுள்ள பெண்கள் புகழ்ந்தனர்
கல்கி அவதாரம் எடுக்கும் அரியை. 11

பொன்மயமான ஆசனத்தில்
தாமரையில் இருக்கும் பிரமன் தந்தை
தாமரை உந்தியனைப் பாடிப் புகழ்ந்தனர்
வனிதா மணியர் எல்லோரும். 12

தாமரையிதழ் போன்ற அரியின் பாதத்
தாமரையைத் தங்கள் இதயத்
தாமரையில் இருத்திப் பாடிப் புகழ்ந்தனர்
பத்மினிப் பெண்டிர். 13

கையில் அணிகள் அணிந்து திவ்விய
கைமுத்திரை களினால்
கைகளைப் பிடித்துக் கொண்டு புகழ்ந்தனர்
பெண்யானை போன்ற பெண்டிர். 14

மத்த யானை போன்ற பெண்கள் திவ்விய
அழகிய ஆடைகளை அணிந்து
மனமகிழ்ச்சியடன் புகழ்ந்தனர்
சித்திநீ பெண்டிர். 15

வளையோசையுடன் விளங்கும்
கிங்கிணி ஒலியுடனும்
தாமரைக் கண்ணியர் பாடிப் புகழ்ந்தனர்
சங்கிநீ பெண்டிர். 16

கத்தூரிக் கலவையால் விளங்கும்
கன்னத்தில் சித்திரங்கள் எழுதி
அழகுமார்பினர் பாடிப் புகழ்ந்தனர்
களங்கமற்ற பண்புபெற்ற அரியை. 17

இளந்தளிர்போல் சிவந்த இதழினர் இக்குழந்தை
துல்லியமாகக் காணப் படுபவனென்
றியன்ற கீதத்தால் புகழ்ந்தனர்
கல்யாணி இராகத்தால். 18

ஆனந்த பவனத்தில் கோபியர்
அந்த நந்தகோபன் மகனைக் கண்டே
ஆனந்தம் நிறைந்வராய்ப் புகழ்ந்தனர்
ஆனந்த பைரவி இராகத்தால். 19

தேவர்க்குத் தேவன் இக்குழந்தை
பாவனையைக் கடந்தவனென்றும்
தேவ கந்தர்வர் பாடிப் புகழ்ந்தனர்
தேவ காந்தாரி இராகத்தால். 20

கருநீல மேகனே கண்ணுறங்கு கருணையின்
நிலைய மான கண்ணனே கண்ணுறங்கு
திருவிளையாடல் புரிபவனே கண்ணுறங்கு
பரமாத்துமா பால கோபால கண்ணுறங்கு. 21

பிறையணிந் தவனின் நண்பனே கண்ணுறங்கு
சந்திர சூரியக் கண்ணனே கண்ணுறங்கு
சந்திரகுல மகனே கண்ணுறங்கு பரமாத்துமா
திருமகள் கணவ கண்ணுறங்கு. 22

மேலோனே பிறவிநோய் நீக்குவோய் கண்ணுறங்கு
பரமாத்துமா அரங்கனாம் கருணையோய் கண்ணுறங்கு
மங்கலம் நிறைந்தோய் கண்ணுறங்கு மோகன
உருவனே அரங்கவிட்டலா கண்ணுறங்கு. 23

51. **இராகம் :** பைரவி. **தாளம் :** ரூபக தாளம்

## பல்லவி

வந்தனெ மாடிரை யதிகுல சந்த்ரன பாடிரை

## அனுபல்லவி

பந்த துரிதகள ஹிந்தெ களெது ஆ
னந்தப்படுவ விபுதேந்த்ர கரோத்பவர.

## சரணம்

ரகுகுல வரபுத்ர ராமனசரண கருணாபாத்ர
நிகமோக்திய சூத்ரபாட ப்ரவசனரத

சுகுணஜிதாமித்ர பன்னகசயனன குண
பொகளுவ அபார அகணிதமஹிமர. 1

வரமஹாத்மெதிளிசி மொதலிரந் தரெ ஆனந்ததி சரிசி
நிருத மனவ நிலிசி ஸ்ரீஹரி கரிவரதன ஒலிசி
தரெஜனரிகெ அரியதெ மரெயாகுத
ஹருஷதி கோனத தருவல்லிருவவர. 2

முததி க்ருஷ்ணாகுடிய மத்யதி ஸதனத பரிய
ஸதமல யதிவர்ய தபமௌனதலித்து தனரிய
ஒதகி நதியு சூசுத பரலேளுதின
குதயாதவர சுபத கமலங்கள. 3

மாஸமார்கசீர்ஷா ராதனெகசேஷ தினஅமா
வாஸ்ய தாஸரு ப்ரதிவருஷ மாள்பரு
லேஸெனலு ச்ருதிகோஷ காசிக்ஷேத்ரகெ ஈஸ்தள மிகிலை
தாஸ ஜனகெ பூருஹயதி பதகள. 4

மத்வ சாஸ்த்ர க்ரந்த ஸாரத பத்ததி திளிதிந்த
அத்வைதபந்த முரிது மத உத்ரிசிதந்த
ருத்ரவந்த்ய மூருதி ரங்கவிடலன பத
பத்மாராதக ப்ரசித்த முனீந்த்ரர. 5

# 51. முனிவர் குலத்தின் சந்திரனைப் பாடுங்கள்

**இராகம்:** பைரவி. **தாளம்:** ரூபக தாளம்

**பல்லவி**

வணக்கம் செய்வீர் முனிவர் குலத்தின்
சந்திரனைப் பாடுங்கள்

**அனுபல்லவி**

வந்த துன்பங்களைப் பின்னால் துரத்தி
இன்புறும் விபுதேந்திரர் கரத்தில் உதித்தவரை.

## சரணம்

சூரிய குலத்தின் மகனாம் இராமன்பாத அருளுக்குப் பாத்திரம்
ஆகமங்களின் சூத்திரங்களுக்கு விளக்கம் தருபவர்
நற்குண சீதாமித்திரர் மலையை யெடுத்த
பாம்பணையான் பண்பைப்
புகழும் எண்ணற்கரிய புகழைப் பெற்றவர். 1

உயர்பெருமையை உணர்த்தி உலகோர் உள்ளம் மகிழ்வித்து
நாடொறும் மனத்தை நிறுத்தி யானைக்கருளிய அரியை
நினைவித்து
நிலவுலக மக்கள் அறியாமல் மறைந்து
மகிழ்ச்சியுடன் துளசிச் செடியில் இருந்தவரை. 2

மகிழ்வுடன் கிருட்டிணா நதியின் நடுவே வீடாகக் கொண்டு
தூய துறவு தவமௌனத்துடன் இருப்பதை அறியாமல்
உதவிநதியும் வெள்ளம்மாகப் பாய்ந்த தேழு நாட்கள்
குன்றாமலிருந்த நல்லோரின் திருவடித் தாமரைகள். 3

மார்கழி மாதம் ஆராதனை நாளில்
அமாவாசை தாசர் ஆண்டுதோறும் நடத்துவார்
வேதம் ஒலிக்கும் காசியைவிட இத்தலம் மிக்கது
தாசர்களுக்குத் துளசியாக நின்ற துறவியின் திருவடிகள். 4

மத்துவ சாத்திர நூல்களின் முறைமை தெரிந்தவர்
அத்துவைத மதத்தை முறித்து மதத்தை உயர்த்தியவர்
உருத்திரன் வணங்கும் மூர்த்திஅரங்க விட்டலனின்
திருவடித் தாமரையை வணங்கும் புகழ்பெற்ற முனிவர். 5

52. **இராகம்:** ஆஹரி **தாளம் :** ஜம்பெ தாளம்.

**பல்லவி**

வனஜநயனன மனவ மதுப நம்புவரெ
மனதெகெத மதனபித விடலரேய.

**சரணம்**

அரியத பாலேரிகெ தன்ன பரிய ளநஹிசி முன்ன
நெரெது ரதிபதிய சுக நெரெதோரித
தொரெது பதுகுவெவெந்தோ ரதிபதிய பிதனகலி
விரஹதுரி தானளவடரி சுடுதிஹது. 1

நடெநகெய துதிநோட பலெயனெம்மொளு பீசி
பிடதெயெம்மனு தன்ன வசமாடித
படியில்லதனுபவத சுகத ஸவியனே தோரி
மடதி தடெதளொ மதுரெயலி நல்லன. 2

எந்தெந்து நிம்ம வசதல்லி ஹெனெந்த பயவித்து
இந்துமுகி நாரியர நெரெ நம்பிசி
நந்த நந்தன நம்ம கானன தொளீட்யாடி
இந்து மதுரெய நாரியர நெச்சித. 3

இவன வசனத கபட திளியலரியதெ நாவு
நவ ஹரிணியந்தெ மருளாகி கேளி
விவரவரிய தெ நாவு கடு நொந்தெவெலோ மதுப
இவன குணவரிதெ கடுகருணி எம்புவரு. 4

பதிசுதர பவபந்தனகளெல்ல ஈட்யாடி
கதிநமகெ அவனெந்து மன ஸோதெவோ
க்ருதகவரியதெ நம்ம மனதொளு நில்லிசி போத
பதியொடன ஸந்தானவெந்தொ எலொ மதுப. 5

மருளுகளு நாவு ஶ்ரீபதிய கூடவ பயசி
இருளு ஹகலு ஜரிஜரிதளலுவெவு
சிரியவன உங்குடத உகுரு குண காணளெலொ
ஹரி நம்ம நெனவு தச்சரியல்லவெ. 6

துங்ககுண நிலய அங்கஜன பிதனெந்து
ரங்கனிகெ மனஸோது மருளாதேவா
ஹிங்கி பதுகுவுதெந்தோ ப்ருங்க மதுரெகெ போகி
ரங்கவிடலன தந்தெம்மனுளு ஹபவுதோ, 7

# 52. வண்டை நம்புவரோ

**இராகம்:** ஆகரி **தாளம்:** ஜம்பெ தாளம்

### பல்லவி

தாமரைக் கண்ணனின் மனவண்டை நம்புவரோ
மனங்கவர் மன்மதன் தந்தை விட்டலராயன்

### சரணம்.

அறியாத பெண்டிர்க்குத் தன்னுருவை நெருங்கச் செய்து
முன்னால் நிறைந்து மன்மத இன்பம் காட்டியவனைத்
துறந்து வாழ்வதென்றோ இரதிகணவன் தந்தையை அகன்று
விரகத்தீ கட்டி கட்டியாய் வந்து சுடுகின்றதே. 1

நடைநகை பார்வையால் வலையை எங்கள்மீது வீசி
விடாமல் எங்களைத் தன்வயப் படுத்தினான்
அளவற்ற இன்பத்தின் இனிமையைத் தந்தான்
மனைவி தடுத்தாளோ மதுரையில் நல்லவனை. 2

என்றென்றும் உங்கள் வயத்திருப்பேன் என்றபயம் கொடுத்து
திங்கள் முகத்தியரை முற்றும் நம்ப வைத்து

நந்தனின்மகன் நமது கூட்டத்துள் விளையாடி
இன்று மதுரையின் பெண்களை விரும்புகின்றான். 3.

இவன்சொற்களி லிருந்த வஞ்சகத்தைத் தெரியாத நாங்கள்
மான்குட்டி போல்மருள் கொண்டு கேட்டோம்
விவர மறியாமல் நாங்கள்மிக நொந்தோம் வண்டே
இவன்குணம் அறியாதவர் மிகக்கருணையன் என்பரே. 4

கணவன் நமக்கவனே என்றுமனம் இழந்தோம்
கதியாவான் நமக்கவனே என்றுமனம் இழந்தோம்
கபடமின்றி எங்கள் மனத்துள் நின்று போனான்
பதியுடன் மகிழ்வதென்றோ கூறு வண்டே. 5.

மருள்கொண்ட நாங்கள் திருவின் கணவனைக் கூட விரும்பி
இரவும் பகலும் நொந்து விடுகிறோம்
திருவானவன் பெருவிரல் நகத்தின் குணம்கூடக்
காணவில்லையே
அரிநம்மை நினைப்பது வியப்பிற் குரியதன்றோ. 6

மேன்மைக் குணங்களின் இருப்பிடம் மன்மதன் தந்தையென்
றரங்கனிடம் மனம்தோற்று மருள்கொண்டோம்
இனிவாழ்வ தென்றோ வண்டே மதுரைசென்
றரங்க விட்டலனைத் தந்தெம்மைக் காப்பாய். 7.

53. **இராகம்:** தோடி **தாளம்** : சாபு தாளம்

## பல்லவி

விதிகெ தயவில்லவக்க எம்ம ம்யாலெ.

## அனுபல்லவி

யதுபதியனகலிசித ஒம்மிந்தலொம்மெ.

### சரணம்

எதெய மரெய மாடி போத யாகோ விதியே
சுளிகுரளு கடெகண்ண நோடதிந்தலி
கவகவிசி நகுவ முத்து முகவனு
தவகதிந்த மரளி மரளி நோடத் ஹோதெவெ. 1

ஹக்கிய ம்யாலுள்ள தய நம்ம ம்யாலெ
இக்கதேகெ ஹோத்யோ விதியே
ரக்கெ எரடுள்ளரெ மது ரெகெ போகி
கக்கனெ ஸ்ரீஹரியொடனெ கூடுதித்தெவல்ல. 2.

தங்கீ நம்மெதெயு கல்லாகி இத்தேவெ
ஹிங்குவரெஸகியரு ஒம்மிந்தலொம்மெ
ரங்கவிடலன்ன அங்கஸங்கவ பிட்டு இந்த
பங்கஜீவ சுடசுடசுடல் யாதகோ. 3.

## 53. விதிக்கு அருளில்லை

**இராகம் :** தோடி **தாளம்:** சாபு தாளம்

### பல்லவி

விதிக்கருள் இல்லை தவ்வையே எங்கள்மேல்

### அனுபல்லவி

எதுகுலத் தரசனைப் பிரியச் செய்யும் ஒருநாள்விட் டொருநாள்

### சரணம்

இதயத்தை மறைத்துச் சென்றான் எதற்கோ விதியே
சுழன்றி மைக்கும் கடைக்கண் பார்வையால்

மறைந்து சிரிக்கும் முத்தான முகத்தைத்
தயக்கமின்றித் திரும்பக் திரும்பக் காண்போம். 1

பறவை மீதுள்ள அருளும் எங்கள்மேல்
விழாத தேனோ செல்வாயோ விதியே.
சிறகிரண்டிருந்தால் மதுரைக்குச் சென்று
விரைந்தே அரியைக் கூடுவே னன்றோ. 2

தங்கையே நம்மிதயம் கல்லாகி உள்ளன
தோழியர் நமக்குதவத் தயங்குவரோ ஒருமுறை
அரங்க விட்டலன் உடல்தழுவலை விடுத்தித்தகு
குறையான வாழ்வு சுடுகின்ற தெதற்கோ. 3

54. **இராகம்:** குண்டக்கிரியை. **தாளம் :** ஆதிதாளம்.

## பல்லவி

வ்ருஷபனேரித விஷதரன்யாரெ பேளம்ய்ய.

## அனுபல்லவி

ஹசுளெ பார்வதிய தபசிகெ மெச்சித
ஜடாமண்டல தாரி காணம்ம.

## சரணம்

கைலாஸகிரிய தொரெயிவனம்ம அதுஅல்லதெ கேளெ
பைலு ஸ்மசானதி மனெயிவகம்மா ஸங்கர்ஷனெந்து
கேளெ மஹியொளு ஜனபொகளுவரம்ம இது நைஜவம்ம
நாலிகெ ஸாசிர பணிபூஷணனம்ம
ரமெயரஸகெ இவ மொம்மகனம்ம. 1

பாலெ தக்ஷாயணிபதி இவனம்ம மாவன யாகதலி
ப்ஹள க்ருத்யகளனு நடெசிதனம்ம ஸாகரதலி ஹட்டித

காளகூடவ பக்ஷிசிதனம்ம ராமன தயவம்ம
மேலெ உளியலு சேகரளவு
நீலகண்டனெந் தெனிசிதனம்ம. 2

ஹரனொந்தின வைகுண்டகெ பரலு – தாதகெ வந்திசுத
தருணீரூபவ நோடெனெனலு – ஹரி தா நசுநகுத
கரெது ஸைரிஸலாரெ நீ எனலு ஹடதி குள்ளிரலு
கருணிகளரஸனு ஹரன மொகவ நோடி
அருணோதயகெ பாரெந்து களுஹித 3

அருணோதயகெ கங்காதர பரலு ஹதினாரு வருஷத
தருணீரூபதி ஹரி வனதொளகிரலு – சரணனகாக்ரதி
தரணீ பரெயுத்த நிந்திரலு ஸெரக பிடியெ பரலு
கரதி சங்க கதெ சக்ரவ தோரலு
ஹரனு நாசி தலெதக்கிசி நிந்த. 4.

மங்களாங்கனெ மாரஜனக நா மாடித தப்ப
ஹிங்கதெ க்ஷமிஸொ யதுகுலதிலக வக்ஷதலொப்புவ
நின்னங்கனெ அரியளு நகமஹிமாங்க – ஹீகெனுதலி தவக
ரங்கவிடலன பதங்கள பிடிது
ஸாஷ்டாங்க வெரகி கைலாஸகெ நடெத. 5.

## 54.காளைமீது அமர்ந்தவன் யார்?

**இராகம்:** குண்டக்கிரியை. **தாளம்:** ஆதிதாளம்.

**பல்லவி**

காளைமீ தமர்ந்த விடத்தை வைத்தவன் யாரென்று கூறம்மா.

**அனுபல்லவி**

பெண்ணாம் பார்வதியின் தவத்தை மெச்சிய
நீண்ட சடையை உடையவன் காண் அம்மா.

## சரணம்

கயிலாய மலையின் தலைவன் அவன்அம்மா
அதுவன்றிக் கேட்பாய் சுடுகாடே
வீடாகும் அவனுக்கம்மா – அழிக்கும் கடவுள்
என்றவனை உலகினர் புகழ்வர் – இதுவே
உண்மை அம்மா – ஆயிரம் நாக்கை உடைய
பாம்பை அணிந்தவன் அம்மா – திருவின்
அரசனாம் திருமா லிற்கிவன் பேரன் அம்மா. 1

தாக்கியா யணியின் கணவன் இவனம்மா
மாமனின் யாகத்தில் பலதொல் லைகளைச்
செய்தவன் அம்மா – கடலில் உதித்த
விடத்தை உண்டவன் அம்மா – இராமன்
தயவால் உய்ந்து மிச்சமான விடத்தால்
நீலகண்டனென் றழைக்கப் பட்டான் அம்மா. 2

அரனொரு நாள் வைகுந்தம் வந்து
தாத்தாவை வணங்கி மோகினி உருவைக்
காண்பேன் என்றதும் – அரிசிரித்த வாறே
அழைத்துத் தாங்க இயலா துன்னால் என்றதும்
அடம்பிடித் தமர்ந்ததும் – அரிஅரணின்
முகத்தைப் பார்த்துக் கதிரவன் உதிக்கும்
நேரத்தில் வாவென் றனுப்பினான். 3

கதிரோன் உதித்துக் கங்காதரன்
வந்ததும் – பதினாறு வயதுப்பெண்
உருவில்அரி சோலையில்
இருந்து – நகத்தால் தரையில்
கோடிட்டவாறு நிற்க – அரன்முந் தானையைப்
பிடிக்க – அரிகைகளில் சங்குகதை
சக்கரங்களைக் காட்டியதும்அரன்
நாணம் கொண்டு தலைகுனிந்து நின்றான். 4

மங்கலம் நிறைந்தவனே மன்மதன்
தந்தையே – நான்செய்த குற்றத்தை
நினையாமல் மன்னிப்பாய் – எதுகுலத்தின்
திலகம் போன்றவனே – இதயத்திலிருக்கும்
திருமகளும் உன்னகத்தின் பெருமை அறியாள்
இவ்வாறு கூறி அரங்க விட்டலன் பாதத்தைப்
பிடித்து நிலத்தில் படிந்து வணங்கிக்
கயிலாயம் சென்றான். 5

55. **இராகம் :** தன்யாசி **தாளம்:** ரூபக தாளம்.

## பல்லவி

வ்யர்த்த வல்லவெ ஜன்ம வ்யர்த்தவல்லவெ.

## அனுபல்லவி

தீர்த்த பாதரபஜிசி க்ருதார்த்த னாகதவன ஜன்ம.

## சரணம்.

அருண உதயதல்லி எத்து ஸரிததலி ஸ்நானவ மாடி
அரளுமல்லிகெ மாலெஹரிய சரணபிஸதவன ஜன்ம. 1

ஒந்து சங்க உதக தந்து சந்ததிந்த ஹரிகெ எரெது
கந்த புஷ்பதிந்த ஹரிய வந்தனெ மாடதவன ஜன்ம. 2

முகுளுதெனெய லெஸெவ துளசிதளவ தந்து ப்ரேமதிந்த
ஜகன்மயகெ அர்பிசி கரவமுகிது ஸ்துதிஸதவன ஜன்ம. 3

போகிசயனன தினதி ஸகல போககளனு தானுதொரெது
பாகவதர ம்யாளதிந்த ஜாகரணெ மாடதவன ஜன்ம. 4

ஜங்கமரொள கதிகவெனிப மனுஷ்ய தேஹ படெது
ரங்கவிடலனெனிப பச்சிம ரங்க கர்பிஸதவன ஜன்ம. 5

# 55. வீணாயிற்று பிறவி.

**இராகம்** : தன்யாசி **தாளம்** : ஆதிதாளம்

## பல்லவி

வீணாயிற் றன்றோ பிறவி வீணாயிற் றன்றோ.

## அனுபல்லவி

கங்கைதந்த பாதனை வணங்கிப் பயன்பெ றாதவன் பிறவி.

## சரணம்

வைகறையில் துயிலெழுந்து பொய்கையில் நீராடி
மலரும் மல்லிகை மாலையை அரியின் திருவடிக்குத்
தராதவன் பிறவி. 1

சங்கொன்றில் நீரினைத் தந்து சந்தத்துடன் அரிக்கு விடுத்து
மணம்நிறை மலர்களால் அரியை வணங்காதவன் பிறவி. 2

இளந்தளிராம் துளசியைத் தந்தன்புடன்
மணம்நிறை மலர்களால் அரியை வணங்காதவன் பிறவி. 3

அரியின் நாளில் எல்லா இன்பங்களும் துறந்து
பாகவதர் கூட்டத்துடன் சேர்ந்து பூசை புரியாதவன் பிறவி. 4

இயங்கும் உயிர்களில் மேலான மனித உடலைப்பெற்
றரங்க விட்டலன் இருக்கும் மேற்கரங்கத்திற்குத்
தராதவன் பிறவி. 5

56. **இராகம்:** கல்யாணி **தாளம்:** அட்ட தாளம்.

## பல்லவி

ஸத்து மாடலு பேடவொ – நின்னகாலிகெ
பித்து நா பேடிகொம்பெ.

## அனுபல்லவி

நித்தெகெய்யுவரெல்ல எத்தரெநீனு பந்
தித்தத்து கண்டரேனெம்புவரோ ரங்க.

## சரணம்

பளெகல்லுகென்னதேனோ – கையபிடிது
எளெயதிரொ சும்மனெ
மொலெகள மேலின ஸெரகனெளெயலு
கொரள பதகங்களு த்வனிகெய்யுவுவொ ரங்க. 1

நிருகெய பிடியதிரொ– காஞ்சிய தாம
கிருகண்டெ த்வனிகெய்யதெ
கிருதுடிகள நீனு ஸவிது சப்பரிஸலு
தரவல்ல கண்ட மத்ஸரவ தாளுவனல்ல. 2

நாடமாதுகளேதகொ – ஸங்கீதவ
பாடுவ ஸமயவேனொ
காடிகார ஸ்ரீரங்கவிடலனெ
பாடுபந்தகளொடகூடுவ ஸமயதி. 3

# 56. ஒலி செய்ய வேண்டா

**இராகம்:** கல்யாணி. **தாளம் :** அட்ட தாளம்

## பல்லவி

ஒலிசெய்ய வேண்டா நின்காலில் விழுந்துநான் வேண்டுவேன்.

## அனுபல்லவி

உறங்குபவ ரனைவரும் விழித்தெழுந்தால்
நீவந்திருப்ப தறிந்தால் என்ன கூறுவர் அரங்கா.

## சரணம்

வளையோசை செய்யாதா – கையைப்
பிடித்திழுக்காதிரு வெறுமனே
முலைமீ திருக்கும் ஆடையைப் பிடித்திழுத்தால்
கழுத்திலுள்ள பதக்கங்கள் ஒலிக்குமே அரங்கா. 1

இடையைப் பிடிக்காதிரு ஒட்டியாணத்தின்
சிறுமணிகள் ஒலிசெய்யுமே
சிறுஉதடுகளைச் சுவைப்பது சரியன்று
கணவன் பொறாமையைத் தாங்க இயலான். 2

சாதாரண வார்த்தைகள் எதற்கோ
இசைபாடும் நேரம் ஏனோ
ஆடம்பரமான திருவரங்க விட்டலனே
உறுதிகள் எடுக்கும் நேரத்தில். 3

57. **இராகம்:** மோகனம் **தாளம்** : சாபு தாளம்

**பல்லவி**

ஸரசிஜாக்ஷ ஸரஸதிந்த ஸரசிஜோத்பவ கொலிது பந்த.

**அனுபல்லவி**

உரசின ம்யாலெ ஸரசிஜாக்ஷியனிரிசி பந்த.

**சரணம்**

தீர சரதி கம்பீர வரகனஸார கஸ்தூரி திலகதர
ஹீர மௌக்திக கேயூர தரிசித நவநீத சோர பந்த 1

நந்த கோபிகானனந்தவூடித கண்ட கோகுலதி பந்த
அந்ததிந்த சௌந்தரியர கோவிந்த முகுந்த 2.

அங்கனெயர குசகளாலிங்கனவ மாடி நவமோஹனாங்க
ரங்கவிடலனு நம்மந்த்ரரங்கதொளகிஹ கல்மஷபங்க 3

# 57. பிரமனுக்கு இசைந்து வந்தான்

**இராகம்:** மோகனம் **தாளம்** : சாபு தாளம்

**பல்லவி**

தாமரைக் கண்ணன் இனிமையாகத்
தாமரையில் உதித்தவனுக் கிசைந்து வந்தான்

**அனுபல்லவி**

மார்பில் தாமரைக் கண்ணியை
வைத்துக் கொண்டு வந்தான்.

## சரணம்

தீரன் கடல்போல் கம்பீரன் வரம்தருவோன்
கத்தூரித் திலகம் அணிந்தவன்
வயிரம் முத்து புயகீர்த்தி அணிந்த
வெண்ணெய் திருடன் வந்தான். 1.

நந்தவன கோபியர்க் கின்பம் தந்த
சிறுவன் கோகுலம் வந்தான்
அழகுடன் அழகியரின் கோவிந்தன் முகுந்தன். 2.

பெண்களின் முலைகளைத் தழுவிய மோகன உருவன்
அரங்க விட்டலன் நம்முள் இருக்கும்
களங்கங்களை அழிப்பவன். 3.

58. **இராகம்:** மாலவ ஸ்ரீ **தாளம்:** ஏக தாளம்

## பல்லவி

ஸாசிர ஜிய்வெகளுள்ள சேஷனெ கொண்டாட பேகு
வ்யாஸமுனி ராயர ஸந்யாஸதிரவ.

## சரணம்

ஆஸெயிந்த தம்முதர போணகாகி சப்பன்ன
தேசவ திருகி ஸஞ்சார மாடுத
மீஸலமாடி பச்சிட்டு மிஞ்சுகூளனுண்மு தின
மோஸமாடி களெவ ஸந்யாசிகள ஸரியெ. 1.

கெரெ பாவி புர அக்ரஹாரக்ள மாடி
பூசுரரொந்து லக்ஷ குடும்பகள
பொரெவ வைபவ கீர்த்தியிந்தலிவ்யாஸ
ராயர குணகண காம்பீர்யாதிகள. 2.

ஹகலிருளென்னதெ ஆவாக ஸ்ரீஹரி பதபத்ம
யுகளவனர்சிச பகுதியிந்த
ரகுபதி பஜக ப்ரஹ்மண்ய தீர்த்தர குவர
ரங்கவிடலனன்னு பிடெபிடெனு எம்ப. 3.

# 58. ஆதிசேடனே போற்ற வேண்டும்.

**இராகம்:** மாலவஸ்ரீ **தாளம்:** ஏகதாளம்.

### பல்லவி

ஆயிரம் நாவுள்ள ஆதிசேடனே போற்ற வேண்டும்
வியாச முனிராயரின் துறவுத் திறத்தை.

### சரணம்

ஆசையால் தம்வயிறு வளர்க்க ஐம்பத்தாறு.
நாடுகளுக்கும் சென்று திரிந்து கொண்டு
அறுசுவை உணவைத் தம்மடியில் கட்டியுண்டு நாடொறும்
ஏமாற்றிக் காலம் கழிக்கும் துறவிகள் சரியானவரா. 1

ஏரி கிணறு சிற்றூர் அக்ரகாரங்கள் அமைத்தே
இலட்சக் கணக்கில் அந்தணர் குடும்பங்களைப்
புரக்கும் வைபவம் புகழினால் வியாச
ராயரின் குணங்கள் பெருமித மானவை. 2

பகலிரவென் றென்னாமல் திருஅரியின் திருவடித் தாமரை
இரண்டும் அருச்சிப்போன் பத்தி மிகுதியால்
இரகுபதியை வணங்கும் பிரம்மண தீர்த்தரின் சீடன்
அரங்க விட்டலனை விடேன்விடேன் என்பான். 3

59. **இராகம்:** நாராயணி **தாளம்:** ஆதிதாளம்

### பல்லவி

சும்மனெ வைஷ்ணவ னெம்பிரி பர
பொம்ம சுஜ்ஞானவனரியத மனுஜன.

### சரணம்

முகவ தொளெது நாமவனிட்டெனல்லதெ
சுகதீர்த்த சாஸ்த்ரவனோதிதெனெ
சுககெ ச்ருங்காரகொ மாலேஹாகிதெனல்லதெ
பகுதி ரஸதல்லி முளுகிதெனேனய்ய. 1

ஊரு மாதுகளாடி தணிதெனல்லதெ
நாராயண க்ருஷ்ண சரணெந் தெனெ
நாரிய நுடிகேளி மருளாதெனல்லதெ
குருஹிரியர மாத மன்னிசிதெனேனய்ய. 2

நரோத்மரிகதிக கந்தர்வரிகதிக
சுரேந்த்ரகதிக ஹரகதிக
விரிஞ்சிகதிக சிரிகதிக
ஹரி ஸர்வோத்தமனெந்து திளிதெனேனய்ய. 3

ஜகது ஸத்யவெந்து பஞ்சபேதவ திளிது
மிகெ ராகத்வேஷங்களனு வர்ஜிசி
பகவந்தன லீலெ ச்ரவண கதெகளிந்த
நிகமகோசரனெந்து திளிதெனேனய்ய. 4

கங்கெயலி மைமண்ண தொளெதெ னல்லதெ பவ
ஹிங்குவ ஸ்நானவ மாடிதெனெ
ரங்கவிடலன நிஜவாத தாஸர
ஸங்க சுகவெந்து திளிதெனேனய்ய. 5

# 59. வெறுமனே வைணவன் என்பீர்

**இராகம்** : நாராயணி. **தாளம்** : ஆதிதாளம்

## பல்லவி

வெறுமனே வைணவன் என்பீர் பரப்பிரமனின்
நன்ஞானம் அறியாத மனிதனை.

## சரணம்

முகத்தைத் கழுவி நாமம்இட்டேனன்றி
ஆனந்த தீர்த்தரின் நூல்களை ஓதினேனோ
இன்பத்திற் கலங்காரத் திற்குமாலை அணிந்தேனன்றி
பத்திச் சுவையில் மூழ்கினேனே ஐயா. 1

ஊரைப் பற்றிய உரைகளைப் பேசி மகிழ்ந்தே னன்றி
நாராயணா கிருட்டிணா அடைக்கலம் என்றுரைத் தேனோ
மகளிரின் மொழி கேட்டு மகிழ்ந்தேனன்றிக்
குருபெரியோரின் மொழிகளை ஏற்றேனே ஐயா. 2

மனித உத்தமர்க் கதிகன் கந்தர்வர்க் கதிகன்
தேவர்க் கதிகன் அரனுக் கதிகன்
பிரமனுக் கதிகன் திருவிற் கதிகன்
அரிசர்வ உத்தமனென்று தெளிந்தேனோ ஐயா. 3

உலகம் உண்மையென ஐவேற்றுமை தெளிந்து
மிகையுான ஆசை வெறுப்புகளை நீக்கி
இறைவனின் விளையாடல்களை விளக்கும் கதைகளால்
வேதத்தின் உட்பொருளென உணர்ந்தேனோ ஐயா. 4

கங்கையில் உடலழுக்கைக் கழுவினேனன்றி
பிறவி போக்கும் நீராடலைச் செய்தேனோ
அரங்க விட்டலனின் உண்மை அடியாரின்
சங்கமே இன்பமெனத் தெளிந்தேனோ ஐயா. 5

60. **இராகம்** : பைரவி. **தாளம்:** ஆதிதாளம்

## பல்லவி

ஸ்மரிசிதவரனு காய்வ நம்ம சூர்யானேக ப்ரபாவ
சுரமுனிகள சஞ்ஜீவ ஸ்ரீவேங்கட நம்மனு பொரெவ.

## சரணம்

வைகுண்ட பந்து சேஷாசலதலி நிந்து
பக்தர பாலிபெனெந்து அபயதயாகர ஸிந்து
பகுதி முகுதியீவ மத்குல தேவனெ
ஸகல ஜனஸேவித கன பரிபூர்ணனெ
விகசித கமலநயன கஞ்ஜநாபனெ
ப்ரகடித சுபகீர்த்தியிந்த மெரெவனெ. 1

ஜ்ஞானிகள கோசரனெ தன்ன த்யானிபர மனோஹரனெ
தானவர ஸம்ஹரனெ மஹா தைன்யாதிக ளுத்தரனெ
ஆனந்த மயனெ அநேகாவதாரனெ
அனுதின நெனெவரஹ்ருதயமந்திரனெ
கனமாணிக பூஷண ச்ருங்காரனெ
தனுவின க்லேச துரிதஸம்ஹரனெ. 2

ஜயதுதோஷ விநாச ஜயமஹிமா விசேஷ
ஜயது லகுமீ பரிதோஷ ஜய ஸ்ரீ வெங்கடேச
ஜய கமலஜ ஜனகனெ ஜய ஜகதீச
ஜய கஜவரத பாலித புண்ய கோஷ
ஜயது ஜனார்தன ஜகந்மோஹன வேஷ
ஜய ரங்கவிடல கருணாவிலாஸ. 3

# 60. நினைப்பவரைக் காக்கும் சூரியன்

**இராகம்** : பைரவி. **தாளம்** : ஆதிதாளம்

## பல்லவி

நினைப்பவரைக் காக்கும் நமது சூரியன் பலபெருமை பெற்றவன்
தேவர் முனிவர்களின் சஞ்சீவி
திருவேங்கடவன் நம்மைக் காப்பான்.

## சரணம்

வைகுந்தத்தி லிருந்து வந்து பாம்பு மலையில் நின்று
பக்தரைக் காப்பேன் என்றருளிய கருணைநிறை கடலாவான்
பத்தியும் முத்தியும் கொடுக்கும் குலதெய்வம்
எல்லா மக்களும் வணங்கும் பெருமை முற்றும் நிறைத்தோன்
மலர்ந்த தாமரைக் கண்ணன் பதுமநாபன்
பரவிய நற்புகழுடன் மிதந்து மகிழ்பவனே. 1

ஞானிகளுக்குத் தோன்றுபவன் தன்னைத்
தியானிப்பவர் மனங்கவர்ந்தவன்
அசுரரை அழிப்பவனே
எளியோரை உயர்த்துவோனே
என்றும் இன்பனேபல அவதாரங்கள் எடுத்தவனே
நாடொறும் நினைப்பவரின் இதயக் கோயிலில் இருப்பவனே
பெரிய மாணிக்கம் அணிந்த அலங்காரனே
உடலின் துன்பத்தை விரைந்து நீக்குபவனே. 2

வெற்றி இலக்குமி மணாளனே வெற்றி உலகத் தலைவனே
வெற்றி யானையைக் காத்த புண்ணியனே
வெற்றி உலகைப் புரப்பவன் உலகத்தால் மோகிக்கப் படுபவனே
வெற்றி அரங்க விட்டலனாம் கருணை நிறைந்தோனே. 3

61. **இராகம் :** பௌளி **தாளம்:** ஜம்பெ தாளம்

## பல்லவி

ஹரிஹரரு ஸரியெம்ப மருளு ஜனரு
ஹரிஹரர சரிதெயனு திளிது பஜிசுவுது.

## சரணம்

சுரரு முனிகளு கூடி பரதைவைவாரெந்து
அரியபே கெந்தெரடு வரதனுகள
ஹரிஹரரிகித்து ஸங்கரவ மாடிசி நோடெ
முரஹரனு புரஹரன கெலிதரியா. 1

ஹரன குரிதசுர மஹதபவ மாடலு மெச்சி
வரவனவகித்து ஹர பளலி ஓடிபரலு
ஹரிபந்தவன கரவ சிரத ம்யாலிரிசி கள
னுருஹி ஹரனனு காயித கதெய நீனரியா. 2

தூர்வாஸ ரூப ஹரனம்பரீஷன முந்தெ
கர்வவனு மெரெசி ஒடெயனுசித்திடெ
ஸர்வலோக தொளவன சக்ர நிலலீயதிரெ
உர்வீசனனு ஸாரி உளிதனரியா. 3

ஹரனம்ச த்ரோணசுதனு பாண்டவா எந்து
உரவணிசி நாராயணாஸ்த்ரவன பிடலு
ஹரிபந்து பேக தன்னஸ்த்ரவனு தாஸெளெது
சரணாகதர காயித கதெயனரியா. 4

நர நாராணயரு பதரிகாச்ரமதலிரெ
ஹரனு ஹரியொடனெ கதனவனு மாடெ
ஹரிஹரன கண்டவனு கரதலி பிடிது நூகெ
கொரள கப்பாத கதெ கேளி அரியா. 5

ஹரி சுராரிகம்ருதவனு எரெதரூப வனொம்மெ
ஹர நோடுவெனெந்து சம்ப்ரார்திஸெ
பரம மோஹன ரூபலாவண்யவனுகண்டு
ஹரமருளு கொண்ட கதெகேளி அரியா. 6

ஹரிய பொம்மன பாணாசுரனு ஸெரெவிடியெ
கருட வாஹனனாகிக்ருஷ்ண பந்து
ஹரன துரதலி ஜயிசி அவன கிங்கரண
ஸாவிர தோளுகள தரித கதெய நீனரியா. 7

சுரதருவ கித்து ஹரி சுரலோகதிந்த பரெ
ஹரனு ஹரியொடனெ கதனவனு மாடெ
தரஹரிஸலார தோடிய கதெய நீனொம்மெ
ஹிரிஹர முகதி கேளி நம்பு ஹரியா. 8

ஹரசுதனு தபதிந்த யரிய சக்ரவ பேடெ
பரம ஹருஷதலி சக்ரவனீயலு
பரதிந்த தரிஸலாரதெ சக்ரவனந்து
ஹரனு பங்கிதனாத னெந்தரியலா. 9

ராவணாசுர கும்பகர்ண நரகாதிகளு
சைவ தபவனு மாடி வரவ படெயெ
அவருகளனு விஷ்ணு நரருபினிந்தரிது
தேவர்களனு காயித கதெய நீனரியா. 10

கங்கா ஜனகண ஸன்மங்கல சரித்ரகள
ஹிங்கதலெ கேளி சுகிசுவ ஜனரிகெ
பங்கவில்லத பதவனித்து ஸலஹுவ நம்ம
ரங்கவிடலராயன நெரெ நம்பிரோ. 11

# 61. அரியும் அரனும் சமம் என்பர்

**இராகம்:** பௌளி. **தாளம்:** ஜம்பெ தாளம்

## பல்லவி

அரியும் அரனும் சமமென்பர் மயங்கிய மக்கள்
அரிஅரரின் சரித்திரம் அறிந்து புகழ வேண்டும்

## சரணம்

தேவரும் முனிவரும் சேர்ந்து முதற்கடவுள் யாரென
அறிய வேண்டி இரண்டு விற்களைக் கொணர்ந்தே
அரிஅரரிடம் கொடுத்துப் போரிடச் செய்து பார்க்க
முரனைக் கொன்றோன் புரமெரித்தோனை வென்றமை
அறிவாய். 1

அரனை வேண்டி அசுரன் கடுந்தவம் புரியமெச்சி
வரம வனுக்குக் கொடுத்த அரன்நடுங்கி ஓடிவரவும்
அரிவந் தவன் கையைத் தலைமீது வைக்கச் செய்ய அசுரன்
எரிந்தழிய அரனைக் காத்த கதைநீ அறிவாய். 2

அரன்அம்ச துர்வாசர் அம்பரீசன் முன்பு
செருக்குடன் திரிந்தே ஆரவாரம் செய்ய
எவ்வுலகம் சென்றாலும் சக்கரம் நில்லாது துரத்த
உலகத் தலைவன் அரியை வேண்டிப் பிழைத்ததை அறிவாய். 3

அரன்அம்ச துரோணர்மகன் பாண்டவ ரென்றெண்ணி
அவர்மேல் நாராயணாத்திரத்தை விட்டதும்
அரிவேக மாக வந்து தன்னம்பைத் தானே பிடித்துச்
சரணடைந் தாரைக் காத்த கதையை அறிவாய். 4

அரனும் அரியும் பதிரிகாசிரமத்தில் இருக்கையில்
அரன்அரியுடன் போரினைச் செய்யும் பொழுதில்

அரிஅரனின் கழுத்தைக் கையால் பிடித்திழுக்கச்
கழுத்து கருப்பான கதையைக் கேட்டறிவாய். 5

அரிதேவர்க் கமுதமிட்ட உருவினை ஒருமுறை
காண்பே னென்றரன் வேண்டிக் கொண்டதும்
மேலாம் உருவ அழகைக் கண்டதும்
அரன் மயக்கம் கொண்ட கதையைக் கேட்டறிவாய். 6

அரியின் பேரனைப் பாணாசுரன் சிறையிலிட
கருட வாகனத்தில் கண்ணன் வந்தே
அரனைப் போரில் வென்ற சுரனின்
ஆயிரம் தோள்களை வெட்டிய கதையைநீ அறிவாய். 7

தேவதருவை எடுத்துக் கொண்டஅரி தேவருலகத் திருந்துவர
அரன்அரியுடன் போரினைச் செய்துகொண் டிருக்கையில்
பொறுக்காம லோடிய கதைநீ ஒருமுறை
பெரியோர் வாய்கேட்டு நம்புவாய் அரியை. 8

அரன்மகன்தவம் செய்தரியிடம் சக்கரம் வேண்ட
மிகவும் மகிழ்ந்து சக்கரம் கொடுக்க
சுமைதாங்க இயலாது சக்கரத் தாலன்
றரன்குறை வடைந்தான் என்பதை அறிவாய். 9

இராவணன் கும்ப கருணன் போன்றோர்
சிவனைக் குறித்துத் தவமியற்றி வரங்களைப் பெற
அவர்களைத்திருமால் மனித உருவில் வந்து கொன்று
வேர்களைக் காத்த கதையைநீ அறிவாய். 10

கங்கையைத் தந்தவனின் நல்ல கதைகளைக்
குறையின்றிக் கேட்டு மகிழும் மக்களுக்குப்
பங்க மில்லாப் பதம்தந்து காப்பான்நம்
மரங்க விட்டலனை முற்றும் நம்புவீர். 11

62. **இராகம்:** நாதநாமக்கிரியை **தாளம்** : ஏக தாளம்

## பல்லவி

ஹரே வெங்கடசைல வல்லப
பொரெயபேகு என்ன.

## அனுபல்லவி

துரிததூர நீனல்லதெ தரெயொளு
பொரெவர நா காணெ நின்னாணெ.

## சரணம்

ஆரு நின்ன ஹொரா தென்ன பொரெவரு
நீரஜாக்ஷ ஹரியெ
அபாரமஹிம புராண புருஷ
கோர துரிதகள தூர மாடிஸோ. 1

இந்திரேச அரவிந்தநயன என்ன
தந்தெ தாயி நீனே
ஹொரந்திதவர அகவ்ருந்த களெவ
மந்தராத்ரி தரனே ஸ்ரீதரனே. 2

மங்களாங்க மஹனீய குணார்ணவ
கங்கோதித பாத
அங்கஜபித அஹிராஜசய்ய ஸ்ரீ
ரங்கவிடல தொரெயே ஸ்ரீ ஹரியே. 3

# 62. காக்க வேண்டும் என்னை

**இராகம்:** நாதநாமக்கிரியை. **தாளம்:** ஏக தாளம்

### பல்லவி

அரியே வேங்கட மலையை உடையோனே
காக்க வேண்டும் என்னை.

### அனுபல்லவி

பாவம் போக்கும் உன்னையன்றித் தரையில்
காப்பவரை நான்காணேன் உன்னாணை.

### சரணம்

உன்னை விட்டால் யார்என்னைக் காப்பவர்
தாமரைக் கண்ணா அரியே
மிகுந்த பெருமையோய் புராண புருடனே
கோரமான பாவங்களை விலகச் செய்வாய். 1

திருமகள் தலைவ தாமரைக் கண்ணா
எனது தந்தைதாய் நீயே
அடைக்கலம் அடைந்தார் பாவம் போக்கும்
மந்தர மலையைத் தாங்கிய சிரிதரனே. 2

மங்கலம் நிறைந்த நற்குண நம்பியே
கங்கையைத் தந்த பாதனே
மன்மதன் தந்தை பாம்பணை யோனே
திருவரங்க விட்டலா துரையே அரியே. 3

### 63. உகாபோக

அம்பரதாளவனு இனசசிகளல்லதெ
அம்பரதளதளாடுவ பக்ஷிதாவு பல்லவெ ?
ஜலத ப்ரமாணவ தாவரெகளல்லதெ
மேலித்த மரகிட பள்ளிகள தாவு பல்லவெ ?
மாவின ஹண்ணின ருசி அரகிளிகளல்லதெ
சீர்வ காகெகளு தாவு பல்லவெ ?
நின்ன மஹிமெ நின்ன பக்தரு பல்லரு
மத்தன்யரேனு பல்லரய்ய ?
பக்தராதீனனெ பக்தரொடெயனெ
பக்தர ஸலஹய்ய நமோ ரங்கவிடலய்ய.

## 63. உன் பெருமை அடியாரே அறிவர்

### உகாபோக

வானின் எல்லையைச் சூரிய சந்திர ரன்றி
வானிலாடும் பறவைகள் அறிய வல்லனவா ?
நீரின் ஆழத்தைத் தாமரைக ளன்றி
மேலிருக்கும் மரம்செடி கொடிகளறிய வல்லனவா ?
மாம்பழச் சுவையை அரசுக்கிளிகளன்றிக்
கொத்தும் காக்கைகள் அறிய வல்லனவா ?
உன்பெருமை உன்னடியார் அறிவர்
மற்றவர் அறிய வல்லவரா ஐயா
அடியார் ஆதிக்கத்தில் இருப்போய்
அடியாரின் உடையோனே
அடியாரைக் காப்பாய் வணக்கம்
அரங்க விட்டல ஐயனே.

## உகாபோக

64. கலிகாலகெ ஸமயுகவில்லவய்ய
கலுஷ ஹரிசி கைவல்லவீவுதய்ய
ஸலெ நாம கீர்த்தனெ ஸ்மரணெ ஸாகய்ய
ஸ்மரிஸலு ஸாயுஜ்ய பதவீவுதய்ய
பலவந்த ஸ்ரீரங்க விடலன நெனெதரெ
கலியுகவே க்ருதயுக வாகுவு தய்ய.

## 64. கலியுகத்திற்குச் சமம் இல்லை

### உகாபோக

கலிகாலத்திற்குச் சமம்இல்லை ஐயா
தீமை நீக்கி வீடு பேறுதரும் ஐயா
நாமங்களைப் பாடுவதும் நினைப்பதும் போதுமையா.
நினைத்தாலே சாயுச்சிய பதவிதரும் ஐயா
வலியன் திருவரங்க விட்டலனை நினைத்தால்
கலியுகமே கிருதயுகமாக ஆகும் ஐயா.

65. **இராகம் :** தோடி. **தாளம்:** ஆதிதாளம்

### பல்லவி

தா தா தா தா தா ரங்க நின்ன பாத
தை தை தை தை தை யெந்து குணியுத..

### சரணம்

நிகமவ தந்து நகவ பென்னலி பொத்து
அகதெு பேரு திந்து பாலனஸலஹிதெ அந்து. 1

பொடவி ஈரடி மாடி கொடலி பிடிது முனி
மடதிய ஸலஹித என்னொடெய ஸ்ரீகிருஷ்ண. 2

அங்கனெயர வ்ரதபங்கவ மாடிதெ
துங்க குதுரெயேரித ரங்கவிடலனெ. 3

# 65.தசாவதாரம்

**இராகம்:** தோடி. **தாளம்:** ஆதிதாளம்

## பல்லவி

தா தா தா தா தா அரங்கா உனது பாதம்
தை தை தை தை தை என்று குதித்ததே.

## சரணம்

வேதத்தைத் தந்து மலையை முதுகில் சுமந்தாய்
அகழ்ந்து வேரைத் தின்று பாலனைக் காத்தாய் அன்று. 1

புவியை ஈரடியால் அளந்து கோடரி பிடித்து முனிவரின்
மனைவியைக் காத்தாய் என்னை ஆளுடை கண்ணனே. 2

பெண்டிரின் விரதத்தைக் குறைகாணச் செய்தாய்
மேன்மையாம் குதிரை மீதே ஏறினாய் அரங்க விட்டலனே. 3

## 66. உகாபோக

பருவுது புத்தியு பலவு கீருதியு
நிருததி தைர்யவு நிர்பயத் வவு
அரோகானந்த அஜாட்ய வாக்படுத்வவு
ஹரே ரங்கவிடல ஹனுமா எனலு.

66. **அனுமன் என்று கூறினால்**

**உகாபோக**

வருவ தறிவு வலிமை புகழே
மிகுந்த தைரியம் அச்சமில்லாத் தன்மை
உடல்நலம் இன்பம் நோயின்மை சொல்திறன்
அரேஅரங்க விட்டலா அனுமன் என்றால்.

67. **உகாபோக**

பல்லவனு உள்ளவனு நீனிரலு பஜிஸதெ
க்சுல்லர மதவிடிது சுகவ பயசுவெ நானு
கல்லு கோவின ஹாலு கருபயசிதந்தெ நா
ஹல்லு ஹோகுதனரியெ அகடகட மந்தமதியு
கள்ள கோவனு ஹல்லு கஞ்சியனெரெது
பல்லிதாஸெய பிடிஸோ நமோ ரங்கவிடல.

# 67. வல்லவன் நீ இருக்க.

வல்லவன் உள்ளவன்நீ இருக்க விரும்பாமல்
கீழானவர் மதத்தைப் பிடித்துச் சுகத்தை விரும்புவேன்நான்
கல்பசுவின் பாலைக் கன்று விரும்புவது போல்நான்
பல்போவதை அறியேன் மந்த மதியன்நான்
கள்ளப் பசுவின்முன் புல்கட்டை எறிந்து வளர்த்தால்
என்ன பயன் ?
வலிய ஆசையை விடுவிப்பாய் வணக்கம் அரங்க விட்டலா.

68. **இராகம் :** முகாரி **தாளம்:** அடதாளம்

### பல்லவி

வாசுதேவ நின்ன மர்மகர்மங்கள
தேச தேசதல்லி ப்ரகடிஸலோ.

### அனுபல்லவி

பேஸரதெ என்ன ஹ்ருதய கமலதல்லி
வாஸவாகி சும்மனித்தீயொ.

### சரணம்

தரளதனதலித்து துருளனாகி பந்து
ஒரளிகெ கட்டிசி கொண்டுதனு
துருவ காயலி போகி கல்லியோகரவனு
கொல்லர கூட நீ உண்டுதனு
நெரெ மனெ ஹொரமனெகள பொக்கு பெண்ணெய
அரியதந்தெ யாதரெ கத்து மெத்துதனு
கெரளிசிதெ யாதரெ ஒதருவெ எலொநர
ஹரி என்ன பாயிகெ பந்துதனு. 1

கட்டிகரெவ ஏளுதினத மனெகெ போகி
பெட்டவ பொத்தத்து ஹேளலொ
அட்டிசி கொள்ளுத யாகசாலெகெ போகி
ஹொட்டெய ஹொரெதத்து ஹேளலொ
துஷ்ட ஹாவின ஹெடெயனு துளிதாடித
துஷ்ட தனவனு ஹேளலொ
நெட்டு னெ அம்பரகெத்திதன ஹொய்து
ஹிட்டு கட்டிட்டுத ஹேளலொ. 2

பிடியவலிகெ மெச்சி ஸம்பதவன கொட்ட
பெடகதனவனில்லி ஹேளலொ

ஹிடியபந்த காலயவனகஞ்சி கல்ல
படெய ஹொக்கித்துத ஹேளலொ
மடித மகன குருவிகெ கொடபேகெம்ப
ஸடகரதனவில்லி ஹேளலொ
மடதிமாதிகெ போகிநீ பாரிஜாதவ
தடெயதெ தந்தத்து ஹேளலொ. 3

மௌன கௌரிய நோன பந்த ஹெங்களனெல்ல
மானவ கொண்டத்து ஹேளலொ
தானாகி மொலெயனூடிஸ பந்தவளன்னு
ப்ராணவ கொண்டத்து ஹேளலொ
கானன தொளு துருவின்டுகளனு காய்த
ஹீனதனவனில்லி ஹேளலொ
மானினியர மனெகள பொக்கு பெண்ணெய
ஹானிய மாடித்து ஹேளலொ 4

தரணிமகன கொந்து தருணியரனு தந்த
துருவதனவனில்லி ஹேளலொ
ஐரெய மகனிகஞ்சி புரவிபிட்டு போகி
சரதிய பொக்கத்து ஹேளலொ
தரெயொளதிக ஸ்ரீரங்கபட்டணதல்லி
ஸ்திரவாகி நிந்தத்து ஹேளலொ
சரணாகதர காவ ரங்கவிடலன்னெ
பரம தயாளெந்து ஹேளலொ. 5

# 68. எந்தக் குறும்பினைக் கூறுவேன்

**இராகம்:** முகாரி **தாளம்:** அடதாளம்

### பல்லவி

வாசு தேவனே நின்மர்மச் செயல்களை
நாடு நாடுகளில் பரப்புவேன்.

### அனுபல்லவி

சலிப்பின்றி என்னிதயக் கமலத்தில்
வசித்துச் சும்மா இருப்பாயோ.

### சரணம்

குறும்புத் தனத்தால் பட்டியாகி வந்ததால்
உரலில் கட்டப் பட்டாய்
கன்றுகளை மேய்க்கச் சென்று கட்டுச் சோற்றிலிருந்
திடையர் தந்த உணவை உண்டாய்
பக்கத்து வீடுகளில் புகுந்து வெண்ணெயை
யாரும் அறியாமல் திருடித் தின்றாய்.
என்னைச் சீண்டினால் நினைத்ததைக் கூறுவேன்
எலேநர அரியே என்வாயில் வருவதை. 1

கட்டியாய்விழும் ஏழுநாள் மழையில் சென்று
மலையைச் சுமந்ததைக் கூறட்டுமா.
பின்தொடர்ந்து யாக சாலையுள் சென்று
வயிறு நிரப்பியதைக் கூறட்டுமா.
கொடிய பாம்பின் படம்மீது குதித்தாடிய
துட்ட தனத்தைக் கூறட்டுமா
விரைந்து வானத்தில் எடுத்தவனை உதைத்துப்
பொடியாகச் செய்ததைக் கூறட்டுமா. 2

பிடியவலை மெச்சிச் செல்வத்தைக் கொடுத்த
அறியாமை அங்குக் கூறட்டுமா
பிடிக்க வந்த கால யவனனுக் கஞ்சிக்

கற்குகைக்குள் ஒளிந்ததைக் கூறட்டுமா
இறந்த மகனைக் குருவிற்குக் கொடுத்த
சாமர்த்தி யத்தை இங்குக் கூறட்டுமா
மனைவியின் பேச்சிற்கு நீபாரி ஜாத
மலரைத் தந்ததைக் கூறட்டுமா. 3

கார்த்தியாயினி விரதம் நோற்க வந்த பெண்களின்
மானத்தை வாங்கியதைக் கூறட்டுமா.
தானே முலைப்பால் ஊட்ட வந்தவளின்
உயிரைக் குடித்ததைக் கூறட்டுமா
காட்டில் மாடு கன்றுகளை மேய்த்த
ஈனத்தை இங்குக் கூறட்டுமா
கோபியரின் மனைகளுக்குள் புகுந்து வெண்ணெய்
குறையச் செய்ததைக் கூறட்டுமா ? 4

நிலமகள் மகனைக் கொன்றிளம் பெண்களைக் கொணர்ந்த
ஆற்றலை இங்குக் கூறட்டுமா
சரேயின்மக னுக்கஞ்சி ஊரைவிட்டுச் சென்று
கடலை அடைந்ததைக் கூறட்டுமா ?
தரையுள் அதிகமாம் திருவரங்கப் பட்டிணத்தில்
நிலையாக நின்றதைக் கூறட்டுமா ?
அடைக்கலம் அடைந்தாரைக் காக்கும் அரங்க விட்டலனே
பரம தயாளன் என்று கூறட்டுமா ? 5

69. **இராகம்:** கல்யாணி. **தாளம்:** திரிபுடை தாளம்

## பல்லவி

ஏகெ தூருவிரே ரங்கய்யன
ஏகெ தூருவிரே.

## அனுபல்லவி

ஸாகு நிம்ம தர பல்லெனு
ஈகுவரனா க்ருத்ய மாள்பனெ.

### சரணம்

தட்டடியிடலரிய கோவத்ஸவ
பிட்டு சலிஸபல்லனெ
கட்டியாகி கொத்தினல்லி
கட்டினொளு கட்டித்த கருகள
பிட்டனெ ஈ க்ருஷ்ணன மேல்
எஷ்டு ஹொட்டெ கிச்செ நிமகெ. 1

கெனெ ஹாலு பெண்ணெயனு இத்தரெ
ஆதினவொல்லனு ஊடவ
மனெ மனெ மனெ மனெகளனு பொக்கு
பெண்ணெ பால்மொஸரன்னு தின்னுத
வனிதெயர கூடாடிதனெந்
தெனலு நிமகெ நாசிகில்லவெ. 2

பாலு மொஸரு பெண்ணெயு இல்லவெ
நம்மாயதொளு நோடிரெ
ஹேளுவரெ ஈ டெளளிகள கோ
பாலபாலன நோடி ஸைஸதெ
பாளுவிர பவ ஜலதிளிந்தலி
தேளிசுவனெ ரங்கவிடல. 3

## 69. எதற்காகத் தூற்றுவீர்?

**இராகம் :** கல்யாணி. **தாளம்:** திரிபுடை தாளம்.

### பல்லவி

எதற்காகத் தூற்றுவீர் அரங்கனாம் ஐயனை
எதற்காகத் தூற்றுவீர்.

## அனுபல்லவி

போதும் உங்கள் அவதூறு வல்லேன்
இந்தச் சிறுவன் அந்தச் செயலைச் செய்வானே.

## சரணம்

ஊன்றி அடியிடல் அறியாதவன் பசுமாடம்
விடுத்து நடக்க வல்லனே
கெட்டியாகத் தொழுவத்தில்
கொட்டிலில் கட்டிய கன்றுகளை
அவிழ்த்து விட்டானா இந்தக் கண்ணன்மீதே
எவ்வளவு வயிற்றெரிச்சல் உங்களுக்கு. 1

வீட்டில் பால்வெண்ணெய் இருந்தால்
அந்த நாளில் உண்ண மாட்டான்
வீடு வீடாகப் புகுந்து
வெண்ணெய் பால்மோரைத் தின்றவாறு
பெண்களுடன் கூடி ஆடினான் என்று
கூறுவதில் உங்களுக்கு வெட்கம் அன்றோ. 2

பால்மோர் வெண்ணெய் இல்லையா
எங்கள் வீட்டின் உள்ளே பாருங்கள்
கூறுவர் இந்தப் பொய்யர்
கோபாலனைப் பார்க்கப் பொறாமையால்
வாழ்வோரைப் பிறவிக் கடலிலிருந்து
கரையேற்றுவான் அரங்க விட்டலன். 3

70. **இராகம் :** இந்தோளம் **தாளம்:** ரூபக தாளம்

## பல்லவி

ஏனுப்ரமெ மனுஜரிகெ எஷ்டு மமதெ ப்ரக்ருதியலி
மீனு காணளவ நுங்கி மோஸ ஹோாத தெரனந்தெ.

### சரணம்

நன்ன மனெ நன்ன ஸதி நன்ன சுதரெந்தெனிசி
ஹொண்ணுகள களிசி ஹெச்சாகி ஹோர்யாடி
ஸன்னவர மதுவெ ஸம்ப்ரமதி மாடுவனெந்து
அன்ன மொதலு காணதெ அந்த்ர பிசாசியந்தெ. 1

பலுவோதிகெயல்லி பல்லவரெனிஸ பேகெனுத
ஹலவு புத்தியலி ஹிர்ரனெ ஹிக்குத
மலின மனசினஜ் ஞானதலி தானரியதெ
பலெயலி சிலுகித பக்ஷியந்தெ பளலுதிக. 2

மிகிலு ஆஸெகெ பித்துபகெபகெ ஹரணிகெயலி
ஹொகதல்லி ஹொகுவர ஹொலபிட்டு திளியரு
ககவாஹன முத்து ரங்கவிடலன நாம ஸ்மரிஸலு
விகட ஸம்ஸார ஹகரண நீரகுள்ளெயந்தெ. 3

## 70. எவ்வளவு மயக்கம் மனிதர்க்கு?

**இராகம்:** இந்தோளம் **தாளம் :** ரூபக தாளம்

### பல்லவி

எவ்வளவு மயக்கம் மனிதர்க்
கெவ்வள வாசை புவிமீது
மீன் தூண்டிலை விழுங்கி
ஏமாந்தது போலே.

### சரணம்

என்வீடு என்மனைவி என்மக்கள் என்றெண்ணிப்
பொன்னைப் பெற்றுப் பெரிதாகப் போராடி

இளையோர் திருமணம் கோலாகலத்துடன் செய்வேனென்
றுணவை முதலில் காணாத அந்தரப் பிசாசுகளைப் போல். 1

பலவித் தைகளில் வல்லவனாக எண்ணிப்
பலபுத் திகளில் விர்என்று குதித்தவாறு
மலிந்த மனத்தால் ஞானத்தைத்தான் அறியாமல்
வலையில் சிக்கிய பறவைபோல் உழல்வீர். 2

மிகுந்த ஆசையில் விழுந்து வகைவகை உறுதிகளில்
புகாமல் புகுவர் அதைவிடுக்க அறியார்
கருடவாகனன் முத்தான அரங்கவிட்டலன் பெயரை
நினைத்தால்
விகடமான வாழ்க்கைத் தொல்லைகள் நீர்க்குமிழியைப்
போல்நீங்கும். 3

71. **இராகம்:** சங்கராபரணம். **தாளம்:** ஆதிதாளம்

## பல்லவி

ஒலிதெ யாதகம்மா லக்ஷ்மி
வாசுதேவகெ.

## அனுபல்லவி

சுத்த நீலவர்ணத மைய
கப்பினவனிகெ ஹ்யாகெ.

## சரணம்

ஹட்டித மனெகள பிட்டு – கள்ள
திட்ட தனதிகோகுலதல்லி பெளெத
சட்டி ஸஹித ஹாலு குடித – அல்லி
திட்ட காளிங்கன ஹெடெய துளிதவனிகெ.. 1

கொல்லர மனெகள பொக்கு – அல்லி
குல்லு மாடதெ மொஸரெல்ல ஸவித
மெல்லனெ ஸவிமாதனாடி – அல்லி
எல்ல ஸகியர அபிமான கேடிகெ. 2

மாவன மர்திசிதவகெ – அல்லி
ஸோள ஸாவிர கோபேரிகெ மதுவெ ஆதவகெ
ஹாவின ம்யாலொரகிதவகெ
காவேரி தீரத ரங்கவிடலகெ. 3

# 71. ஒப்பினாய் எதற்காக?

**இராகம் :** சங்கராபரணம் **தாளம்:** ஆதிதாளம்

ஒப்புக் கொண்டாய் எதற்காக இலக்குமி
வாசுதேவனை.

## அனுபல்லவி

தூய நீலநிற உடல்கொண்ட
கருப்பனை எதற்காக.

## சரணம்

பிறந்த வீட்டை விடுத்துக்
கள்ளத் தனத்தால் கோகுலத்தில் வளர்ந்தான்
பானையுடன் பாலைக் குடித்தான் – அங்கே
திடமான காளிங்கன் படம்மீது குதித்தாடினான். 1

இடையர் வீடுகளில் புகுந்தங்கே
ஓசை செய்யாமல் மோரைக் குடித்தான்.

மெதுவாக இனிய சொற்களைப் பேசி – அங்கே
எல்லாத் தோழியரின் மானம் கெடுத்தான். 2

மாமனைக் கொன்றவன் – அங்கே
ஆயிரம் கோபியரை மணந்தவன்
பாம்பின் மீது படுத்தவன்
காவிரிக் கரையின் அரங்க விட்டலன். 3

72. **இராகம்:** காம்போதி. **தாளம்:** ஆதிதாளம்

## பல்லவி

கந்து பிதனெ நின்ன எந்து வர்ணிபலக்ஷ்மீ
காந்த பாலிஸென்னனு நிரந்தரதலி.

## அனுபல்லவி

குந்தீ புத்ரகெ நீனத்யந்த ஸாரதித்வவ மாடி
நிந்து துர்யோதனன சிரவ அந்தகனி கொப்பி சிததீர.

## சரணம்

சுந்தர வதன நின்ன கந்த பஜிஸலு முத
திந்த கம்பதொள் பந்தெ மந்தரோத்தர
சிந்து சாயி ரக்கஸன கொந்து கருள மாலெயன்னு
செந்ததிம் கந்தரதொள் தரிசிதானந்த மூர்த்தி இந்திரேச. 1

ஜம்புவைரி முக்ய சுரகதம்ப ஜிதாங்க்ரியுகள
நம்பித பக்தர காய்வ அம்புஜனேத்ர
அம்பரீஷ த்வாதசி சுப்ரமதி மாடுதிரெ
டொம்பியம் தூர்வாஸ சபிஸெ பெம்பிடதெ சக்ரதி ஸலஹித. 2

கங்கெய ஜனக நின்ன அங்கனெ த்ரௌபத தேவி
பங்க விடிஸெந்து கூகெ மங்களாங்கனெ
ஸாங்க திந்த வஸ்த்ரங்களயிங்கதெ
ரங்கவிடல பாலிசீக துங்கவிக்ரம என்ன மாது. 3

# 72. எப்பொழுதும் என்னைக் காப்பாய்

**இராகம்** : காம்போதி. **தாளம்:** ஆதிதாளம்

## பல்லவி

மன்மதன் தந்தையே உன்னை என்று வர்ணிப்பேன்
இலக்குமீ கணவனே காப்பாய் என்னை எப்பொழுதம்

## அனுபல்லவி

குந்தியின் மகனுக்கு நெருக்கமாய் தேரைச் செலுத்தி
நின்று துரியோதனனின் தலையை எமனுக் கொப்புவித்த தீரனே!

## சரணம்

அழகு முகத்தாய் உன்னைக் குழந்தை துதித்ததும்
ஆர்ப்புடன் தூணிலிருந்து வெளிப்பட்டாய்
மந்தர மலையைச் சுமந்தவனே
கடலில் படுத்தோய் அரக்கரைக் கொன்று குடல்மாலையை
அழகாகக் கழுத்திலணிந்த இன்ப உருவனே இலக்குமி
கணவ. 1

இந்திரன் முதலான தேவர் கூட்டம் பூசித்த
இரண்டு பாதங்களால்
நம்பிய அடியாரைக் காக்கும் தாமரைக் கண்ணா.
அம்பரீசன் துவாதசி விரதம் சிறப்புடன் செய்கையில்
கோபத்துடன் துர்வாசர் சபிக்க
தாமதியாது சக்கரத்தால் காத்தாய். 2

கங்கையின் தந்தையே உன்னை அழகி துரௌபதி தேவி
மானம் காப்பாய் என்று கூவ மங்கலம் நிறைந்தோனே
ஆடைகளை இடைவிடாது கொடுத்துக் காத்த
அரங்க விட்டலா காப்பாய் இப்போது வலியோனே வேண்டுகோள்.
3

73. **உகாபோக**

**இராகம்:** புன்னாக வராளி **தாளம்:**ஆதிதாளம்

கம்பளிய புத்தியலி கஸவனாரிசுவருண்டெ
அம்புஜோதரன நெலெ அரியத துராதுமரு
பெம்பிடதெசுகனரசுவருண்டெ ? உத
ரம்பரதி இடம்பகரு இஹபரகெ பாஹ்யரெந்தூ
சம்பராந்தக பித ரங்கவிடலரேயன்ன பா
தாம்புஜோத் ப்ரமரதொளுமிகெ தூரராதவரு
பெம்பிடதெ சுகவனரசுவருண்டெ ?

# 73. இன்பம் நுகர்வாரோ?

**உகாபோக.**

**இராகம் :** புன்னாகவராளி. **தாளம் :** ஆதிதாளம்

கம்பளியின் மூட்டையில் சேற்றைக்
கட்டிக் கொள்பவர் உண்டோ ?
பதுமநாபனின் நிலைஅறியாத தீயவர்
அனுசரிக்காமல் இன்பம் நுகர் வதுண்டோ ?
வயிற்றையே நினைப்பவர் இம்மை மறுமை
இன்பத்திற்கு விலகியவர்
சம்பரனைக் கொன்ற பிரத்யுத்மனின்
தந்தை அரங்க விட்டலனின்
பாதத் தாமரைகளை வண்டுபோல் சுற்றாது தூரமானவர்
அனுசரிக்காமல் இன்பம் நுகர்வதுண்டோ ?

74. **இராகம் :** சுருட்டி **தாளம்:** ஆதிதாளம்

## பல்லவி

கீர்த்தி சி ஜனரெல்ல ஹரிய குண

## அனுபல்லவி

கீர்த்திசி ஜனரு க்ருதார்தராகிரோ.

## சரணம்

ஆவனு வனதொளகெ நித்யதி
பாஹ ஜனர படிது
ஜீவன மாள்ப கிராதனு கீர்திஸெ
தா ஒலிதாதன கோவிதனெனிசித. 1

ஆவன பாதரஜ ஸோகலு
ஆவனிதெயஜட
பாவவ தொளகிசி ஆவனிதெயனு
பாவன மாடித தேவாதி தேவன. 2

அந்து சபரி தானு ப்ரேமதி
திந்த பலவ கொடலு
குந்த நோடதெ ஆனந்ததி க்ரஹிசி
குந்தத பதவியனந்து கொட்டவன. 3

துஷ்டராவண தான சரரிகெ
கஷ்டபடிசிதிரலு
புட்டி புவனதொளு குட்டி களர சுர
ரிஷ்டவ ஸலிசித ஸ்ருஷ்டி கொடெயன. 4

தன்ன நம்பித ஜனர மத்தெ தா
னன்யரி கொப்பிஸதெ
முன்னினகவ களெதின்னு காபடுவ
கன்ன மஹிம ஸ்ரீரங்கவிடலன்ன. 5

# 74. நற்செயலினர் ஆவீர்

**இராகம்:** சுருட்டி. **தாளம்:** ஆதிதாளம்

### பல்லவி

புகழ்வீர் மக்கள் எல்லோரும்
அரியின் குணங்களை

### அனுபல்லவி

புகழ்ந்த மக்கள் நற்செயலினர் ஆவீர்.

### சரணம்

காட்டின் உள்ளே நாடொறும்
வழிப்போக் கரைத்துன் புறுத்தி
வாழ்க்கை நடத்தியவேடன் புகழ்ந்து
விரும்பப்பட்ட பண்டித னானான். 1

அவனின் பாதத்தூசி பட்டதும்
அந்தப் பெண்ணின்
கல்லுருவை நீக்கி அந்தப் பெண்ணைப்
புனித மாக்கினான் தேவாதி தேவன். 2

அன்று சபரிதான் அன்புடன்
தின்ற பழங்களைக் கொடுக்கக்
குறைகாணாமல் மகிழ்வுடன் உண்டதும்
அழியாத பதவியை அன்று கொடுத்தான். 3

தீய இராவணன் தேவர்களுக்குத்
துன்பம் இழைத்து வருகையில்
அவதரித் துலகில் தீயவரைக் கொன்று
தேவர்கள் விருப்பம் நிறைவேற்றினான் படைப்பிற் குடையவன். 4

தன்னை நம்பும் மக்களைத்தான்
பிறரிடம் ஒப்பு விக்காமல்
முன்செய்த பாவங்களைப் போக்கிக் காப்பான்
மிகுந்த பெருமையன் அரங்க விட்டலன். 5

75. **இராகம்:** ஆகரி. **தாளம்:** திரிபுடை தாளம்

## பல்லவி

கும்ம பந்தனெலொ தூர்ஜன பேட
சும்மனிரெலொ ரங்கய்ய.

## சரணம்

உட்ட புலிதொவலு தொட்ட முத்தினிஹார
இட்ட காமாக்ஷி கபால த்ரிசூல
பட்டு ஹணெமெரிய சரணதலி மெட்டித ஹாவுகெய
திட்ட மூர்த்தி நிம்ம சரண ஸேவெகெ நித்ய. 1

கடக கங்கண பாஹுபுரி புஜகீர்த்தியு
உரதல்லி தரிசித ருண்டமாலியு தன்ன
சிரத ஜடாஸடெயு தாம் தரிசித உரகனா
பரணகளு பரம மூருதி நிம்ம சரண ஸேவகெ நித்ய. 2

காமன்ன ரூபக்கெ ஜரிவா சன்னிகனாகி
கோமலாங்கேரு பிக்ஷவ நீடலு ப்ரேமதிந்தவரிகெல்ல
முக்தியனீவ ஸோமசேகர செல்வ
ராமனா பாவ ம்ருதுவாக்ய விது முத்து. 3

கோடி சூர்யர காந்தி நேடாத தனுவின
பூசித பஸ்மவு நொஸல முக்கிகண்ணின நோடத
கிடியுதிரெ பூதகணங்களு குடிகிச்சக பெதரெ
நாட்வனாடுத நகுதமோஹன முத்து. 4

அஞ்ஜெ காணம்ம நா அகலிதவ ஜோகி
ஜங்கம வேஷவு கைகொண்டு மலையாள
கொங்க குஜ்ஜர பாஷையு பாஷிசுதலி
ரங்கவிடலனெ செல்வ மங்களமூருதி நிம்ம
சரண ஸேவகெ நித்ய. 5

# 75. சும்மா இருப்பாய் அரங்கா

**இராகம்:** ஆகரி. **தாளம் :** திரிபுடை தாளம்

### பல்லவி

பூதம் வந்ததோ தீயவர் வேண்டா
சும்மா இருப்பாய் அரங்கையா.

### சரணம்

உடுத்திய புலித்தோல் முத்துமாலை அணிந்த
காமாட்சி கபாலம் திரிசூலம்
வீபூதி நெற்றியில் காலில்செருப்
பணிந்த மூர்த்தி உன்திருவடிப் பணிக்குத்தயார். 1

கடகம் கங்கணம் வாகுவளையம் புயகீர்த்தி
மார்பில் அணிந்த தலைமாலை தனது
தலையில் சடைமுடி பாம்பாம் அணிகலன்கள்
அணிந்த மேலான மூர்த்தி உன்திருவடிப் பணிக்குத்தயார். 2

காமனின் உருவை எரித்தவனாகிப்
பெண்டிர் பிச்சையிட அன்புடன் அவர்களுக்கு
முத்தி அளிக்கும் சிவனுக்கும் அழகிய
இராமனுக்கும் மகிழ்வளிக்கும் வார்த்தையிது முத்தானது. 3

கோடி சூரியப் பிரகாச மானஉடல்
விபூதி அணிந்து நெற்றியில் மூன்றுகண்
தீஉமிழும் பூதகணங்களோடு சேர்ந்து
நாட்டிய மாடும் புன்னகைக்கும் மோகனன். 4

அஞ்சேன் அம்மா நான்அகன்று துறவி
சங்கம வேடம் கைக்கொண்டு மலையாளம்
கொங்கு மராட்டி மொழிகளைப் பேசும்போதும்
அரங்க விட்டலனே அழகிய மங்கல மூர்த்தி
உன்திருவடிப் பணிக்குத்தயார் 5

76. **இராகம் :** மோகனம் **தாளம் :** ஜம்பெ தாளம்

## பல்லவி

சிந்தெயனு மாடதிரு சதுரெ நினகெ நானு
கந்துபிதனனு தோருவெ.

## அனுபல்லவி

ஸந்தோஷதிந்த ஸர்வாபரணவிட்டு கொண்டு
நிந்து பாகிலொளு நோடெ பாடெ.

## சரணம்

ஒந்து க்ஷண பாதாரவிந்த தொளெது குடிது
மந்தஹாஸதலி நலிது
ஒந்தெ மனதலி திவ்யகந்தவனு தந்த்ஹச்சி
நந்ததிந்தவன மெச்சி

அந்தவாத குசும ஹாரவனு சுகந்திகெ
கந்தரதிநீடி நோடி
சந்தேஹ பிட்டு பிகிதப்பி மனவொந்தாகி
எந்தெந்திககலதிரென்ன ரன்னெ. 1

ஆஸனவ கொட்டு கமலாஸனன பிதகெ ஸவி
யூடகளனுண்ணிசி
லேஸாகி தாம்பூல தபகதலி தந்திட்டு
வாஸனெகளனெ தொட்டு
க்ஷுசுவ சுளிகுருளங்கள தித்துதலி நக்கு
ஸ்ரீசன்ன மரெய ஹொக்கு
ஆ ஸமயதலி நினகெ தாசி என்னய மனதி
வாஸவாகு பிடதெ என்னெ ரன்னெ. 2

இந்து ஈ பரியல்லி ஸ்ரீகாந்தனனு கூடி
ஏகாந்ததலி ரதிய மாடி
சந்தோஷவனு படிசி சகல போகவ திளிசி
ஸந்தத ஸ்னேஹ பெளெசி
அந்தரங்ககெ ஹச்சி அவனாகி தா மெச்சி
ப்ரீதியிந்ததர கச்சி
கந்து கேளியொளு கடுசெல்வ ரங்கவிடல
இந்து நன்னகல காணெ – ஜாணெ. 3

# 76. கவலைப்படாதே தோழியே.

**இராகம்:** மோகனம் **தாளம்:** ஜம்பெ தாளம்

## பல்லவி

கவலைப்படாதே வித்தகியே உனக்குநான்
மன்மதனின் தந்தையைக் காட்டுவேன்.

## அனுபல்லவி

மகிழ்ச்சியுடன் எல்லா அணிகளையும் அணிந்து
நின்று வாயிலின் உள்ளே காண்பாய்.

## சரணம்

ஒருகணம் பாதத் தாமரையைக் கழுவிக் குடித்துப்
புன்னகையுடன் மகிழ்ந்தே
ஒரே மனத்துடன் சந்தனம் தந்து பூசி
ஆனந்தத்துடன் அவனை மெச்சி
அழகிய மணம்நிறை மாலையை இன்பநிதிக்குக்
கழுத்தில் அணிவித்துப் பார்த்து
சந்தே கத்தைவிட் டனைத்துமனம் ஒன்றாகி
என்றைக்கும் அகலாதிரு என்பாய் இரத்தினமே. 1

இருக்கை கொடுத்துத் தாமரையில் இருக்கும் பிரமனின் தந்தைக்
கினிய உணவுகளை உண்பித்ததும்
எளிதில் தாம்பூலத்தைத் தட்டில் கொண்டு வைத்து
வாசனைகளைத் தடவிச்
சுருட்டை மயிரைத் திருத்தும்போது சிரித்து
மறைவான இடத்தில் புகுகின்ற
அந்த நேரத்தில் உன்னடிமை நான்என் மனத்தில்
வசிப்பாய் விடாமல் என்பாய் இரத்தினமே. 2

இன்றிருந்த முறையில் சிரிகாந்தனைக் கூடி
ஏகாந்தத்தில் கிரீடைகளால்
இன்புறுத்தி எல்லாப் போகங்களும் தெரிவித்து
நாடோறும் நட்பை வளர்த்தவா
றந்தரங்கத்தில் அழைக்க அவனாகவே மெச்சி
அன்புடன் உதட்டைக் கடித்துக்
கிரீடையால் மிகவும் அழகிய அரங்க விட்டலன்
இன்றுனை அகலான் காண்பாய் அறிவுடையாய். 3

7. **இராகம்:** மோகனம் **தாளம்:** ஆதிதாளம்

## பல்லவி

துருகாய பந்த கோபிய கந்த ஆனந்ததிந்த

## அனுபல்லவி

சுரநர தரும்ருக ஜலசர மோஹிஸெ
தரளேர மனசூரெயாகி கொளலினிந்த

## சரணம்

தந்தெய கந்தனெந்து கொங்குளொளிட்டு
கந்தன கௌகிட்டு
ஹொந்திசி கல்லதில்லி தானிட்டு
கஸ்தூரிய பட்டு

முந்தாகி மூகின மேலளவட்டு
மனெ பாகில பிட்டு
கந்தர்பன சரதிந்த நொந்து பஹு
கந்திகுந்துதலிந்து வதனெயரு
இந்திரேசனானந்தத கானகெ
சந்த்ர முகிய ரொந்தாகுத பருதிரெ. 1

முரளிய ஸ்வரகெ மோஹிதராகெ
கருகளனு தந்து
கரதிந்த லெத்தி தொட்டி லொளகெ
இரிசுத்த ஹால
பெரசுத்த மஜ்ஜிகெ மொஸரினொளகெ
பரமாத்மன நெனெது
ஹொரடரு பிசிலுசளி மனெயொளகெ
மனெமனெ யொளகெ

தரளர பெதரிசி மார்ஜாலகெ மொலெ
த்வரிததி உணிசுத ஸரிஸரியெனுதலி
பரிபரி ப்ராந்தராகி நோடுத
புரமார்கெ பருவரு நிருகிசுத. 2

மதன சதகோடி தேஜனு பந்த
ஸ்தீரிரெதுரலி நிந்த
அதராம்ருத பானமாடிரெந்த
பாயாரிதிரெந்த
பதியல்லி பந்து குள்ளிரியெந்த
அவரிவரென நோட்த
சதுரேர மோஹகனெ நானெந்த
வாத்யத ரவதிந்த
ஸதயனெதுர ரம்பெ ஊர்வசி மேனகெ
ஒதகி நாட்யகள சதுரதனதலாடெ
மதுசூதன பக்தர காய்வுதகீ
விததொளகாடித ரங்கவிடல தா. 3

# 77. குழலூதி மனம் கவர்ந்தான்

**இராகம்:** மோகனம் **தாளம்:** ஆதிதாளம்

**பல்லவி**

மாடுகளை மேய்க்க வந்தான்
கோபியரின் சிறுவன் மகிழ்வுடன்

**அனுபல்லவி**

தேவர் மனிதர் மரம்விலங்கு நீர்வாழ்வன மோகிக்க
இளைஞரின் மனம்சூறை யாயிற்று குழலினால்.

## சரணம்

தந்தையை மகனென்று தூளியுள் இட்டு
மகனைக் கீழே இட்டுச்
சிலம்பு சதங்கை காதுகளில் இட்டு முத்தின் பொட்டைக்
கழுத்தில் தானே இட்டுக் கத்தூரி திலகத்தை
மேலேயுள்ள மூக்கின் மீதிட்டு மனைவாயிலை விட்டு
மன்மதனின் அம்பால் நொந்துமிக
ஒளிகுன்றித் திங்கள் முகத்தியர்
கண்ணனின் இனிய இசையில்
ஒன்றாகி வந்தனர். 1

குழலின் இசைக்கு மோகித்துக் கன்றுகளைத் தந்துக்
கையால் எடுத்துத் தொட்டிலுள் இட்டு
பாலினைக் கறந்தவாறு தயிர்மோரில் பரமான்மாவை நினைத்துப்
புறப்பட்டனர் வெயில்பனி மழையினுள்ளே
வீடு வீட்டினுள்ளே
சிறுவரை அச்சுறுத்திப் பூனைக்கு முலையை
வேகமாக உண்பித்துச் சரிசரி என்று
முறைமுறையே மனப்பிராந்தியுடன் பார்த்து
வெளிப்புற வழிக்கு வருவர் தேடியவாறு. 2

மன்மதனின் நூறுகோடி தேசுடையான்
வந்தான் மகளிரெதிர் நின்றான்
இதழமிழ்தை உண்பீரென்றான்
தாகம் தணிவீர் என்றான்
பக்கத்தில் வந்தமர்வீர் என்றான்
அவரிவரைப் பார்த்தவாறு
பெண்களை மோகிப்பவன் நான்என்றான்
வாத்தியங்களின் இசையுடன்
அவனெதிர் அரம்பை ஊர்வசி மேனகை
வந்து நாட்டியம் திறமையாக ஆட
மதுசூதனன் அடியாரைக் காப்பதற் காக
விதவிதமாக ஆடினான் அரங்க விட்டலன். 3

78. **இராகம் :** காபி **தாளம்:** ரூபக தாளம்

## பல்லவி

தெரளிநீ மதுரெகெ கோகுலதலி நாவு
இரலாரெ இரலாரேவோ கோபால

## அனுபல்லவி

தரளதனதிநீ ஆடித ஆடகள ஸ்மரிசி
ஸ்மரிசி நாவு மருகுவுதெலொ தேவ.

## சரணம்

வ்ரதஜ ஒளகெ நீனு இத்தத்து கேளி
பரதி பூதனி கஞகி கொட்டரெ
தொடெய ஒளகெ இட்டு ஸ்தனகொடுநிரலவள
ஹாலியந்தெ ஹீரி ஹிப்பெய
மாடிதெயொ தேவ த்ருணத அசுரனகொரள
மிசுகுத்த அவன கெடஹிதி
பரதி பாண்டிய ஒத்து சகடன புடிய
மாடித பரம புருஷனெ. 1

கொக்சுல்ல கம்ஸனு பாளயோசிசி மனதி
கொல்ல பேகெந்தெனுத சூசிசி
பில்லனெ முரிது ஆ நல்லெய கரபிடிது
ஒள்ளெ புரகெ போகி எல்ல கார்யவ நடெசி
மெல்லனெ ஏகாந்த க்ருஹதலி
சொல்ல கேளுத அவன கோபிசி
அல்லியனுஜன கரெது அவன
கொடலல கஞஹித கடின ஹ்ருதயனெ. 2

அல்லி ரதவனெ காணுத எதெ
ஜல்லெனசி நடுகிதெவொ
புல்ல நாபனெ ஜ்ஞான பகுதி
நம்மெல்லரிகெ நீனித்து போகெலொ. 3

ஹெண்டதியர கூடி கதன மாடி
முந்தெ மூவரூ தெரளிதிரி
பந்து ருஷியாச்ரமதி நிந்து க்ராஸவ பேடெ
மந்தகமனெ நோடி செந்தாயி
தெந்து தந்து கலசோதகவ செல்லலு
கந்தருகளு நீவாதிரொ
தந்த கலசின தொன்னெ பாலனு
செந்ததிந்தலி குடித வேதனெ. 4

மந்த கமனேரிந்த நிமகெ மத்தெ
ஒந்துபகாரவ காணெவோ
செந்தாகி மனதி மந்திரதலி இரதெ
கண்டரபிட்டு நிம்ஹிந்தெ திருகிதெவொ
இந்திரெயு காரணகளல்லவொ
நின்கெ நீனெ ஸ்வரமணனு
மங்கலாங்கனெ மாரஜனகனெ
ரங்கவிடலனெ ராஜீவாக்ஷனெ. 5

# 78. எங்களால் இருக்க இயலாது.

**இராகம்:** காபி. **தாளம்:** ரூபக தாளம்

**பல்லவி**

செல்வாய்நீ மதுரைக்குக் கோகுலத்தில் நாங்கள்
இருக்க இயலா திருக்க இயலாது கோபாலா.

## அனுபல்லவி

சிறுபிள்ளைத் தனத்துடன் நீஆடிய ஆட்டங்களை நினைத்து
நினைத்து நாங்கள் மருளாவோம் தேவா.

## சரணம்

கோகுலத்தி னுள்ளே நீஇருப்பதைக் கேட்டு
விரைந்து பூதனையை அனுப்பி வைத்தனர்
தொடையின் உள்ளே வைத்துமுலை கொடுக்கையில் அவளைப்
புலிபோல் கீறிப் பிணமாகச் செய்தாயோ
தேவா புல்லாக வந்த அசுரன்
குரளைநெறித் தவனைக் கிடத்தினாய்
விரைந்து வண்டியை உதைத்துச்
சகடனைப் பொடியாகச் செய்த
மேலான ஆண்மகனே. 1

வஞ்சகன் கஞ்சன் மிகவும் சிந்தித்து மனத்தில்
கொல்ல வேண்டும் என்று நினைத்து
வில்லை முறித்து அந்த நல்லவளின் கைப்பிடித்து
நல்ல ஊர்க்குச் சென்று எல்லாச் செயல்களும்
நடத்தி மெதுவாகத் தனிவீட்டில்
சொல்லைக் கேட்ட வாறவனைக் கோபித்
தங்கே தம்பியை அழைத்தவனைக்
கொல்ல அனுப்பிய கொடிய மனத்தோனே. 2

எல்லாப் பழைய செய்திகளும் அறிவோம் நாங்கள்
இங்கே மறந்தோம் என்று நினைத்தோமோ
வல்லஅக்ரூரன் வந்திங் கேநாம்
இல்லாத வார்த்தை கேட்டு மெதுவாக அழைத்துச் சென்றான்
அங்கே தேரையே பார்த்தவா றிதயம்
சல்லென்று நடுங்கினோமோ
தாமரை உந்தியனே ஞானம் பக்தி
நம்மெல் லோர்க்கும்நீ கொடுத்துச் செல்வாய். 3

மனைவியருடன் சேர்ந்து சிந்தித்து
முன்னால் மூவரும் வந்தனர்
வந்து முனிவர் ஆசிரமத்தில் நின்றனர் பிச்சை வேண்டி
முனிவரின் மனைவி அனுசூயை பார்த்து நன்றாயிற்
றென்று தந்து கலசநீரைக் தெளிக்க
குழந்தைகளாக நீங்கள ஆனீர்கள்
அவள்தந்த தொன்னையிலிருந்த பாலை
அழகாக அங்கே குடித்த தேவனே. 4

பெண்களால் உமக்கு மற்றும்
ஓர்உதவி யையும் காணவில்லை
அழகான வீட்டி னுள்ளே இராமல்
கணவனை விட்டும்பின் திரிந்தோம்
திருமகள் காரணம் அன்றோ ?
உன்னை நீயே மணந்தவன்
மங்கலம் நிறைந்தோய் மன்மதன் தந்தையே
அரங்க விட்டலனே தாமரைக் கண்ணனே ! 5

79. **இராகம்:** தோடி **தாளம்:** ஆதிதாளம்

## பல்லவி

நின்ன பூஜெயொ ராமா.

## அனுபல்லவி

நின்ன பூஜெ ஹொரதில்ல
என்ன வ்யாபார வெல்ல.

## சரணம்

ஸ்நான ஸந்த்யா வந்தன ஹோம மௌன ஜப ஸத்க்ரந்த்யவா
க்யான யஜ்ஞஸாதன ஸம்பாதன அத்யயன

நானா ரஸ நைவேத்ய போஜன தாம்பூல சர்வண
மானினி மொதலாத சந்தன கானத போககளெல்ல. 1

ஸர்வேந்த்ரியகலிஹ சர்வாதி தேவர்களிகெ
ஸர்வசேஷ்டாப்ரதனாத ப்ராணகெ நிர்வாஹகனாகி
ஸர்வ ஜீவர கையிந்த ஸர்வஜ்ஞான கர்மகளனு
ஸர்வதா மாடிசி அவர ஸர்வசுப போக்தனஹெ 2

அங்காங்களல்லி சுரருகங்களல்லி பாக்யலக்ஷ்மி
உங்குஷ்டதி லோகபாதனெ கங்கா தேவியு
ஹிங்கதெ நின்னல்லிரலு துங்ககுண பரிபூர்ண
ரங்கவிடல நெலெயாகி மங்களாங்கனெ மன்னிசுவெயொ. 3

# 79. உனது பூசையோ இராமா?

**இராகம்:** தோடி. **தாளம்:** ஆதிதாளம்

### பல்லவி

உனது பூசையோ இராமா.

### அனுபல்லவி

உனது பூசையன்றி வேறில்லை
எனது வியாபாரம் எல்லாம்.

### சரணம்

நீராடல் சந்தியாவந்தனம் வேள்வி மௌனம் நன்னூல்
விரிவுரை யாகசாதனம் சம்பாதனை ஓதுதல்
நாலா வகையான சுவைநை வேத்தியம்
உண்ணல் தாம்பூலம் தின்பது
பெண்ணின்பம் முதலான போகங்கள் எல்லாம். 1

எல்லா இந்திரியங்களையும் ஆள்பவன்
சிவன்முதலாம் தேவர்களுக்கும்
எல்லாச் சேடைகளுக்கும் காரணனான
வாயுவை நிர்வகிப்பவன்
எல்லா உயிர்களின் கைகளால் எல்லா
ஞானமும் கர்மங்களும்
எப்போதும் செய்வித் தவரின் எல்லா
இன்பங்களும் நுகர்பவனாக 2

உறுப்புக்களில் தேவர்கள் கண்களில்
பாக்கியலக்குமி
கால்கட்டை விரலில் உலகைக் காக்கும்
கங்காதேவி
விடாமல் நின்னிடம் இருக்க மேன்மைக்குணம்
நிறைந்த முழுமையனே
அரங்க விட்டலனே நிலையான மங்கலம்
நிறைந்தவனே ஏற்பாயோ. 3

80. **இராகம்:** குறிஞ்சி. **தாளம்** : ஆதிதாளம்

## பல்லவி

நின்ன மகன லீலெய தாளலாரெவெ நாவு
தரளன துடுகு ஹேளபாரதெ கோபாலக் க்ருஷ்ண புத்தி அம்ம.

## அனுபல்லவி

இது செந்நாயிது திளிதவனல்லவெ
நீகேளெ யசோதெ.

## சரணம்

பாலகனெந்து லாலிசி கரெதரெ
மூலெ மனெயொளகெ பொக்கு

பாலு பெண்ணெ மொஸரெல்லவ மெத்து
கோவல்லி நீரெ கொடக ஒடெதனே
ஆஸல வர்ணனவ திட்ட நித்யா இவன ஹோராட
ஹெப்பாலெயரல்லி நோட பஹன பகெயலி
பிடிதேவெந்தரெ மேலியஜ்ஜலுகள வோடிதா.
அம்ம இது செந்நாயிது 1

மத்தெ பீமினியரெல்லரு கூடி
மடுவினினல்லி ஜலக்ரீடெயாடலு
சித்த சோர சீரெகள னெல்லவ
னெத்தி கொண்டு மரனனேரிதவ்வா
பெத்தலெ பாமெயரெல்ல பேடிதரெ கொடனல்ல
ஈயுக்திகளெ பஹபல்ல
ஹத்திலி பந்து கரவெத்தி முகிதரெ
வஸ்த்ரகளெல்லவ கொடுவெனெத்ந்தனே அம்ம. 2

ஸத்து மாடதெ ஸாருஹொத்தினல்லி நாவு
நித்தெ கண்ணினலி நாவிரலு
முத்து க்ருஷ்ண நம்மனெயவரந்தெ
முததிந்தென்ன கூடிதவ்வா
எத்து நோடிதெவல்ல ஆஹ ஏனே நம்மவரல்ல
புத்தி மோஸ பந்தல்ல
பொத்து ஸல்லிசிதீ ஜார நீனெந்தரெ
பரிஹாஸ்யவ மாடித ரங்கவிடலன அம்ம. 3

# 80. நின்மகன் லீலைகள் பொறுக்க இயலாது

**இராகம்:** குறிஞ்சி. **தாளம்:** ஆதிதாளம்.

### பல்லவி

நின்மகனி லீலைகளைப் பொறுக்க இயலவில்லை எங்களால்
சிறுவனின் குறும்புகளைக் கூறமுடியுமா
கோபால கிருட்டிணன் புத்தி அம்மா.

### அனுபல்லவி

இது நன்றா யிற்றென் றறிந்தவன் அல்லவோ
நீகேட்பாய் அசோதை.

### சரணம்

சிறுவன் என்று விரும்பி அழைத்தால்
மூலை விட்டினுள் புகுந்து
பால் வெண்ணெய் மோரெல்லாம் குடித்துக்
கோலால் நீர்க்குடத்தை உடைத்தான்
நாள்தொறும் இவனுடன் போராட்டம்
பெரிய பெண்களிடம் நோட்டம் பலவகைகளில்
பிடித்தோ மென்றால் அகப்படா தோடினான்
அம்மா இதுநன்றா யிற்று. 1

பெண்கள் எல்லாரும் சேர்ந்து
குளத்தில் நீராடிக் கொண்டிருக்கையில்
மனங்கவர் கள்வன் ஆடைகள் அனைத்தும்
எடுத்துக் கொண்டு மரத்தின் மீதேறினான்
நிர்வாண மகளிர் வேண்டினால் கொடுக்கவில்லை.
இத்தகு உத்தி கள்பல வல்லவன்

அருகில் வந்து கைதூக்கிச் குவித்தால்
ஆடைகள் எல்லாம் கொடுப்பேன் என்றான் அம்மா. 2

ஓசை செய்யாமல் நடுஇரவில் நாங்கள்
தூக்கக் கண்களில் இருக்கையில்
முத்துக் கிருட்டிணன் நம்வீட்டவர்போல
மெதுவாக என்னைக் கூடினான் அம்மா
எழுந்து பார்த்தால் நம்மவர் அல்லன்
அறிவிற்கு மோசம் வந்த தன்றோ.
பொழு தாயிற்று செல்வாய்நீ என்றால்
பரிகாசம் புரிந்தான் அரங்க விட்டலன் அம்மா. 3

81. **உகாபோக**

பவவெம்ப அடவியல்லி தாபத்ரயதி சிலுகி
பயகொள்ளதந்தெ கெல்லுவுதகெ ஸ்ரீஹரிநாம
ஹொரதாகி மத்துண்டெ என்ன மனவ நின்ன
சரணதல்லிட்டு ஸலஹொ நமோ ரங்கவிடல.

# 81. திருவடியில் வைத்துக் காப்பாய்.

## உகாபோக

பிறவியென்னும் காட்டில் மூவாசையில் சிக்கி
அச்சம் கொள்ளாமல் வெல்வதற்குத் திருஅரியின் பெயரை
அன்றிவே றியாதுள தென்மனத்தை நினது
திருவடியில் வைத்துக் காப்பாய் வணக்கம் அரங்க விட்டலனே.

82. **உகாபோக**

முந்தெ கெட்டு பந்தவர
ஹிந்தகெ ஹாகிகொண்ட பளிக
ஒந்து குணதோஷகளனு எணிசுவரெ எலெ தேவா!

அந்தவல்ல நின்ன கனதெகெதந்தெ தாயிகளு தம்ம
கந்தனவகுணகளெணிசுவரெ ?
எந்தெந்திகென்ன உத்தரிஸபேகெலெ தேவ
ஸந்தேஹவ்யாதகெ நமோ ரங்கவிடலய்ய.

# 82. சந்தேகம் எதற்கு?

## உகாபோக

முன்பே கெட்டு வந்தவரின்
பின்னால் வைத்துக் கொண்ட பிறகு
குணம் குற்றங்களை எண்ணுவரோ தேவா
அழகன்றுன் பெருமைக்கே.
தந்தை தாயர் தமது
மகனின் கெட்ட பண்புகளை எண்ணுவரோ ?
என்றென்றும் என்னை வளர்க்க வேண்டும் தேவா
சந்தேகம் எதற்கு வணக்கம் அரங்க விட்டலனே.

83. **உகாபோக**

மாரி கோணனந்தெ கோர பாக்யவ கொட்டு
நரகக்கெ இடுவனோ துர்ஜனருகளனு
ஸார பகுதரிகெ தாரித்ர்யாதிகளன்னு கொட்டு
பாருகாணிசுவனு ரங்கவிடலரேய.

# 83.மாரியின் எருமை

## உகாபோக

மாரியின் எருமையைப்போல் மிகுந்த பேறுகளைக் கொடுத்து
நரகத்தில் இடுவான் தீயவர்களை
நிரம்பிய பக்தர்க்குத் தரித்திரங்களைக் கொடுத்துக்
கரையேற்றுவான் அரங்க விட்டலன்.

84. **இராகம்:** ஸ்ரீராகம் **தாளம்:** ஆதிதாளம்

## பல்லவி

ரங்க கொளலனூதுத பந்த
யசோதெய கந்த.

## அனுபல்லவி

கொளல த்வனிகெ விரஹவு நாரியரிகெ
களவளவாகலு களகளிசுத பந்த.

## சரணம்

ச்ருங்கார கொளலகாயன மாடெ
ஸ்த்ரீயரு நோடெ
ரங்கன பாததலி மன ஹூடெ
ப்ருங்காம்ருத தைல
அங்கனெயரு களகவ மாடெ
விதவிதாபரணங்க
அங்கக்கெ ச்ருங்காரமாடெ
தேவர்களு நோடெ

ஹங்கவிஹங்க புஜங்க நவிலு
ஸாரங்க கிணியு மாதங்க மரியு
குரங்க மத்யெ சரணங்களெடெகெ
வேதங்களெரகெ காமங்களலுகெ
நேத்ரங்களிகதி சித்ரங்களாகெ ஆ
ரங்கனூத்வ ஸாரங்க கேளு ருஷி
புங்கஸஹித தாவுகளு பரெ நர
சிங்கனூதித ஜகங்கள மோஹிசி. 1

பங்கார பட்டலொளகெ அந்து
க்ஷீரவ தந்து

ரங்ககர்பிசுவெவு நாவெந்து
ஹருஷதொளந்து
அங்கனெயரு மைமரெது நிந்து
ஒலியபேகெந்து
மங்களமஹிமனு நீனெந்து
அதிபகுதியொளந்து
துங்க விக்ரமன பதங்களிகெரகலு
ரங்க நெககி கரங்கள் ஹிடியெ
மோஹங்களிந்த விரஹங்கள் ஹெச்சி ரவி
கெங்களுடெய குசங்களு பிட்டா
லிங்கிசுதிரெ ஸ்ரீமங்களாங்கக் கெ புஷ்
பங்கலிந்த வருஷங்களு மேல் சுர
ரங்களு சுரியெ உத்துங்க மஹிம ஹரு
ஷங்கள பீருத அங்கனெயரிகெ,. 2

முதிர மானினியரு பிட்டு
மனதலி கங்கெட்டு
மந்தரோத்தரனல்லெ மனவிட்டு
கரெகரெய பிட்டு
செந்ததி கர்பூர வீள்பயவனிட்டு
ஸடகரவ தொட்டு
ஒந்தாகி சிதருத தோஷத பட்டு
உத்வரெ பருவரு அஷ்டு
அந்ததிந்தலானந்த வேரி
முகுந்தனங்கரி முததிந்தஸ்மரிசி பரு
வந்த நோடி கோவிந்த கொளல பகு
அந்த தொளிடெ ஈஇந்து வதனெயரு
சந்த்ர ரனுதயவாதந்தெ ஆய்துமன
கந்த கஸ்தூரி தந்து ஆக ஹரி
கந்தரதொளகிடெ ரங்கவிடல தய
திந்த நோட்த புரந்த்ரியரன்னு. 3

# 84. குழலூதியவாறு வந்தான்

**இராகம்:** ஸ்ரீராகம் **தாளம் :** ஆதிதாளம்

### பல்லவி

அரங்கன் குழலூதியவாறு வந்தான்
அசோதையின் மகன்

### அனுபல்லவி

குழலின் இசையில் விரகமாயிற்றுப் பெண்களுக்குச்
சிந்தனை உண்டாக ஆர்வமுடன் வந்தான்.

### சரணம்

அழகிய குரலை இசைக்கப்
பெண்கள் பார்த்தே
அரங்கனின் திருவடியில் மனம்சேர்ந்து
பிருங்காமிருத தைலத்தை
மணக்குமாறு பூசினர்
விதவித அணிகலன்களை
அங்கங்களில் அணிந்தழகு செய்யத்
தேவர்கள் கண்டனர்
மயில்பாம்பு புள்ளிமான்கிளி
யானைக்கன்று கலைமான்
திருவடியில் வீழ்ந்தன
காமங்கள் அகன்றன
கண்களுக்குச் சித்திரங்களாயின
அரங்கன் ஊதிய சாரங்கம் கேட்டு
சிறந்த முனிவர்கள் வந்தனர்
நரசிம்மன் ஊதினான்
உலகங்கள் மோகிக்குமாறு. 1

பொன்தட்டில் அன்று
பாலைத் தந்தே
அரங்கனுக் கர்ப்பிப்போம் நாங்கள்
என்று மகிழ்ந்தனர் அன்று
பெண்கள் மெய்ம்மறந்து நின்றனர்
மகிழ வேண்டுமென்று.
மங்கல மகிமன் நீயென்று
மிகுந்த பக்தியுடன் கூறிப்
போர்வீரன் பாதங்களில் விழுந்ததும்
அரங்கன் மேலே எடுத்துக் கைகளைப் பிடிக்க
மோகித்து விரகம் மிகுந்து முலைகளைப் பிடித்
தாலிங்கனம் செய்த மங்கல மூர்த்திக்குப்
பூமழை பொழிந்தனர் மேலிருந்த
தேவர்கள் மிகுந்த பெருமையன்
மகிழ்ச்சி தந்தான் மகளிர்க்கு. 2

வீட்டைப் பெண்கள் விடுத்து
மனத்தில் கண்கெட்டு
மந்தரமலை சுமந்தவன் மீது
மனம்வைத்து
அழைப்பொலி விடுத்துப்பின்
அழகாகக் கர்ப்பூரம் வெற்றிலைஇட்
டாரவாரம்செய்
தொன்றாகிச் சேர்ந்து மகிழ்ச்சி
மிகுந்து வரும்பொழுது
அழகான மகிழ்ச்சி மிகுந்து
முகுந்தனின் பாதங்களை நினைத்தவாறு
வருவதைக் கண்டு கோவிந்தன் குழலை
மிகஅழகாக இசைக்கத் திங்கள் முகத்தியர்
திங்கள் உதய மாவதுபோல் மகிழ்ந்து
சந்தனம் கத்தூரி தந்தரியின்
கழுத்தில் பூச அரங்க விட்டலன்
கருணையுடன் கண்டான் சுமங்கலிப் பெண்டிரை. 3

85. **இராகம்** :சாவேரி **தாளம்** : திரிபுடை தாளம்

## பல்லவி

ரக்ஷமாம் ரங்கேச.

## அனுபல்லவி

ரக்ஷமாம் ரங்கேச ரவிகோடிடஸங்காச
பக்ஷிவாஹனச்ரீச பவ்யகுணகோச
அக்ஷராதி பிபீலிகாந்த ஸம்
ரக்ஷகாமயஹரண ஸர்வ
லக்ஷண பரிபூர்ண பரமேச தக்ஷிணாதீச.

## சரணம்

கமலதர நேத்ர கமலாரி ஸமவக்த்ர
கமலாவிரசித ஸ்தோத்ர கரத்ருத கோத்ர
கமலஜ நுதிபாத்ர கரிராஜயாத்ர
கமலதர கரகமல ஸமபத
கமல ஸந்நிபவினுத கந்தர
கமல ஸந்நிப சுகாத்ர கமலாகளத்ர. 1

அனிமிஷ சுப்ரீதாகிள தோஷ நிர்தூத
ஸனகாதி ச்ருதிகீத அர்ஜுனசூத
தினமணி குலஜாத தேவகீ போத
கனகவஸன கிரீடதர கோ
கனதயித கமலாப்த நயன
வனதவாஹனவைரி குலகாத வனஜபவ தாத. 2

அங்கனாம்பர ஹரணானுபம ஸப்தாவரண
மங்கள கரசரண பக்தஸம் ரக்ஷண
காங்கேய க்ருதஸ்மரண கருணாபரண
ரங்கவிடல புஜங்கசயன து!
ரங்கதர காவேரி தீர ஸ்ரீ
ரங்க நிலய துரங்க ஸஞ்சரண கங்காசரண. 3

# 85. காப்பாய் அரங்கநாதா.

**இராகம்:** சாவேரி **தாளம்:** திரிபுடை தாளம்

## பல்லவி

காப்பாய் அரங்கநாதா.

## அனுபல்லவி

காப்பாய் அரங்கநாதா சூரிய கோடி ஒளியோன்
பறவை வாகனன் பண்புகளின் பெட்டகம்
தேவர்முதல் எறும்புவரை எல்லா உயிர்களையும் காப்பவன்
எல்லா அழகுகளும் முழுமையாகப் பெற்றவன்
மேலானவன் தெற்கின் தலைவன்.

## சரணம்

தாமரையிதழ் கண்ணனே திங்கள் போன்ற முகத்தனே
திருமகளால் துதிக்கப் படுபவனே
கோவர்த்தன மலையை எடுத்தவனே
பிரமனால் துதிக்கப்படுபவனே
யானை அரசனுக் கருளியவனே
தாமரை போன்ற கையில் தாமரையைப் பிடித்தவனே
தாமரை போன்ற கழுத்தனே
தாமரை போன்ற உடலினனே
திருமகளை மனைவியாகப் பெற்றவனே. 1

தேவர்களின் அன்பிற் குரியவனே
எல்லாக் களங்கமும் நீக்குபவனே
சனகாதி முனிவர்கள் துதிப்பவனே
பார்த்தனின் தேரோட்டியே
சூரிய குலத்தில் உதித்தவனே

தேவகியின் மகனே
பொன்னாடை போர்த்தியவனே
கிரீடத்தை அணிந்தவனே
தாமரைக் கண்ணனே
மேகவாகனன் இந்திரனின்
பகைவரை அழிப்பவனே
தாமரையில் உதித்த பிரமனின் தந்தையே. 2

கோபியரின் ஆடைகளை அபகரித்தவனே
ஐந்து பூதங்களில் வெளிப்படுவோனே
மங்கல மானவனே
அடைக்கலம் அடையும் அடியாரைக் காப்பவனே
வீடுமனால் துதித்து நினைக்கப் பட்டவனே
அருளே அணிகலன் ஆனவனே
அரங்க விட்டலனே பாம்பில் படுத்தவனே
அயக்கீரிவனை அழித்தவனே
காவிரிக்கரை திருவரங்கத்தில் இருப்பவனே
குதிரை மீது வருபவனே
கங்கையைத் தோற்றுவித்த பாதனே. 3

86. **இராகம் :** தோடி **தாளம்:** ஆதிதாளம்

## பல்லவி

ராமாவரந்தெ ரக்ஷிஸோ எந்தரெ
ரக்ஷிஸலொல்யா பராகு

## அனுபல்லவி

காமிதபலவீவ கருணாம்புதி எந்து
நா மொரெஹொக்கெனல்லோ ராமராமா ப்ரபுல்ல.

### சரணம்

எடவித்த மாத்ரதி பெண்ணாத கௌதம
மடதியு நின்னவளேனோகடுப்ரீதியிந்த
காயிதி கரிராஜனு நின்ன
ஒடலல்லி ஜனிசிதனேனோ
நடுகுத மகன நாரணனென்னலு
நுடிகேளி பொரெதெல்லொ ராமராமா. 1

ஹந்த்வைரி தெஸெயிந்த பந்த விபீஷணனு
தந்தெய கடெயவனேனோ
கந்து குந்தெணிஸதெகாயிதி கண்டாகர்ணா
எந்தா மாதின பகெயேனோ
பந்து கம்பதி சிசுவ பாதெய பிடிசிதெ
ஆபத்பாந்தவ நீனல்லோ ராமராமா. 2

உல்லாஸதிந்த சபரி உண்டெஞ்ஜலி கொட்டித
வல்லப நீனல்லவேனோ
எல்லிய பல்லித பிடியவலக்கிகெ நீ போகி
வல்யொட்டித்து மரத்யேனோ
எல்லிய மாதிது பேளலஞ்ஜயவெ ரங்க
விடல நீனல்லோ ராமராமா.

## 86. இராமன் அவரன்றோ

**இராகம்:** தோடி. **தாளம்:** ஆதிதாளம்

### பல்லவி

இராமன் அவரன்றோ காப்பாய் என்றால்
காக்காமல் பாரா முகமாய் உள்ளார்

### அனுபல்லவி

வேண்டிய வரம்தரும் கருணைக் கடலென்று
நான்முறையிட்டேன் அன்றோ இராமராமா.

**சரணம்**

அடியிட்டதும் பெண்ணான கௌதமரின்
மனைவி நின்னைச் சார்ந்தவளோ
மிகுந்த பக்தியுடன் காத்த யானையரசன்
நினதுடலில் பிறந்தவனோ
நடுங்கி மகனை நாரணனென் றழைத்ததும்
சொற்கேட்டுக் காத்தனை அன்றோ இராமராமா. 1

முன்பு பகைவன் திசையிருந்து வந்த வீடணன்
தந்தையின் பக்கம் சார்ந்தவனோ
குற்றம் குறையின்றிக் காத்தாய் கண்டாகர்ணனை
எத்தகைய சொல்லிது வகையெதுவோ
வந்தாய் தூணிலிருந்து குழந்தையின் துன்பம் நீக்கினாய்
துன்பம் வருகையில் காப்பவன் நீயன்றோ இராமராமா. 2

உல்லாசத்துடன் சபரி தின்று மிஞ்சியதை
உண்ட வல்லபன் நீயன்றோ
எங்கே யோபிடி அவலுக்காக நீசென்று
வறுமை ஒட்டியதை மறந்தாயோ
எங்குள்ள சொல்லிது கூற அஞ்சுவாய்
அரங்க விட்டலன் நீயன்றே இராமாராமா. 3

87. **இராகம் :** பூர்வி. **தாளம்:** கண்டசாபு தாளம்

**பல்லவி**

ஸ்ரீராம நின்ன பாதவ தோரோ
மோஹன்ன குணதாம நின்ன மோஹத பாதவ.

**சரணம்**

வரகுணஜால சுரகுணலோலா
கருணாலவால தருணீ பரிபாலா. 1

அஜபவபூஜித கஜவரபாவித
சுஜனர ஸேவித த்ரிஜகவந்திதா 2

அங்கஜ ஜனக விஹங்கதுரங்க
துங்க விக்ரம ஶ்ரீரங்கவிடல. 3

# 87. இராமா நின் திருவடிகளைக் காட்டுவாய்.

**இராகம்:** பூர்வி. **தாளம்:** கண்ட சாபு தாளம்

**பல்லவி**

இராமா நின்திரு வடிகளைக் காட்டுவாய்
மோகிக்கும் குணமாலையனே நின்மோகிக்கும் திருவடிகளை

**சரணம்**

வரம்தரும் குணாளனே தேவர் குணத்தில் திளைப்பவனே
கருணையின் உருவனே மங்கையைக் காத்தவனே. 1

அயன் அரனால் வணங்கப் படுபவனே
யானையால் துதிக்கப் படுபவனே
நல்லோரால் வணங்கப் படுபவனே
மூவுலகாலும் வணங்கப் படுபவனே.

மன்மதன் தந்தையே கருடனையே
குதிரையாகக் கொண்டவனே
போரில் வல்லவனே திருவரங்க விட்டலா. 3

88. **இராகம்:** காம்போதி. **தாளம்:** ஆதிதாளம்

### பல்லவி

ஸரசிஜ நாபனே ஸெரகொட்டி பேடுவெ
துரிதகளெல்ல தரிது வரவித்து கருணிஸோ.

### சரணம்

கருணாஸாகர நின்ன சரணவ நம்பிதெ
பரமபாவன நின்ன சரணன பொரெயெந்து. 1

ஈசவினுத நின்ன வாசிய பொகளுவெ
தாஸனெந்தென்னனு காசிமாடதெ காயோ. 2

பாரிபாரிகெ பருவ தாரத்ரய துக்கவ
தூரகைசுவந்த தாரி தோரிஸெந்து. 3

கந்து பிதனெ என்ன அந்தரங்கதி நின்ன
ஸந்தத நெனெவந்தெ சிந்தனெ நிலிஸெந்து. 4

மங்களாத்மகனெ ஸ்ரீரங்கவிடல
புஜங்கசயன நின்ன ஹிங்கதெ பஜிபெனு. 5

# 88. வரம் தந்து அருள்வாய்

**இராகம்:** காம்போதி. **தாளம்:** ஆதிதாளம்

### பல்லவி

தாமரை உந்தியனே தலைதாழ்த்தி வேண்டுவேன்
துன்பம் தகர்த்து வரம்தந் தருள்வாய்.

## சரணம்

கருணைக் கடலேநின் திருவடி நம்பினேன்
மேலாம் தூயோய் நின்னடியனைக் காப்பாயென்று. 1

ஈசன் வணங்குபவனே நின்புகழைப் போற்றுவேன்
அடியானென் றென்னை வஞ்சியாது காப்பாய். 2

திரும்பித் திரும்பிவரும் தரித்திரம் துன்பங்களைத்
தூரத்தே தள்ளும்வழி காட்டுவா யென்று. 3

மன்மதன் தந்தைஎன் அந்தரங்கத் துன்னை
நாடொறும் நினைக்கும் சிந்தை தாவென்று. 4

மங்கலம் நிறைந்தோய் திருவரங்க விட்டலா
பாம்பணையாய் உன்னை விடாமல் துதிப்பேன். 5

89. **இராகம் :** ஆனந்த பைரவி **தாளம் :** ரூபக தாளம்

## பல்லவி

ஸாகி பாரய்ய நீ பாகி நமிசுவெ
யோகிகளரசனே ஸ்ரீநிவாஸ

## அனுபல்லவி

போகி சயனனே நின்ன பாகவதருபந்து
ஜாகு மாடதெ நின்ன பாகிலொளு நிந்திஹரோ.

## சரணம்

இந்திரே ரமண கோவிந்த நீனெ
கதியெந்து பஜிசுதிரலு ஆனந்ததிந்த

தந்தெய பாதெகெ தந்து தோரலு
ஸ்தம்ப தந்தெ தாடனெய மாடலு
பந்தெயத பரிபரிவித பயதிந்த வோடலு
பந்து அசுரன்ன தரிசித அதிக ஸம்பன்ன
ப்ரளயாக்னியந்திரெ நின்னதுதிலலு
ஆரிகொஸெதின்னு அனுதிரலு நின்னய
முந்தெ பஜிசுத கண்டு பரலானந்ததிந்தலி சந்ததி ஸலஹி
நந்ததலி மந்த்ராத்தர என்ன ஸலஹோ. 1

த்ரோதாயுகதி நின்ன மாதொயாஜ்ஞெய
கொண்டு ம்ருக சீதே பேடலுபாண எஸெயலு
அது லக்ஷ்மணாயெந்து கூகலு
மத்தாத போகலு இத்த ராவணனு
கரெதொய்யெ ஸதியள வாதசுத தானெனிஸே
நீமுன்னா அவ போகெ உங்குரக்யாதியிந்தலி
நீடலதகின்ன தனுமனத
லதிபோகதி சிகெய சிரோமணியன்னெ
கொடலனுக்ரஹதலி
சாதியிந்தலி அவகெ விதானபதவிய
பாலிசித ஜகந்நாத
இந்தர்யாதமர வந்தித வீதபய
ஜகந்நாத ஸலஹோ. 2

மங்களாங்கனெ நின்ன சுகவ கொட்டு
அங்கனெயர பாதெ பிடிஸொ இந்து
அங்கனெயரு பந்து பங்கபடிஸலதகெ
போகுதா மாரன்ன பாதெய களெயுதா
பரிபரிய சுககள ஸங்கடில்லாத நீடியொ
மல்ல மர்தனனே எனுதிரெ
பேகதிந்தலி ஓடிபோதெல்லொ பக்தரனு
ஸலஹவனெம்போ பிருது நினகெ உண்டல்லா
அனுதிரலு நின்னய என்ன மன உத்தங்கசுத
ஸத்ஸங்கவீவுது விஹிததேவனே
துரங்கநாதனே ரங்கவிட்லனெ தேவ
தேவர தேவ ஸலஹோ. 3

# 89. காத்து வருவாய்

**இராகம்:** ஆனந்த பைரவி. **தாளம்:** ரூபக தாளம்

## பல்லவி

காத்து வருவாய் நீ குனிந்து வணங்குவேன்
யோகிகளின் அரசனே சீனிவாசனே.

## அனுபல்லவி

பாம்பில் படுத்தவனே நின்னடியார் வந்து
சும்மா இராமல் நின்வாயிலில் நின்றுளர்

## சரணம்

இந்திரையின் கணவன் கோவிந்தா நீயே
கதியென்று துதிக்கையில் மகிழ்ச்சியுடன்
தந்தை துன்பம் செய்து தூணை உதைக்க
வந்தாய் பயந்தோட அசுரனை ஆரவாரத்துடன் கிடத்திச்
சந்தத்துடன் கிழித்தசுரனின் குடலை
அன்று மாலையாக அணிந்தாய் மிகுந்த செல்வனே
ஊழித்தீ போன்ற உன்னைத் துதிக்க
யாருக்கிசைவாய் என்றுன்னை
முன்னால் துதிப்பதைக் கண்டு மகிழ்வுடன் வந்து காத்தாய்
மந்தரமலை சுமந்தவனே என்னைக் காப்பாய். 1

திரோதா உகத்தில் நின்தாயின் ஆணை கொண்டு
ஆசையுடன் காட்டிற்குச் செல்ல
ஆசையுடன் சீதை பொன்மானை வேண்ட
அம்பைவிட்டதும் இலக்குமணா என்று கூவ
அவன்அப்பால் சென்றதும் இப்பால்
இராவணன் மனைவியைக் கவர்ந்து செல்ல

வாயுகுமாரன் முன்னே சென்று
கணையாழியைக் கொடுக்க மனமகிழ்ந்து
சூளாமணியைச் சீதை அருளுடன் கொடுக்க
மிகுந்த மகிழ்வுடன் அவனுக்குப் பிரமபதவி
அருளிய உலகத்தலைவ
இந்திரன் முதலான தேவர்கள்
வணங்குபவனே அச்சமின்றிக் காப்பாய். 2

மங்கல உருவனே நின்சுகத்தைத் தந்து
பெண்களின் வேதனை நீக்குவாய் இன்று
பெண்கள் வந்து வேண்ட சென்று
மன்மதனின் தொல்லை களைந்து
முறைமுறை இன்பத்தைக் குறைவின்றிக்
கொடுத்தவனே மல்லரை வென்றவனே எனத்துதிக்க
வேகமாக ஓடினாய் அன்றோ அடியாரைக்
காப்போன் என்னும் விருதுனக் குண்டன்றோ.
என்றென் மனம்நினைக்க நல்லோர்
இணக்கம் தந்த தேவனே
குதிரையின் தலைவ அரங்க விட்டலனே
தேவ தேவர்களின் தலைவனே காப்பாய். 3

## 90. உகாபோக

ஸாலிக்ராம வ்ருந்தாவன தல்லி இப்பந்தெ
என்ன மனவன பிடிதிருஹ ஹரி
ஜன்னர ஜன்ன நரஹரி கோவிந்த
என்ன மனவன பிடதிஹ புண்டரீக
மன பிரியானெயய்ய
பண்ட ரங்கி புரீபதி சிரிரங்க விடல.

# 90. மனத்தைப் பிரியான்

### உகாபோக

சாலிக் கிராமம் விருந்தா வனத்தில் இருப்பதைப்போன்
றென்மனத்தைப் பிரியாதிரு அரியே.
வேள்வி விருப்பனே நரஅரி கோவிந்தா
என்மனத்தைப் பிரியாதிரு புண்டரீகா
மனத்தைப் பிரியானே ஐயன்
பண்டரீ புரத்தின் தலைவ செல்வ அரங்க விட்டலனே.

91. **உகாபோக**

ஹரிபகுதனாதவ அரிது பாபவ
மாடுவுதில்ல
அரியதெ மாடிதரெ ஹரியு எணிசுவுதில்ல
சரணு பந்தவன ரவியதனயன நோடு
மரெயதெ பஜிஸொ ரங்கவிடல ரேயன.

# 91. அரியின் அடியான் பாவம் புரியான்

அரியின் அடியான் அறிந்து பாவம் புரியான்
அறியாமல் செய்தால் அரியதனைக் கருதான்
அடைக்கலம் அடைந்த சூரியன்மகன் சுக்ரீவனைப் பார்ப்பாய்
மறவாமல் போற்றுவாய் அரங்க விட்டல ராயனை.

92. **உகாபோக.**

அனந்த காலதல்லி யாவ புண்யதல்லி
என்னமன நின்னல்லி எரகிஸோ
என்ன மனவனு நின்ன சரணதொளொம்மெ
இட்டு ஸலஹொ ரங்கவிடல.

# 92. என் மனத்தைஉன் திருவடியில் வைப்பாய்

**உகாபோக**

நீண்ட காலமாகச் செய்த எந்தளந்த நல்வினையால்
என்மனம் உன்னிடம் ஈடுபட்டதோ ?
என்மனத்தை நின்திருவடியில் ஒருமுறை
வைத்துக் காப்பாய் அரங்கவிட்டலா

93. **உகாபோக**

என்ன மன விஷயங்களலி முணுகிதொ
என்ன தனுவு வ்ருத்தாப்ய ஐதிதொ
அந்தகர கரெ பாஹொ ஹொத்தாயிதொ
கால விளம்பன வினிதில்லவய்ய
வ்யாளெ அரிது பின்னஹ மாடிதெ
ஹீகெ தரளர பிடுவ தாயிகளுண்டெ— நீ
கருணாநிதி யெம்ப பிருதுஸல்லிசு தேவ
கருணாகர சிரிரங்கவிடலரேய — நீ
கருணாநிதியெம்ப பிருதுஸல்லிசு தேவ.

# 93. விருதைக் காப்பாய்

**உகாபோக**

என்மனம் தீயசெயல்களில் மூழ்கியதோ
என்னுடல் முதுமை அடைந்ததோ
எமன்கூப்பிடும் நேரம் வந்ததோ
காலத்தை வீணாக்குதல் இனியில்லை ஐயா
நேரம் அறிந்து விண்ணப்பம் செய்தேன்
மக்களை விடுக்கும் தாயர் உளரோ அவ்வாறேநீ
கருணாநிதி என்னும் விருதைக் காப்பாய் தேவா

கருணை நிறைந்தவனே செல்வனாம் அரங்க விட்டலனே நீ
கருணாநிதி என்னும் விருதைக் காப்பாய் தேவா.

94. **உகாபோக**

பாலிஸய்ய ஸ்வாமி க்ருஷ்ண பாலிஸய்ய என்ன நீனு
பாலிஸய்ய பாக்யவித்து பக்தவத்ஸல
நித்யபூர்ண மங்களவித்து நித்யதி கல்யாணவித்து
நித்ய ஸலஹொவ்யாஸமுனி வந்த்ய கோபிநாதனெ
துருபின ம்யாலெ துருபிதமொல்லெ மல்லிகெகுசுமகள ரங்கா
கொரளல்லி கண்டீஸர வனமாலெ
வரகல்ப வேணு பெரளல்லி மீடுத
மரிதும்பி ஜீங்கார ரங்கா
ஸரிகமபதிநிஸ ஸநிதபமகரிஸ
அதரதலூதுதிரெ ரங்கா
சிரியரசனு சிரிபதி ரங்கவிடல
ஸரஸதி வேணுநாத மாடித.

# 94. கருணை செய்வாய் வேணுகோபாலா

**உகாபோக**

கருணை செய்ஐயனாம் கண்ணா
கருணை செய்எனக்குநீ
கருணை செய்நற்பேறு தந்தே
அடியாரை விரும்புபவனே
நிறைந்த மங்கலம் தந்து நாள்தொறும்
நன்மை தந்து
நாள்தோறும் காப்பாய் வியாச முனிவரால்
வணங்கப் படுபவனே கோபி நாதனே
முடியின் மேலே முடிந்த முல்லை மல்லிகை
மணம்மிகு பூக்கள் அரங்கா
கழுத்தில் கண்டசரம் வனமாலை வரம்தரு
கல்பதரு எனப்படுவாய் அரங்கா
சரிகமபதநிச சநிதபமகரிச அதரத்தால்
ஊதியவாறிருப்பாய் அரங்கா
செல்வமிகு அரசனே திருமகள் கணவனே
அரங்கவிட்டலன் இனிமையாகக் குழலிசையைச் செய்தான்.

95. **இராகம்:** நாட்டை. **தாளம்:** கண்டசாபு தாளம்

## பல்லவி

ஸ்ரீரங்கவிடலன ஸ்ரீமகுடகெ சரணு

## அனுபல்லவி

சிரதல்லொப்புவ நீலகுந்தளகெ சரணு
சிரிஸஹோதர நர்ததவளிகெ சரணு.

## சரணம்

ஸொம்பு நோடத செலுவ
ஸோகெ கண்ணிகெ சரணு
ஸம்பிகெய குசுமஸமநாசிககெ சரணு
கும்புரத்னத கர்ணகுண்டலகளிகெ சரணு
இம்புதர்பணநிப கபோலகளிகெ சரணு. 1

குந்தகுட்மல போல்வ தந்த பங்க்திகெ சரணு
அந்தவாகிருவ பிம்போஷ்டகெ சரணு
சந்த்ரிகாநிப முத்து மந்தஹாஸகெ சரணு
நந்தகோபன முத்து கந்தனிகெ சரணு. 2

அப்பநாபன திவ்யகம்பு கண்டகெ சரணு
அப்ஜமுகியிருவ வக்ஷஸ்தளகெ சரணு
குப்ஜெயனு டொங்க தித்தி புஜகளிகெ சரணு
அப்ஜஜாஸனன பெத்த நாபிகெ சரணு. 3

ரத்ன கண்டெகளிருவ நின்ன கடிகெ சரணு.
பொன்ன கதளீ போல்வ தொடெகளிகெ சரணு
புன்னாகரத்த த்வய நிதம்பகெ சரணு
சென்னாகி குணிவ ஸம ஜானுவிகெ சரணு. 4

மங்கள வைபோகங்கள அங்கரி த்வயகெ சரணு
துங்க குசகள பிடித கரகளிகெ சரண
பொங்கொளலனூதுவா அங்குலிகளிகெ சரணு
ரங்கவிடலன ஸர்வாங்ககெ சரணு. 5

# 95. அரங்க விட்டலனின் எல்லா உறுப்புகளுக்கும் சரணம்

**இராகம்:** நாட்டை **தாளம்:** கண்டசாபு தாளம்

### பல்லவி

திருவரங்க விட்டலனின் அழகிய
கிரீடங்களுக்குச் சரணம்

### அனுபல்லவி

தலைமீதே இருக்கும் கருங்கூந்தலுக்குச் சரணம்
செல்வத்துடன் பிறந்த திருமகளுக்குச் சரணம்

### சரணம்

குதூகலமாகப் பார்க்கும் அழகிய மயிற்கண்
போன்ற கண்களுக்குச் சரணம்
சம்பங்கியின் வாசனை நுகரும்
மூக்கிற்குச் சரணம்
காதிலணிந்த இரத்தினம் பதித்த
குண்டலங்களுக்குச் சரணம்
கண்ணாடி போன்ற கன்னங்களுக்குச் சரணம். 1

மல்லிகை மொக்கு போன்ற
பல்வரிசைக்குச் சரணம்

அழகாக இருக்கும் ஒளிமயமான
அதரங்களுக்குச் சரணம்
வெண்திங்கள் போன்ற முத்துப்
புன்னகைக்குச் சரணம்
நந்தகோபனின் முத்து மகனுக்குச் சரணம் 2

பத்மநாபனின் திவ்விய சங்கு
கழுத்துக்குச் சரணம்
தாமரை முகத்தாள் தங்கியிருக்கும்
மார்பிற்குச் சரணம்
குப்பேயின் வளைவை நிமிர்த்திய
புயங்களுக்குச் சரணம்
பிரம தேவனைப் பெற்ற
நாபிக்குச் சரணம் 3

இரத்தின மணிகள் இரக்கும்
இடைக்குச் சரணம்
பொன்வாழை போன்ற தொடைகளுக்குச் சரணம்
யானை துதிக்கையை வென்ற இரண்டு
நிதம்பங்களுக்குச் சரணம்
நன்றாகக் குதித்தாடும்
முழங்கால்களுக்குச் சரணம். 4

மங்கல வைபோகங் களான
திருவடிகளுக்குச் சரணம்
பெரிய முலைகளைப் பிடித்த
கைகளுக்குச் சரணம்
பூங்குழலை ஊதும் விரல்களுக்குச் சரணம்
அரங்க விட்டலனின் எல்லா
உறுப்புகளுக்கும் சரணம். 5

# சிரிபாதராயரின் வரலாறு

சிரிபாதராயர் பெயர்க் கேற்றவாறு சிரிபாதராயராகவே வாழ்ந்தவர். இவரை நினைத்த மாத்திரத்திலேயே உரிய காலத்தில் இனிய உணர்வு கிடைக்கும் என்னும் நம்பிக்கை மக்களிடையே நிலவுகின்றது., அரிதாச இலக்கியத்தின் எழுகையைப் பற்றி ஆராய்ந் தால் இவரது பெயரையே முதலில் நினைக்க வேண்டும். இவரது புலமையின் ஆழத்தை அறிய வேண்டின் இவர் எழுதிய வாக்வச்ர என்னும் வாதநூலினைப்பயில வேண்டும்.

இந்தப் பெரியாரின் தந்தை பெயர் சேசகிரி ஆசார்யா. தாயின் பெயர் கிரியம்மா. கருநாடகத்தின் சன்ன பட்டணா தாலூக்கில் உள்ள அப்பூர்க்கு அருகில் இருக்கும் தோட்டத்தில் வாழ்ந்து வந்தனர். தென்னை, வாழை போன்ற மரங்களையும் சிறு பயிர்களையும் வளர்த்து வந்தனர். வேளாண்மைக்குத் தேவையான எருதுக்களையும், பசுக் களையும் பெற்றிருந்தனர். தம்முடைய ஏழ்மை வாழ்க்கையிலேயே நிம்மதியாகக் காலம் கழித்தனர். சேசகிரி ஆசார்யா அக்காலத்திற்கு ஏற்ற வகையில் சாத்திரங்களைக் கற்ற பண்டிதராக விளங்கவில்லை. இத்தகைய ஏழைக் குடும்பத்தில் பிறந்து இலக்குமி நாராயணன் என்னும் பெயரைப் பெற்றிருந்த சிறுவன், உலகப் புகழ் பெற்ற சிரிபாதராயர் ஆனான்.

இச்சிறுவன் தன் தந்தையிடமே சிறிதளவு கற்றிருந்தான். மாடு கன்றுகளை மேய்த்துக் கொண்டு மாலையில் தோட்டத்திற்குத் திரும்பி வருவான். வேளாண் குலச்சிறவர்களே இவனது நண்பர்கள். பிராமண குலச் சிறுவனாகவும், பார்ப்பதற்குக் கம்பீரமாகவும் இருந்த இவனே சிறுவர் கூட்டத்தின் தலைவனாக விளங்கினான்.

ஒருநாள் மாலைப்பொழுதில் சீரங்கப் பட்டினத்திலிருந்து புறப்பட்டுப் பல இடங்களில் உலாவந்து கொண்டிருந்த சுவர்ணவர்ண தீர்த்தரின் பல்லக்கு அச்சிறுவர்கள் மாடுமேய்க்கும் வழியில் வந்து கொண்டிருந்தது. பல்லக்கில் சுவாமிகள் தேவர் இருக்கும் பெட்டியையும், மந்திராக்கதை தட்டையும் வைத்துக் கொண்டிருந்தார். சூரியன் மறையும் நேரம் நெருங்கியும் இன்னும் அப்பூரை அடையவில்லையே

என்று கவலைப்பட்டார். அங்கும் இங்கும் பார்த்தவாறு வந்த அவர் மாடுமேய்க்கும் சிறுவர் கூட்டத்தைக் கண்டார். பல்லக்கை நிறுத்தச் செய்து விரல் அசைவால் சிறுவர்களை அருகில் அழைத்தார். இடைக்குலச் சிறுவர்கள் அவர் தங்களை என்ன செய்வாரோ என்னும் அச்சத்தால் ஓடத் தொடங்கினர். இலக்குமி நாராயணன் அஞ்சாமல் பல்லக்கின் அருகில் வந்தான். உள்ளே அமர்ந்தவர் சுவாமிகள் என்று அறிந்ததும் கீழே விழுந்து வணங்கினான். தன்னை அழைத்த காரணம் யாதென வினவினான்.

**சுவாமிகள்:** அப்பா உன் பெயர் என்ன ?

**இலக்குமி நாராயணன்:** என் பெயர் இலக்குமி நாராயணன்

**சுவாமிகள்:** இங்கிருந்து அப்பூரு எவ்வளவு தொலைவு உள்ளது ?

**இலக்குமி நாராயணன்:** இவ்வளவே, இப்போது என்னைப் பாருங்கள், மாடு கன்றுகளைப் பாருங்கள், சூரியனைப் பாருங்கள், எவ்வளவு தொலைவு என்பதும் தெரியும்.

சிறுவனின் பதிலைக் கேட்ட சுவாமிகள் மிகவும் மகிழ்ந்தார்.

**சுவாமிகள்:** வா!இங்கே வா! உன் வீடு எங்கே உள்ளது என்று கூறு.

**இலக்குமி நாராயணன்:** அந்தத் தோட்டமே எங்கள்வீடு.

**சுவாமிகள்:** இச்சிறு குன்று என்னவோ ?

**இலக்குமி நாராயணன்:** இதே புருசோத்தம சுவாமிகள் இருக்கும் குன்று.

**சுவாமிகள்:** நீ அங்கே வருவாயா ?

**இலக்குமி நாராயணன்:** அந்தப் புலி இருக்கும் குன்றுக்கு ஏன் வர வேண்டும் ?

**சுவாமிகள்:** புலி இருக்கும் குன்றில் சுவாமிகள் எப்படி இருக்கின்றாரோ ?

**இலக்குமி நாராயணன்:** அவர் சுவாமிகள் அதனால்தான் அங்கே இருக்கின்றார்.

**சுவாமிகள்:** சுவாமிகளாக இருப்பினும் தனியாக இருப்பது எப்படியோ ?

**இலக்குமி நாராயணன்:** அவர்க்குக் கடவுள் காட்சி தந்துள்ளார்.

**சுவாமிகள்:** அவர்க்குக் கடவுள் காட்சி தந்தார் என்று உனக்கு யார் கூறினார் ?

**இலக்குமி நாராயணன்:** என் தந்தை

**சுவாமிகள்:** நீ சுவாமிகளைப் பார்த்திருக்கின்றாயா ?

**இலக்குமி நாராயணன்:** பார்க்காமல் இருப்பேனா ? அப்பூருக்கு வருகின்றார். நம் பெரியப்பாவின் வீட்டில் உட்கார்வார். குளத்தில் நீராடுவார். பூசை செய்வார். தீர்த்தம் கொடுப்பார். எனக்கு அனல் தெரிக்கும் காய்ச்சல் வந்தது. என் தந்தை அவரை எனக்குத் தீர்த்தம் கொடுக்கச் செய்தார். என் நோய் நீங்கியது.

சிறுவனின் பேச்சு சுவாமிகளுக்கு மிகவும் இனிமை தந்தது. புருசோத்தம தீர்த்தரைக் காணவே அவரும் வந்து கொண்டிருந்தார். சிறுவனைப் பிரிவதற்குச் சுவாமிகளுக்கு மனம் வரவில்லை.

**சுவாமிகள்:** இலக்குமி நாராயணா ! பல்லக்கில் அமர்ந்து கொள். அப்பூருக்குச் செல்வோம்.

**இலக்குமி நாராயணன்:** பல்லக்கில் அமர நான் சுவாமிகளா ? வீட்டிற்குச் செல்ல வேண்டும் அப்பா கோபிப்பார். மாடுகளுக்கு அருகில் யாரும் இல்லை.

**சுவாமிகள்:** கவலைப்படாதே. உன் தந்தையிடம் நான் கூறுவேன். பல்லக்கினுள் வா.

**இலக்குமி நாராயணன்:** நான் அதற்குள் அமர மாட்டேன்

**சுவாமிகள்:** நீயும் விரும்பினால் சுவாமிகள் ஆவாய். வா! செல்வோம்.

**இலக்குமி நாராயணன்:** இவ்வாறு கூறிச் சுவாமி ஒருவர் எங்கள் அண்ணனைச் சுவாமி ஆக்கி விட்டார். சுவாமிகள் ஆயின் திருமணம் செய்து கொள்வது இல்லையே.

**சுவாமிகள்:** உங்கள் அண்ணா சுவாமி ஆனானா?

**இலக்குமி நாராயணன்:** அண்ணா என்றால் பெரியம்மாவின் மகன். இப்போது அந்தச் சுவாமிகளிடம் மந்திரம் கற்கின்றான்.

**சுவாமிகள்:** அப்படியாயின் நீ சுவாமி ஆவது இல்லையா?

**இலக்குமி நாராயணன்:** எனக்குத் தெரியாது. நான் சுவாமியானால் மாடுகன்றுகளின் கதி என்னவாகும்? தோட்டத்தைச் காவல் புரிபவர் யார்? நாங்கள் ஏழைகள். எனக்குப் பூணூல் அணிவிக்கக்கூட என் தந்தையிடம் பணம் இல்லை. என் தாய் எனக்குப் பூணூல் அணிவிக்க வேண்டி நாள்தோறும் என் தந்தையுடன் சண்டை செய்கின்றாள். என் தந்தை பணம் இல்லை என்று கூறுகின்றார்.

சுவாமிகள் சிரித்தாவாறு பல்லக்கை முன்னே செல்ல ஆணை யிட்டார். சிறுவனை நோக்கி,“ நீ வீட்டிற்குச் செல்.” என்று கூறி அவன் தலைமீது கைவைத்து அட்டசதை இட்டு ஆசி வழங்கினார். சிறுவன் சிரித்தவாறு மாடுகன்றுகளை ஓட்டிக் கொண்டு தோட்டத்திற்குத் திரும்பினான். ஆட்கள் பல்லக்கைச் சுமந்து தொடர்ந்து சென்றனர்.

புருசோத்தம தீர்த்தரின் மடத்தில் சுவர்ணவர்ணதீர்த்தர் தங்கினார். நல்ல சுவாமிகள் இருவர் சேர்ந்திருந்தது கங்கையும் யமுனையும் சேர்ந்தது போல் இருந்தது. இருவரும் ஆலிங்கனம் செய்து கொண்டது வசிட்டரும் வாம தேவரும் ஆலிங்கனம் செய்து கொண்டதைப் போல் இருந்தது. அரியும் அரனும் சேர்ந்ததைப் போல் இருந்தது. சுவர்ண வர்ண தீர்த்தர் பிரகமண்ய தீர்த்தர் என்னும் பெயரில் பொலிவுடன் விளங்கிய இளந்துறவியைக் கண்டு பெருமகிழ்வு கொண்டு தமக்கும் இத்தகைய ஒருவன் சீடனாக வேண்டும் என்று

கூறினார். அரியின் அருளால் இங்கேயே கிடைப்பான் என்று புருசோத்தம தீர்த்தர் பதில் கூறினார்.

இலக்குமி நாராயணன் தோட்டத்திற்கு வந்து மாடுகளைக் கொட்டகையில் கட்டி, முதுகில் தட்டிக் கொடுத்த பிறகு தன் குடிசைக்குப் பக்கத்தில் வந்தான்.மகன் இன்னும் வரவில்லையே என்னும் கவலை யாயிருந்த கிரியம்மா அவனைப் பார்த்து, “ இன்று ஏன் தாமதித்து வந்தாய் ? வேகமாக வீட்டிற்கு வர இயலவில்லையா ? பசிக்க வில்லையா ?” என்று கேட்டாள்.

**இலக்குமி நாராயணன்:** நான் முன்பே புறப்பட்டு வந்து கொண்டிருந்தேன். வழியில் சுவாமிகள் ஒருவர் என்னைப் பார்த்தார். என்னுடன் உரையாடினார். அதனால் வரத் தாமதம் ஆயிற்று.

**கிரியம்மா:** யார் அந்தச் சுவாமிகள். அண்ணனின் சுவாமி களா ?

**இலக்குமி நாராயணன்:** இல்லை அம்மா. இவர் அவரைவிடப் பொலிவுடன் உள்ளார்.பல்லக்கில் அமர்ந்து சென்று கொண்டிருந்தார். என்னைக் கூவி அழைத்தார். அருகில் சென்றதும் அப்பூரு எவ்வளவு தொலைவு என்று கேட்டார். நான் அவர்க்குச் சரியான பதில் கூறினேன். இவ்வளவு பெரிய சுவாமிகளுக்கு அதுதான் அப்பூரு என்று தெரியவில்லையா ?

**கிரியம்மா:** (உடல் நடுங்கி) சுவாமிகளைப் பற்றி நீ என்ன சொன்னாய். அவர் கோபத்தால் நம் கதி என்னாகுமோ ? நீ இன்னும் சிறுவன். அத்தகைய பெரியவர்களைப் பற்றி அதிகம் பேசக்கூடாது.

**இலக்குமி நாராயணன்:** நான் அவரை எதுவும் வையவில்லை. நான் கூறியது யாது என்றால்,“ என்னைப் பாருங்கள்;மாடுகளைப் பாருங்கள்; சூரியனைப் பாருங்கள்” என்பதே.

**கிரியம்மா:** குழந்தை ஏன்ன வார்த்தை கூறிவிட்டாய்.

**இலக்குமி நாராயணன்:** கூறியதில் ஏன்ன தவறு உள்ளது அம்மா ?

**கிரியம்மா:** சுவாமிகள் கோபம் கொள்ள வில்லையா ?

**இலக்குமி நாராயணன்:** கோபிக்க வில்லை. பல்லக்கில் வந்து உட்கார் என்று அழைத்தார். சுவாமிகளின் பல்லக்கில் அமரக்கூடாது என்பதால் ஏறவில்லை.

**கிரியம்மா:** சுவாமிகள் மேலும் என்ன கூறினார் ?

**இலக்குமி நாராயணன்:** நீயும் சுவாமிகள் ஆவாய் என்று கூறினார். எங்கள் அண்ணா சுவாமிகள் ஆகியிருப்பதே போதும் என்றேன்.

**கிரியம்மா:** கண்ணில் காணும் சிறுவர்களைச் சுவாமிகள் ஆக்க இவரும் வந்திருக்கின்றாரா ? இன்னும் யார் பிள்ளைகள் மீது கண் வைத்து இருக்கின்றாரோ ? என்ன வேண்டுமானாலும் ஆகட்டும்., நீ மாடு மேய்க்காவிடினும் தவறில்லை. குன்றின் பக்கம் போகாமல் இருப்பாய்.

**இலக்குமி நாராயணன்:** போனால் என்ன ஆகும் அம்மா ?

**கிரியம்மா:** அக்காவிற்கும் ஒரே பிள்ளை; எனக்கும் ஒரே பிள்ளை. அவன் குன்றின் பக்கம் சென்று சென்று சுவாமிகள் ஆனான். நீயும் சென்றால் சுவாமிகள் ஆக்குவார். பிறகு வீடே பாழாகும் ( என்று கூறிக் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள்.)

**இலக்குமி நாராயணன்:** அம்மா அழாதே. நீ அழுதால் நானும் அழுவேன்.. ( அழத் தொடங்கினான்)

தோட்டத்தில் வேலை செய்து கொண்டிருந்த சேசகிரியப்பா இருட்டிய காரணத்தால் வீட்டிற்கு வந்தான். தாயும் மகனும் அழுவதைப் பார்த்தான். “சரி சரி, பூணூலைப் பற்றிய பேச்சைத் தொடங்கி மகனையும் அழச் செய்தாயா ?'' என்று கேட்டார். என் கையில் பணம் இருப்பின் அல்லது கடனாவது கிடைப்பின் பூணூல் அணிவிக்காமல் இருப்பேனா ? இது பற்றிச் சுவாமிகளைச் கேட்கலாமா ? .”

**கிரியம்மா:** சுவாமிகளிடம் செல்லாதீர்கள். நான்பூணூலைப் பற்றிப் பேசவில்லை. நான் அழுத காரணம் வேறொன்றுக்காக. பிள்ளையின் அறிவு நிறைந்த பேச்சைக் கேட்டு அழுகை வந்தது. நம்மைப் போன்ற பாவிகளின் வயிற்றில் பிறந்தான் அல்லவா என்று அழுகை வந்தது.

**சேசகிரியப்பா** : குழந்தாய்! உன் தலைமீது சிவப்பு சிவப்பாகத் தெரிகின்றதே.

**இலக்குமி நாராயணன்:** அப்பா அது சுவாமிகள் போட்ட மந்திராட்சதை.

**சேசகிரியப்பா** : இங்கு வந்திருந்த சுவாமிகள் யார்? குன்றில் இருக்கும் சுவாமிகளா இங்கு வந்தவர்?

**இலக்குமி நாராயணன்:** இவர் வேறொருவர் அப்பா. அவரை விடத் தோற்றப் பொலிவுடன் விளங்குகிறார். பல்லக்கில் அமர்ந்து அப்பூருக்குச் சென்று கொண்டிருந்தார். என்னை வழி கேட்டார். நான் சரியான பதில்கூறினேன். என் தலைமீது கைவைத்து ஆசிர்வதித்து மந்திராட்சதை இட்டார்.

**சேசகிரியப்பா** : சுவாமிகள் உன்னைத் தொட்டாரா?

**இலக்குமி நாராயணன்:** தொட்டதுடன் என்னையும் பல்லக்கில் அமருமாறு அழைத்தார்.

சேசகிரியப்பாவிற்குச் சுவர்ணவர்ண தீர்த்தர் சீரங்கப் பட்டினத்திற்கு வந்திருப்பதும், அவர் அப்பூருக்கு வருவார் என்ற செய்தியும் தெரிந்திருந்தன. எனவே அவரே தன் மகனை ஆசீர்வதித் திருக்க வேண்டும் என்று ஊகித்தார். பிறகு மகனிடமிருந்து நடந்த செய்திகளைக் கேட்டறிந்தார்.

மறுநாள் காலை சுவாமிகள் இருவரும் சேசகிரியப்பாவையும், கிரியம்மாவையும், இலக்குமி நாராயணனையும் அழைத்து வருமாறு தூதுவர்களை அனுப்பினர். இச்செய்தி கேட்ட கிரியம்மாவின் இதயம் நடுங்கியது. குருவின் ஆணையை மறுக்கும் துணிவு இன்றி மகனை

அழைத்துக் கொண்டு மடத்திற்கு வந்தனர். சுவர்ணவர்ண தீர்த்தர் இலக்குமிநாராயனைக் கண்டதும் "இவனே நமக்கு வழிகாட்டி" என்று கூறினார். அவனை அழைத்து அருகில் அமர்த்திக் கொண்டார். கிரியம்மா மனம் கல்லாகிக் கல்லைப் போலவே நின்றாள்.

சுவர்ணவர்ண தீர்த்தர் சேசகிரியப்பாவைப் பார்த்து, "பாலகனை மாடு மேய்க்கச் செய்வாயா? அல்லது கல்வி கற்க ஏற்பாடு செய்வாயா?" என்று கேட்டார்.

**சேசகிரியப்பா** : ஏழு வயதாகும் மகனுக்கு உபநயனம் செய்யும் கதி இல்லாமல் இருக்கின்றேன். கல்வி பற்றிப் பேச என்னிடம் என்ன உரிமை உள்ளது?

**சுவாமிகள்:** கவலைப்படாதே. மகனின் உபநயனமும் ஆகும். கல்வி பயிலவும் ஏற்பாடு ஆகும்.

**சேசகிரியப்பா** : அப்படியானால் எனக்கு எந்தக் கவலையும் இல்லை.

**சுவாமிகள்:** மகனை எங்களிடம் ஒப்படை. உங்களால் மகனைப் பிரிய இயலாவிடில் நீங்களும் மடத்திலேயே தங்குங்கள். பிறகு உங்களிடம் ஏழ்மை இருக்காது.

**சேசகிரியப்பா** : தங்கள் திருவடியின் ஆணை வந்த பிறகு, பதில் பேசும் ஆற்றல் இல்லை. எல்லாம் குருவின் ஆணை, குருவின் சித்தம்.

**சுவாமிகள்:** எல்லாம் அரியின் சித்தம் என்று கூறு.

**சேசகிரியப்பா** : எல்லாம் அரியின் சித்தம்.

இலக்குமி நாராயணனுக்குப் புருசோத்தம தீர்த்தரின் குகையில் உபநயனம் ஆயிற்று. சேசகிரியப்பாவும் அவன் மனைவியும் தோட்டத்தைக் குத்தகைக்கு விட்டுவிட்டு மடத்தில் தங்கினர். இலக்குமிநாராயணன் வயது வளரவளரப் பெரும் பண்டிதன் ஆனான். சுவர்ணவர்ண தீர்த்தர் வயது முதிர்ந்த பிறகு சீரங்கத் தலத்திலேயே தங்கி இருந்தார். தம் நிலையில் இலக்குமிநாராயணனை வைக்க

வேண்டும் என்பதற்கு அவனது பெற்றோர்கள் மறுக்கவில்லை. அவனது மனம் துறவறத் திலேயே நிலைத்திருந்தது. தன் குலத்தில் பிறந்தவனுக்குப் புகழ் வருகின்றது என்ற காரணத்தால் சேசகிரியப்பா அதற்கு ஒப்புதல் தந்தான். சுவர்ணவர்ண தீர்த்தர் இலக்குமி நாராயணனைத் துறவி யாக்கினார். அன்று மாடுமேய்ப்பவர் கூட்டத்தில் இருந்த அவன், இன்று இலக்குமிநாராயண யோகி ஆனான்.

மடத்தின் பீடத்தில் அமர்ந்த பிறகு இலக்குமி நாராயண யோகிகளின் புகழ் நூறு மடங்கு ஆயிற்று. இராகவேந்திர மடத்தைச் சார்ந்த திரு விபுதேந்திரருடன் யாத்திரை செல்லும் நல்லவாய்ப்பு கிடைத்ததும் அவர் புகழ் நாடு முழுவதும் பரவியது. யாத்திரை சென்று கொண்டிருந்த இருவரும் சாதுர்மாசிய விரதத்தை மேற்கொள்ள கிருஷ்ணா நதிக்கரையில் உள்ள கொப்ரா என்னும் நரசிம்மத் தலத்தில் தங்கினர். கொப்ரா என்பது ராயசூர் மாவட்டத்தில், தேவகிரி தாலுக்காவில் உள்ளது. இதே சமயத்தில் உத்தராதி மடத்தின் இரகுநாத தீர்த்தரும் கெபாப்ராவிற்கு வந்தார். இலக்குமி நாராயண யோகியின் புலமையை ஒருமுறை சோதித்துப் பார்க்க எண்ணிய இரகுநாத தீர்த்தர் நியாயசுதேயிலிருந்து கடினமான வாக்கியம் ஒன்றைக் கொடுத்து விளக்கம் தருமாறு கூறினார். இலக்குமி நாராயண யோகிகள் நியாயசுதே என்னும் நூல் முழுமைக்கும் புதிய முறையில் விளக்கம் கூறினார். இரகுநாத தீர்த்தர் இலக்குமி நாராயணரைப் போற்றினார். இலக்குமி நாராயண யோகி, "வெறும் புலமையால் என்ன பயன் ? தாங்கள் சிரிபாதமாக உள்ளீர்கள். என்னைப் போன்ற இளந் துறவிகளைப் புகழாதீர்கள்'' என்றார். அதற்கு இரகுநாத தீர்த்தர், "நாங்கள் வெறும் சிரிபாதங்கள், நீங்கள் எங்களைப் போன்ற சிரிபாதங்களுக்கு அரசர்: சிரிபாதராசர் இதற்கு இராமரே சாட்சியாக உள்ளார்'' என்றார். விபுதேந்திரர் இரகுநாதர் கூறியது முற்றும் உண்மை என்றார். அன்று முதற்கொண்டே இலக்குமிநாராயண யோகி சிரிபாதராயர் என்னும் பெயருடன் மிகப் புகழ் பெற்று விளங்கத் தொடங்கினார்.

சிரிபாதராயர் யாத்திரையை முடித்துக் கொண்டு திரும்பிய சில நாட்களுக்குள் சுவர்ணவர்ண தீர்த்தர் பிருந்தாவனத்தர் ஆனார். பதுமநாப தீர்த்தர் மடத்தின் முழு அதிகாரமும் சிரிபாதராயர்க்கு

ஆயிற்று. பதுமநாபதீர்த்தரின் மடம் முள்பாகலில் இப்போதுள்ள மடமாகும்.

சிரிபாதராயர் மடத்தின் பொறுப்பை ஏற்றதும், பெரும் புலமையால் மதத்தின் கொள்கைளைப் புரிய வைக்க இயலாது, கீர்த்தனைகளின் வாயிலாகவே பாமரர் புரிந்து கொள்ள இயலும் என்பதை உணர்ந்தார். அக்காலத்தில் பண்டிதர்கள் வடமொழியையே மதித்தனர். மக்கள் பேசும் மொழிகளில் உரையாடுவதுகூடத் தவறு என்று எண்ணினர். மதத் தொடர்பான செய்திகளுக்கு விளக்கம் கேட்டுத் தெரிந்து கொள்வது என்பது பொது மக்களுக்கு அரியதாக இருந்தது. இசையுடன் பாடவேண்டுமாயின் வடமொழிப் பாடல்களையே பாடினர்.

இத்தகைய காலத்தில் சிரிபாதராயரைப் போன்ற தாசர்கள் கன்னடப் பாடல்களை இயற்றி, தேவர்முன் பாடவைத்தனர் என்பது துணிவுமிக்க செயலாகும். சிரிபாதராயர் பிரமரகீதா, வேணுகீதா, கோபிகீதேகளை இயற்றிப் பூசை நேரத்தில் தேவர்முன் பாடச் செய்தார். அவர் பாடல்களைக் கேட்டு மனம் உருவாதவர் யார்? சில நாட்களில் இரவில் சிரிபாதராயரே பாடுவதற்குச் சந்நிதியில் நிற்பார். இவரோடு சேர்ந்து பாடிப் பாகவதர்கள் நடனம் ஆடினர். இந்த இனிய காட்சியைக் காண ஆயிரக்கணக்கில் மக்கள் கூடினர். அப்பொழுது சுவாமிகளின் வாயிலிருந்து புதுப்புது நாமாவளிகள் பிறக்கும். இவர் காலம் தொடங்கிக் கன்னட இலக்கியம் மதிப்பு பெறத் தொடங்கியது.

கி.பி. 1471இல் சாளுவ நரசிம்மராசன் திருப்பதி அர்ச்சகர்கள் சிலரை அவர்கள் செய்த தீமைகளுக்காகக் கொன்றான். நரசிம்மன் தீயவரைத் தண்டித்ததாக நினைத்தாலும், பிரமஅத்தி ஆயிற்றே என்று மனம் வருந்தினான். பிரமஅத்தியை நீக்குமாறு நரசிம்மராசன் சிரிபாதராயரை வணங்கி வேண்டினான். சிரிபாதராயர் அவனது சந்திரகிரியில் வந்து தங்கினார். பல சாந்திகளைச் செய்வித்தார். பிரம அத்தி களங்கத்தை நீக்கினார். சுவாமிகளின் புலமை, பண்பு, உபதேச மொழிகளில் மனத்தைக் கொடுத்த அரசன் அவரைத் தனது அரண்மனையில் தான் அமரும் அரியணைமீது அமர்வித்தான். அரியணையில் அமர்ந்திருந்தபோது அவர் முத்துக் கவசத்தையும், தலையில் இரத்தின கிரீடத்தையும் அணிந்திருந்தார் என்று அவர்தம் சீடராகிய வியாசராயர் ஒருபாடலில் கூறியுள்ளார்.

சிரிபாதராயர் வடநாட்டு யாத்திரை செய்துவிட்டு முள்பாகலுக்குத் திரும்பவேண்டும் என்று நிச்சயித்தார். நரசிம்மராசனின் பொருளுதவி யும் அவரது காசி யாத்திரைக்குக் கிடைத்தது. அவருடன் கற்றோரும் பொதுமக்களும் சென்றனர். காசியிலிருந்த பண்டிதர்கள் அவரை மதிக்கவில்லை. ஆழ்ந்த கல்வியறிவு இல்லாத காரணத்தால் பாகவத தர்மம் பற்றிப் பேசுவதாகக் கூறினார். இக்கருத்தைச் சுவாமிகள் போக்கக் கருதினார். அந்தப் பண்டிதர்களைச் சுவாமிகள் வாதிட அழைத்தார். காசியின் அரசனே நீதிபதியாக அமர்ந்தான். தோற்றவர் வென்றவரின் ஆசிரமத்தைத் தழுவவேண்டும் என்று பணயம் கூறப்பட்டது. சுவாமிகள் வாதில் வென்றார். பண்டிதர்கள் துறவுக்கோலத்தை மேற்கொண்டனர். அவர்மீது தீயசக்திகளை ஏவினார். சுவாமிகள் அயக்ரீவ மந்திரத்தை உச்சரித்து அந்தத் தீயசக்திகளை வென்று, தீமையிலிருந்து தப்பினார். இவ்வாறு அவர் வடநாட்டில் பல கற்றோர் அவைகளில் வாதில் வென்று, முள்பாகலுக்குத் திரும்பினார்.

முள்பாகலில் இருந்த ஏழைச் சீடர்கள் அவர் காசி முதலான எல்லாத் தலங்களுக்கும் யாத்திரை சென்று திரும்பிய விவரங்களைக் கேட்டு மகிழ்ந்தனர். அவர்கள், "நீங்கள் பெரிய சுவாமிகள், தங்களுக்கு எல்லாத் தலங்களின் தரிசனம் கிடைக்கும். எங்களுக்குத் தங்கள் தரிசனமே கங்கையாடல் ஆகும். ஆயின் உண்மை கங்கையை ஒரு முறையாவது காண வேண்டும் என்னும் ஆசை உள்ளது. தலைக் காவிரியில் நீராட இயலாத எமக்குக் கங்கையாடல் எவ்வாறு கிடைக்கும்? தாங்களே எங்களை யாத்திரை செய்விக்க வேண்டும். இம்மை மறுமை இன்பங்களைப் பெறச் செய்ய வேண்டும்" என்று பணிவுடன் வேண்டினர்.

இரக்கம் மிகுந்த சுவாமிகள் "உங்களுக்குக் காசி செல்லும் சக்தி இல்லை. அடியார்க்கு இரங்கும் பாகீரதி நீங்கள் இருக்கும் இடத்திற்கே வருவாள். உட்கார்ந்த இடத்திலிருந்தே காசி யாத்திரை செய்யலாம். கங்காதேவி அருள் தருவாள். நாளை விடியற்காலையில் கங்கையைப் பூசை செய்வதற்காக நரசிம்ம தீர்த்தத்திற்கு வாருங்கள். உங்கள் விருப்பம் நிறைவேறும்" என்று திருவாய் மலர்ந்தருளினார். ஏழைகள் மகிழ்ச்சியில் மிதந்தனர். அப்பொழுது தொடங்கி நரசிம்ம தீர்த்தத்திற்கு வரத் தொடங்கினர். மங்கலப் பொருள்களயும் பூ பழங்களையும் வைத்துக்கொண்டு பசனை செய்தவாறு இரவு முழுவதும்

கண்விழித்திருந்தனர். கங்காவதாரத்தைப் பாராயணம் செய்தனர். கங்காலகரியும், கங்கா அட்டகமும் ஓதினர். கங்கையின் நீர் வெண்மை நிறம், குளத்தின் நீர் கருப்பு நிறம். குளத்தின் நீர் வெண்மை ஆகிப் பொங்கிப் பெருகின் கங்கை வந்தாள் என்று பொருள் என்று எண்ணினர்.

இரவு நீங்கிக் காலை வந்தது. சிரிபாதராயர் காலைக் கடன்களை முடித்துக் கொண்டு நரசிம்ம தீர்த்தத்திற்கு வந்தார். வந்தவர் நரசிம்ம தீர்த்தத்தின் ஈசான்ய மூலையில் அமர்ந்து கங்கையைத் துதித்தார். தீடீரென்று மேகம் சூழ்ந்ததுபோல் ஆயிற்று. எங்கும் இருள் நிறைந்தது. எல்லாரும் காணுமாறு குளத்தின் ஈசான்ய மூலையிலிருந்து வெண்மையான நீர் வரத் தொடங்கிப் பெருகத் தொடங்கியது. குளத்தில் நீர் நிரம்பியது. சிரிபாதராயர் அசைவின்றித் துதித்தவாறிருந்தார். அவர்க்கு அமர்ந்த இடத்திலேயே கங்கையாடல் ஆயிற்று. கங்கையை எல்லாரும் பூசித்தனர். சுவாமிகளின் ஆணைப்படி எல்லாரும் 'அரிஓம்' என்று ஓதியவாறு கங்கையில் நீராடினர். புண்ணியம் நிறைந்தவர் ஆயினர். சுவாமிகள் மூன்று நாட்கள் விழா கொண்டாடினார். இன்றும் நரசிம்ம தீர்த்தத்தின் ஈசான்ய மூலையில் மூழ்கிக் கங்கையாடிய பயனைப் பெறுகின்றனர்.

சுவாமிகளைப் பற்றிய மற்றொரு செய்தியையும், வியாசராயர் தம் கீர்த்தனையில் கூறியுள்ளார். சுவாமிகள் எங்கிருந்தாலும் அறுபது வகையான மரக்கறி உணவைத் தயாரித்து அதை அரிக்கு நைவேத்தியம் செய்து தாம் உண்டு வந்தார். இதைக் கண்ட பொறாமை உள்ளம் உடைய சிலர், "துறவிக்கும் இந்த இனிய உணவிற்கும் என்ன தொடர்பு" என்று எள்ளி நகையாடினர். சிரிபாதராயர் உண்ட உணவைத் தம் வயிற்றிலிருந்து வெளியே கொண்டு வந்து காட்டினார். அவ்வுணவு சீரணிக்காமல் அப்படியே பசுமையாக இருந்தது. இதனைக் கண்ட பொறாமைக்காரர்கள் மன்னிக்க வேண்டினர்.

வியாசராயர் பாலகனாக இருந்தபோது ஒருநாள் புருசோத்தம தீர்த்தரின் குகையில் உறங்கிக் கொண்டிருந்தார். அப்போது அவரை ஒரு மலைப்பாம்பு விழுங்கப் பார்த்தது. சிரிபாதராயர் பாம்புமொழியில் அந்த மலைப்பாம்புடன் உரையாடி அவரை ஆபத்திலிருந்து விடுவித்தார்.

வியாயராயர் மீது சுவாமிகள் வைத்திருந்த அன்பைக் காண்போம். ஒருநாள் சிரிபாதராயர் பூசை புரியுமாறு வியாசராயரிடம் கூறினார். பூசைக்கு அமர்ந்த வியாசராயர் ஒவ்வொரு பெட்டியாகத் திறந்தார். பெட்டிகளில் ஒன்று பல ஆண்டுகளாக யாராலும் திறக்கப்படாமல் இருந்தது. வியாசராயர் அந்தப் பெட்டியை மிக எளிதில் திறந்தார். அந்தப் பெட்டியைத் திறந்ததும் அதிலிருந்து வேணுகோபாலன் வெளிப்பட்டுக் குழலூதியவாறு ஆடத் தொடங்கினான். அதனைக்கண்ட வியாச ராயரும் சாலிக்கிராமம் இரண்டினைத் தாளங்களாகத் தட்டியவாறு தம்மை மறந்து ஆடத் தொடங்கினார். இதைக் கண்ட சீடர்கள் சுவாமிகளிடம் தெரிவித்தனர்.

உடனே சுவாமிகள் அந்த இடத்திற்கு வந்தார். வியாசராயர் தம்மை மறந்து ஆடிக்கொண்டு இருப்பதைக் கண்டார். அவர் எதிரில் வேணுகோபாலன் ஆடுவதையும் கண்டார். சுவாமிகளைக் கண்டதும் வலது காலின்மேல் இடது காலை ஊன்றி அபூர்வமான நிலையில் நின்றான். சுவாமிகள், "வியாசராயரே! தாங்கள் புண்ணியம் நிறைந்தவர். பீமா நதிக்கரையில் கிடைத்த இரண்டு பெட்டிகளில் ஒன்றிலிருந்து வெளிப்பட்டு ரங்கவிட்டலன் எனக்கு முன்பே அருள் செய்தான். மற்றொரு பெட்டியிலிருந்த வேணுகோபாலன் இன்று வரை யார்க்கும் அருள் செய்யவில்லை. இன்று வெளிப்பட்டுத் தங்களுக்கு அருள் செய்துள்ளான். இந்த அபூர்வமான விக்கிரகத்தைத் தாங்களே பூசித்து வாருங்கள்" என்று பாராட்டினார். சுவாமிகள் தம் கீர்த்தனையில் வியாசராயரைப் பதுமநாபனின் தாசர்களில் உமக்குச் சமமானவர் யார் (இதிரதாவனு நினகெ தரெயொளு பதுபநாபன தாச பரம உல்லாச) என்றும், ஆயிரம் நாவை உடைய ஆதிகேடனே கொண்டாட வேண்டும் வியாச ராயரின் துறவுத் திறத்தை (சாவிர சிக்வெகளுள்ள சேஷனென கொண்டாடபேகு வியாசமுனிராயர சந்யாசதிறவ) என்றும் புகழ்ந்து பாடியுள்ளார்.

சிரிபாதர் நிகழ்த்தியுள்ள அற்புதங்கள் அனைத்தும் உண்மை என்று அவைகளை நேரில் கண்ட அவரது சீடராகிய வியாசராயரே பாடியிருப்பதால் அறியலாம். இப்போது அப்பாடலைக் காண்போம்.

## பல்லவி

மகிமெ சாலதெ இஷ்டே மகிமெ சாலதே.

## அனுபல்லவி

அகிசயனன ஒலுமெயிந்த
மகியொளொம்மெ சிரிபாதராயர.

## சரணம்

முத்தின கவச மேல்குலாவி
ரத்ன கெத்தித கர்ண குண்டல
கஸ்தூரி திலக சிரிகந்த லேபன
விஸ்தரதிந்த மெரெது பருவ. (1)

விப்ரஅத்ய தோச பரலு
சப்ர சங்கோதகதி களெயெ
அப்ர புத்தரு தூஷிசெ கேரெண்ணெ
கப்பு வசனவ சுப்ர மாடித (2)

அரிகெ சமர்ப்பிசித நானா
பரிய சாககனனு புஞ்சிசெ
நரரு நகலு சிரிகிருஷ்ணன
கருணதிந்த அசிய தோரித (3)

ஒருநாள் சிரிபாதராயர் சீடர்களுக்குப் பாடம் போதித்துக் கொண்டிருந்த போது மேலிருந்து பூக்கள் உதிர்ந்தன. நிமிர்ந்து நோக்கிய அவர் தமக்குச் சிரிபாதராயர் என்னும் சிறப்பைத் தந்த இரகுநாததீர்த்தர் வைகுந்த யாத்திரை செய்து கொண்டிருப்பதைப் பார்த்தார். நமக்கு என்று அப்பேறு கிடைக்கும் என்று நோக்கிய அவர்க்கு இரகுநாத தீர்த்தர் விரைவில் கிடைக்கும் என்று சைகை காட்டிச் சென்றார். குருவாகிய தம்மையே வியந்து பார்த்துக் கொண்டிருந்த சீடர்களிடம் நடந்ததை விளக்கினார். இரகுநாத தீர்த்தர் வைகுந்தம் சென்றது மார்கழி மாதம் பகுள பாட்டிமை நாள் ஆகும்.

அப்பேற்றைச் சுவாமிகள் இரண்டரை ஆண்டுகளுக்குப் பிறகு ஆனிமாதம் சுத்த சதுர்தசி நாளில் பெற்றார். அதாவது கிபி. 1404இல் அவதரித்த அவர் கி.பி. 1502இல் பிருந்தாவனத்தர் ஆனார்.

சிரிபாதராயர் சன்னப்பட்டினத்தில் உள்ள அப்பூரில் பிறந்து வளர்ந்து, சீரங்கத்தில் சுவர்ணவர்ண தீர்த்தரிடம் துறவுநிலை பெற்று, பல ஆண்டுகள் அங்கு மடத்தின் தலைவராக விளங்கி, பிறகு முள்பாகலில் வந்து நிலைத்தார். நமது ஆறாவது வயதிலேயே துறவியாகி, தொன்றுற்றெட்டு ஆண்டுகள் வாழ்ந்து துவைத மதத்திற்குப் பெருந்தொண்டு ஆற்றியுள்ளார். அவர்தம் பிருந்தாவனம் முள்பாகலில் உள்ளது. ஆண்டுதோறும் அவர்க்குத் தேர்த்திருவிழா நடைபெறுகின்றது.

கீர்த்தனை பாடுபவர்கள்,

“நமக சிரிபாதராசாய நமஸ்தே வியாசயோகினே
நமக புரந்தரார்யாய, விஜயராஜாய தே நமக”

என்று சிரிபாதராயரை முதலில் வணங்குவதை இன்றும் காண்கிறோம்.



